# ஹிமாலயா புக்கே

அளிக்கும் மிகுந்த
புதுமைப் பொலிவை
– நீங்கள்
நாள் முழுதும்
உணரலாம்!




# ஹிமாலயா புக்கே

டாய்லெட், டால்கம்
பவுடர்கள்



# கல்கி

## பொருளடக்கம்

செப்டம்பர் 9, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

பாரதி மலர்



# செப்டம்பர் 20-முதல்

சிந்தை, அணு, ஒவ்வொன்றும் சிலிர்க்கவைக்கும்
செந்தமிழ்க் குடும்பச் சித்திரம்!



எஸ்.கே.பிக்சர்ஸ்

# குலதெய்வம்

வசனம்
**மாறன்** எம்.ஏ.,

டைரக்ஷன்
**கிருஷ்ணன் பஞ்சு**

ஸ்டூடியோ
**ஏவிஎம்**



மலர் 16 } இதழ் 6

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

{ துன்முகி ஆவணி 25

# பாட்டுக்கு ஒரு பாரதி

தமிழ்ப் பெரு மக்கள் போற்றும் செப்டம்பர் மாதம் பதினொன்றும் தேதி நாளை மறுதினம் வருகிறது.

பாரதநாடு சுதந்திரம் பெற்ற ஆகஸ்டு பதினைந்தாம் தேதியை எவ்விதம் பாரத மக்கள் மறக்க முடியாதோ, அதுபோலவே செப்டம்பர் பதினொன்றும் தேதியைக் குறிப்பாகத் தமிழ்ப் பெருமக்கள் மறக்க முடியாது.

சந்திர சூரியர் உள்ளளவும், சுதந்திரம் உள்ளளவும், தெய்வத் தமிழ் உள்ளளவும் கவிச் சககரவர்த்தி சுப்பிரமணிய பாரதியார் அமரரான அந்தப் புனிதத் திரு நாளை யாராவது மறக்க முடியுமா?

கடவுள் சிருஷ்டியில் மணம் மிக்க மலர்களைக் காட்டிலும் உயர்ந்தவை வேறு எதுவும் இல்லை என்று ஒரு பிரபல தத்துவ ஞானி கூறியுள்ளார்.

கண்களுக்கும், கருத்துக்கும், கற்பனைக்கும் ஒருங்கே விருந்து அளிப்பது மலர்கள்தான் என்பது அவரது சித்தாந்தம்.

நீல வானத்தில் சுடர் விட்டு மின்னும் நட்சத்திரங்களைப் போல் பூமியில் மலர்கள் விதம் விதமான வண்ண நட்சத்திரங்களாக விளங்குகின்றன.

ஆம், நட்சத்திரங்கள் இல்லாத வானத்தை எவ்விதம் நாம் கற்பனை செய்து கொள்ள முடியாதோ, அதுபோலவே மலர்களற்ற பூமியை நாம் கற்பனை செய்து கொள்ள முடியாது.

இவ்வளவு உயர்ந்த மலர்களுடன்கூடிய பூமாலையைக் காட்டிலும் மகோன்னத ஸ்தானத்தை வகிக்கும் ஒன்றும் இந்த உலகில் இருக்கத்தான் செய்கிறது.

அதுதான் பாமாலை என்பதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

பூமாலைக்கு இராத சில விசேஷ குணங்கள் பாமாலைக்கு இருப்பதே இதன் உயர்வுக்குக் காரணமாகும்.

நேரம் ஆக ஆகப் பூமாலை வாடி விடுகிறது; அதன் மணமும் குன்றி விடுகிறது.

ஆனால், சிறிதும் வாடாமல், மணம் குன்றாமல், காலத்தை எதிர்த்து நிற்கும் சக்தி பாமாலைக்குத்தான் உண்டு.

அப்படிப்பட்ட சிறந்த பாமாலைகள் சிரஞ்சீவித் தன்மை பெற்றிருப்பதுபோல், அந்தப் பாமாலைகளை இயற்றிய கவிகளும் சிரஞ்சீவித் தன்மை பெற்றிருக்கிறார்கள்.

அதனாலேயே சிரஞ்சீவியான கவிச் சக்கரவர்த்தி பாரதியாரின் புகழுடலைத் தமிழ்ப் பெருமக்களான நாம் போற்றிப் பணிகின்றோம்.

அந்த மகான் புகழுடல் எய்திய நன்னாளைத் தெய்விகக் கவியின் திருநாளாக, பாட்டுக்கு ஒரு பாரதியின் தினமாகக் கொண்டாடுகின்றோம்.

எக்காலத்தும் பெருமை குன்றாத அவரது பாமாலைகளைப் படித்தும், பாடியும், கேட்டும் பரவசம் அடைகிறோம்.

பாரதியார் புனைந்த, சிரஞ்சீவித் தன்மை வாய்ந்த பாப்பாப் பாட்டின் வண்ண ஓவியமே பாரதி மலராகத் திகழும் இந்தக் "கல்கி" இதழ் அட்டையை அலங்கரிக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

வாழ்க பாரதி நாமம்! வாழ்க தமிழ் மொழி!

# பிரிவினைக்குப் பின்னால்...












புது ஏற்பாட்டின்படி சிறிய ராஜ்யங்களாகப் பிரிந்து விட்டால் இப்படி யெல்லாம் விபரீதங்கள் நேரலாம் என்று நமது சைத்திரிகர் கற்பனை செய்கிறர்.












# புது பைசா முறை

விலைவாசிகள் ஏறுவதும் இறங்குவதும் பல காரணங்களைப் பொறுத்தது. ஆனால் இப்போது ஒரு புதிய விசேஷம் என்னவென்றால் பாரத சர்க்காரினுடைய புது நாணய முறையும் ஒரு காரணமாக ஏற்பட்டு ஏழைகளின் வியாபாரத்தில் கஷ்டமும் நஷ்டமும் உண்டாக்கி வருகிறது. தசாம்ச புது நாணய முறையைப் பற்றி ராஜாஜி பல முறை சொல்லி வந்தது என்னவென்றால் தசாம்ச முறையைக் கீழிருந்து மேலுக்குக் கொண்டு போக வேண்டுமே தவிர ரூபாயை அப்படியே வைத்துக் கொண்டு அதற்குக் கீழ் செலாவணியிலுள்ள பணத்தை மாற்றி, ஏழைகளுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பதே. ஏழைகளுடைய வியாபாரமெல்லாம் அணா பைசா மூலம் நடந்தது. சர்க்கார் இப்பொழுது கொண்டுள்ள முறையின்படி ஒரு கட்டுப் புல்லின் விலை, ஒரு படி மோரின் விலை, அரை வீசை உருளைக் கிழங்கின் விலை இவை யெல்லாம் இறங்கியும் ஏறியும் வர வேண்டியதாக இருக்கின்றன. ரூபாயைப் பத்தில் ஒரு பாகமாகப் பிரிப்பதும் நூற்றில் ஒரு பாகமாகப் பிரிப்பதும் சர்க்கார் கணக்கில் எளிதாக இருக்கலாம். ஆனால் சில்லறைக் கடையிலும் சந்தையிலும் விற்பவர்களுக்கும் வாங்குபவர்களுக்கும் எளிதல்ல. உடலுக்குத் தகுந்தபடி அளவெடுத்துச் சொக்காயைத் தைக்க வேண்டுமே தவிர சட்டையின் அளவுக்கு ஏற்றபடிகையும் கழுத்தும் சரிப்படுத்த முடியாது. ஆனால் தற்போது பண முறையில் பின்னமும் மிச்சமும் ஏற்பட்டு அதை ஒழுங்குபடுத்தப் பண்டத்தின் விலையையே மாற்ற வேண்டியதாக இருக்கிறது. இதற்கு உதாரணமாக உடனடியாக ஒரு நிகழ்ச்சியை ஆராய்ந்து பார்க்கலாம்.

சர்க்கார் ஒரு சில்லறைக் கடை வைத்திருக்கிறார்களல்லவா! ஒன்பது பைசாவுக்கு ஒரு கார்டும், இரண்டணாவுக்கு ஒரு கவரும் இது வரையில் கொடுத்து வந்தார்கள். இது தவிர ஒன்றரையணா தபால், ரிஜிஸ்தர் செய்தல், மணியார்டர் முதலிய விஷயங்கள் உண்டு.

இவற்றில் எல்லாம் ஏழைகள் கொடுக்க வேண்டிய கட்டணம் ஓரளவு அதிகமாகிறது. பின்னக் கணக்கில் ஏற்படும் சிக்கல்களை யெல்லாம் ஏழைகளின் மேல் போட்டு விடுவதே முறை என்பது சர்க்காரின் தீர்மானம். அதாவது ஒரு கார்டின் விலை கொஞ்சம் ஏறும். கவரின் விலையும், எல்லாக் கட்டணமும் கொஞ்சம் ஏறும். எல்லாச் சில்லறைக் கடைகளிலும் சந்தைகளிலும் எந்தப் பண்டத்தின் விற்பனையிலும் இப்படி நடைபெறும்.

ராஜாஜியின் யோசனையை ஒப்புக் கொண்டிருந்தால் இதெல்லாம் நடந்திராது. எல்லாச் சில்லறை விலைகளும் முன் போலவே இருந்திருக்கும். ரூபாய்க்குப் பதில் ஒரு ரூபாய் ஒன்பதணா புது வெள்ளி ரூபாயும் காகித ரூபாயும் ஏற்படுத்தி விட வேண்டியதாக இருந்திருக்கும். அதாவது 64 காலணா கொண்ட பழைய ரூபாய்க்குப் பதிலாக நூறு காலணா கொண்ட ரூபாயாக இருந்திருக்கும். கார்டின் விலையும், கவரின் விலையும், ஒன்றரையணா தபால் கடித விலையும் எல்லாத் தபால் கட்டணங்களும் முன் போலவே இருந்திருக்கும். உயர்த்த வேண்டிய அவசியம் இருந்திருக்காது.

பத்து ரூபாய் நோட்டுகளும் நூறு ரூபாய் நோட்டுகளும் புதிதாக அச்சிட வேண்டியதாகுமே என்று சில விஷயமறியாதவர்கள் ராஜாஜியின் முறைக்கு ஆட்சேபித்து வந்தார்கள். இப்பொழுது எல்லாத் தபால் ஸ்டாம்புகளும் கார்டுகளும் கவர்களும் புதிதாக அச்சிட வேண்டியதாகிறது என்பதை அவர்கள் காணவில்லை. அதனாலேதான் இந்த ஆட்சேபனையைத் இல்லி நிதிமந்திரி சொல்லவில்லை. விஷயம் தெரியாதவர்கள்தான் இதைச் சொல்லி வந்தார்கள்.

# கொள்ளை கொண்ட கோர விபத்து

இம் மாதம் முதல் தேதியன்று இரவு சிகந்திராபாத்—த்ரோணசலம் ரயில் பாதையில் ஏற்பட்ட கோர விபத்து எல்லாருடைய மனமும் துடிக்கும்படி செய்து விட்டது. அவ் விபத்தில் நூறு பேர்களுக்கு மேல் மாண்டதுடன், பலர் காயமடைந்தனர். இஞ்ஜினின் ஒரு பகுதியும் மற்றும் இரு வண்டிகளும் பாலத்திலிருந்து ஆற்று வெள்ளத்தில் விழுந்து நொறுங்கி விட்டதே விபத்தின் கோரத்துக்குக் காரணமாகும். இரவு நேரமானதாலும் மழை பெய்து கொண்டிருந்ததாலும் விபத்து பற்றிய செய்தி அதிகாரிகளுக்கு உடனே கிடைக்க முடியாமற் போயிற்று. பிரேதங்கள் ஆற்று வெள்ளத்தில் நாலு ஐந்து மைல்களுக்கு அப்பால் கூட அடித்துக் கொண்டு போகப் பட்டன வெனில், மேற்படி விபத்தின் கொடுமையை எவரும் கற்பனைசெய்து கொள்ளலாம்.

இந்த செப்டம்பர் மாதம் ஹைதராபாத்துக்கு யமனாக இருந்து வருவதாகவும், முந்திய வருஷங்களிலும் இந்த மாதத்தில்தான் ரயில் விபத்துகளும் வெள்ளத்தின் கொடுமையும் பல உயிர்களைப் பலி கொண்டு விட்டதாகவும் செய்திகள் கூறுகின்றன. ஆனால், இத்தகைய விபத்துகளுக்கு நாளையோ, மாதத்தையோ குறை கூறுவது அர்த்தமற்ற காரியமாகும்.

ரயில் விபத்துக்குக் காரணமாக இருந்த பாலம் 1923-ம் ஆண்டில் கட்டப்பட்டதென்று கூறப்படுகிறது. சென்ற ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று அது முழுந்ததாயும் அதைப் பழுது பார்த்ததால் ரயில் போக்குவரத்து 24 மணி நேரம் தாமதப்பட்டதென்றும் தெரிகிறது. முப்பத்து மூன்று ஆண்டுகளுக்குமுன் அமைக்கப்பட்டுச் சமீபத்தில் பழுதான அந்தப் பழைய பாலத்தில், பெரு மழை பெய்யும் போது பரிசோதனை

செய்யாமல் மறுபடியும் ஏன் ரயில் வண்டி செல்ல அனுமதித்தார்கள்? இந்தக் கேள்விக்கு ரயில் அதிகாரிகள் சரியான பதில் கூறியாக வேண்டும்.

இப்போது நடந்துள்ள விபத்தைப் பற்றிக் கூடிய சீக்கிரம் விசாரணை நடைபெறுமென்று தெரிகிறது. விபத்துக்குக் காரணமாக இருந்த பாலம் அடிக்கடி அதிகாரிகளால் பரிசோதிக்கப்பட்டு வந்ததா என்பது விசாரணையின் பலனாக வெளியாகும் என்று கருதுகிறோம். தவிர, பெருமழை பெய்து கொண்டிருக்கும்போது, பாலத்தைப் பரிசோதனை செய்ய ஏன் தகுந்த முறைகள் கைக்கொள்ளப் படவில்லை என்பதும் தெரிய வேண்டும். மேற்படி பிராந்தியத்தில் அடிக்கடி ரயில் விபத்துகள் நடந்தும் கூட, இஞ்ஜினுக்கு அடுத்துப் பிரயாணி வண்டிகளை ஏன் இணைத்திருந்தார்கள் என்பதையும் அதிகாரிகள் பரிசீலனை செய்ய வேண்டும்.



சமீபத்தில் அமெரிக்காவின் சுப்ரீம் கோர்ட்டு நீதிபதி ஸ்ரீ எர்ல் வாரன் பாரத நாட்டில் சில நாட்கள் தங்கிப் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தார். ராஜாஜி, நேருஜி முதலிய தேசத் தலைவர்களைச் சந்தித்துப் பாரதத்தைப் புரிந்து கொள்ள முயன்றார். அதன்பயனாக உலக சமாதானம் ஏற்பட நேருஜி – ஐஸன்ஹோவர் சந்திப்பு ஏற்பட்டேயாக வேண்டும் என்று வற்புறுத்தினார். நேருஜியை அமெரிக்கப் பொது மக்களின் சார்பில் அமெரிக்காவுக்கும் வரவேற்று விட்டுச் சென்றார்.

இஞ்ஜினுக்குப் பின் இரண்டு மூன்று கூட்ஸ் வண்டிகளை இணைத்திருந்தால், இவ்வளவு அதிகமான உயிர்ச் சேதம் ஏற்பட்டிராது. சரக்குகளைக் காட்டிலும் மனிதஉயிர் பெரும் பொக்கிஷம் போன்றது என்பதை அதிகாரிகள் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இப்போது நடைபெறப் போகும் விசாரணையின் பலனாக, இனிமேலாவது இத்தகைய கோர விபத்துகள் தவிர்க்கப்படுவதற்கான வழி வகைகளைக் கைக்கொள்வார்கள் என்று நம்புகிறோம். விபத்தில் மாண்டவர்களின் குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஹிந்தியா? ஆங்கிலமா?

நேருஜி அவர்கள் சமீபத்தில் ஆங்கிலத்தை நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக ஹிந்தி பாஷையைக் கல்வி விஷயத்தில் புகுத்திவிட முடியாது என்று கண்டிப்பாகப் பேசியிருக்கிறார். கண்ணை மூடிக்கொண்டு காட்டுப் பாதையில் நடப்பது போலாகும் முரட்டுத்தனமாக ஆங்கிலத்தை ஒதுக்கிவிடுவது. நூற்றைம்பது வருஷங்களாக நாம் கற்ற பாஷையைத் திமிர் என்று ஏன் தள்ளிவிட வேண்டும்? நாம் கற்றது நம்முடைய சொத்தாகுமே தவிர ஆங்கிலேயருடைய சொத்தல்ல. கள்ளுக் கடையில் சம்பாதித்த பணமும் கூடப் பிதுரார்ஜித சொத்தென்று மக்கள் வைத்துக் கொள்ளுகிறார்களே தவிர வேண்டாம் என்று விட்டுவிடுவதில்லை. உலகத்தில் எல்லாம் ஆங்கில மொழியும் ஆங்கில நூல்களும் மதிக்கப்பட்டு வருகின்றன. நம்முடைய அரசியல் நிர்ணயச் சட்டமுங்கூட ஆங்கிலத்தில்தான் அசல் எழுதப்பட்டது. பிறகு மூக்கைப் பிடித்துத்தான் ஹிந்தியில் மொழிபெயர்க்கப்

பட்டது. நம்முடைய சட்டங்கள் இப்போது அவசரமாகச் செய்யப்படும் வாரிசுரிமைச் சட்டம், சுவிகாரச் சட்டம், ஜீவனாம்சச் சட்டம் எல்லாமே ஆங்கிலத்தில்தான் விஷய நிர்ணயம் செய்யப்பட்டு வருகின்றன.

ஆங்கில ஒழிப்புக்கு விரோதமாக நேருஜி அவர்கள் சொன்னதை வரவேற்கிறோம். மத்திய சர்க்கார் நடவடிக்கைகளும் ராஜ்யாந்திர நடவடிக்கைகளும் ஆங்கிலத்திலேயே நடைபெற்று வந்தால் இந்தியாவில் எல்லாப் பகுதியினருக்கும் சௌகரியமாக இருக்கும். ஹிந்தி மொழியைப் பலாத்காரமாக மக்கள் படித்து முடிப்பதற்கு முன் புகுத்தினால் தென்னாட்டிலுள்ளவர்கள் கஷ்டத்துக்கும், நஷ்டத்துக்கும் ஆளாவார்கள். இத்தகைய பிரச்னைகளில் சிறுபான்மை, பெருந்தொகை என்கிற நியதி செல்லாது. கோடிக்கணக்கான மக்கள் தென்பாகத்தில் இருக்கிறார்கள். அவர்கள் பேசுவது ஹிந்தியல்ல. அவர்களை "நீங்கள் சிறு தொகையார்" என்று சொல்லி "உங்களுக்கும் ஹிந்தியே அரசியல் மொழி" என்று உத்தரவிடுவது அநீதியாகும். ஆங்கிலத்தைப் படிக்க அளவில் ஹிந்தி மொழியைப் படித்துத் தேர்ச்சி அடையும் வரையில் ஹிந்தியைப் புகுத்தலாகாது. 'இனிக்க மாட்டோம்' 'இனிக்க மாட்டோம்' என்று சொல்லிக் கொண்டே இனிக்கும் ஏற்பாடு நடைபெற்று வருகிறது. நேருஜி அவர்கள் பேசியதில் இதைப்பற்றி ஏதும் சொல்லவில்லை. ராஜ்ய நிர்வாகத்தில் அந்த அந்தப் பிரதேச மொழி நடைமுறையில் இருக்கலாம் என்பது நியாயமானது. அதைப் பற்றிச் சந்தேகமோ, ஆட்சேபணையோ எழுவதற்கில்லை. ராஜ்யாந்திர பாஷை ஹிந்தியா அல்லது ஆங்கிலமா அல்லது, இரண்டுமா என்பதே கேள்வி!

## மாஜி மந்திரியின் எச்சரிக்கை!

பிரிட்டிஷ் சர்க்கார் எகிப்து சர்க்காரை மிரட்டியே தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொண்டுவிடலாம் என்று நினைக்கிறார்கள். ஆனால் பிரிட்டிஷ் பத்திரிகைகளில் நியாய உணர்ச்சியும் முன் யோசனையுமுள்ள பல பத்திரிகைகள் பிரிட்டிஷ் சர்க்காரின் இந்தப் போக்கைக் கண்டித்து எழுதி வருகின்றன. எல்லாவற்றிற்கும் மேலாக முன்பு தொழிற் கட்சி ஆட்சி செலுத்திய போது ராணுவ மந்திரியாக இருந்த திரு ஜான் ஸ்ட்ராசி என்பவர் சொல்லி விருப்பது ரொம்பவும் கவனிக்கத் தக்கது. அவர் கூறுவதாவது:

"பிரிட்டிஷ்சர்க்கார் பிரஞ்சுத் துருப்புக்களை சைப்ரஸ் தீவுக்கு வரவழைத்திருக்கிறார்கள். இன்றைய பிரிட்டிஷ் சர்க்கார் செய்துவரும் முட்டாள்தனமான காரியங்கள் எல்லாவற்றையும்விட மிகவும் அபாயகரமானது இது.

"பிரஞ்சு சர்க்கார் அரபு மக்களின் சுதந்திர உணர்ச்சியை ஒடுக்க முயன்று வருகிறார்கள். முக்கியமாக அல்ஜீரிய மக்களின் சுதந்திரப் போராட்டத்தை நசுக்க முயன்று வருகிறார்கள். அதில் அவர்கள் நிச்சயம் வெற்றி பெறப் போவதில்லை. ஆனால் நாம் அனாவசியமாகப் பிரஞ்சுக்காரர்களுடன் சேர்ந்து கொண்டிருப்பதால், கெட்ட பெயர் சம்பாதித்துக் கொள்வது தவிர வேறு ஒரு லாபமும் அடையப் போவதில்லை.

"நமக்குத் தேவையான பெட்ரோல் எண்ணெயைப் பாதுகாத்துக் கொள்ளவே நாம் இம்மாதிரி சிக்கல்களில் அகப்பட்டுக் கொள்ள நேரிடுவதாகக் கூறப்படுகிறது. ஆனால் பெர்ஸிய வளைகுடாவுக்கும் அட்லாண்டிக் மகா சமுத்திரத்துக்கும் இடையிலுள்ள ஒவ்வொரு அரபு தேசத்தோடும் சண்டை போட்டுக் கொண்டு வந்தால், பிறகு நமக்கு யார் பெட்ரோல் எண்ணெய் தருவார்கள்?

"ஆகவே, இந்தச் சண்டை நின்றேயாக வேண்டும். எகிப்துப் படையை நம்மால் தோற்கடிக்க முடியும்தான். சந்தேகமில்லை. அதற்குப் பிறகு என்ன செய்யப் போகிறோம்? நாம் என்ன ஒவ்வொரு அரபு தேசத்தையும் கைப்பற்றிக் குடியேறப் போகிறோமா? ஈராக்கிலிருந்து மராக்கோ வரையிலுள்ள ஒவ்வொரு தேசத்தையும் பிடிப்பதா நமது நோக்கம்?

"அது நோக்கமென்றால் நமக்கு இருபது டிவிஷன் படைகள் தேவை. ஆனால் நம்மிடம் இருப்பதோ ஐந்து டிவிஷன்கள்தான். இதை வைத்துக் கொண்டு இப்படிப்பட்ட காரியங்களில் ஈடுபடுவது போன்ற பைத்தியக்காரத்தனம் வேறில்லை.

"சூயெஸ் சம்பந்தமாக லண்டன் மகாநாட்டில் செய்யப்பட்ட தீர்மானங்களை நாஸர் ஏற்கவில்லை என்பதற்காக எகிப்துமீது பிரிட்டன் போர் தொடுக்குமானால் அது பெரும் அநியாயமாகும்; அநீதியாகும்.

"நாஸர் சூயெஸ் கால்வாயை மூடிவிட்டிருந்தாரானால் நாம் கோபப்படுவதற்கு நியாயமுண்டு. ஆனால் அதற்கு மாறாக சூயெஸ் கால்வாயை நல்ல முறையில் நிர்வகிக்க பைலட் படகு செலுத்துபவர்களை நியமனம் செய்ய முயன்று வருகிறார்" என்று கூறியிருக்கிறார்.

ஆகஸ்டு மாதச் சிறுகதைப் போட்டி

நூறு ரூபாய் பரிசு பெற்ற "சாகாத வாழ்வுக்குச் சஞ்சீவி"

என்னும் கதை அடுத்த இதழில் வெளியாகிறது

பரிசு பெற்றவர்: கோமதி சுப்ரமணியம், 35, மார்க்கெட்டை, கண்டோன்மெண்ட், திருச்சி

ராஜாஜி அவர்களின் பேத்தியும், ஹிந்து பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஸ்ரீ வி. ஆர். கிருஷ்ணஸ்வாமியின் புதல்வியுமான சௌபாக்கியவதி ஞானுக்கும், ஸ்ரீ என். ஸ்ரீராமாச்சாரியாரின் புதல்வர் சிரஞ்சீவி கோவிந்தராஜன் பி. எஸ்ஸி., பி. இ.க்கும் திருப்பதி திருச்சானூரில் சென்ற 2-ம் தேதி வெகு சீரியமுறையில் திருமணம் நடைபெற்றது. சென்னை கவர்னர் ஸ்ரீபிரகாசா திருமணத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்தார். மிக நெருங்கிய உறவினர்களும், உற்ற நண்பர்களும் திருமணத்துக்கு வந்திருந்தார்கள். திருமணத்தில் ராஜாஜி அவர்கள் திருமண் தரித்து மணமக்களைப் பழம் பண்பாட்டின் முறையிலே ஆசீர்வதித்தார். வாழ்க, மணமக்கள்!



# தமிழ்த்

[பத்து ஆண்டுகளுக்கு முன்பு எட்டையபுரம் பாரதி விழாவில் ஓர் ரகசியம் வெளியாயிற்று. பாரதியார் நமது அருமைத் தலைவர் ராஜாஜிக்கு மிகுந்த அன்புடன் விருந்திட்டு உபசரித்திருக்கிறார். அதுமட்டுமன்றி 'ராஜாஜி கேட்டார்' என்பதற்காகக் கவியரசர் ஒரு பாட்டு எழுதியும் அனுப்பினர். இதை யறிந்தபோது ராஜாஜி பாக்கியசாலியா அல்லது பாரதியார் பாக்கியசாலியா என்ற ஐயம் உண்டாயிற்று. இப்பொழுது அவர்கள் இருவரையும் விட நாமே பாக்கியசாலிகள் என்பது உறுதியாயிற்று. ராஜாஜிக்கு அன்று பாரதியார் எழுதியனுப்பிய கவிதான் இது. —ஆசிரியர்]

ஆதிசிவன் பெற்றுவிட்டான்—என்னை
ஆரிய மைந்தன் அகத்திய னென்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்து—நிறை
மேவும் இலக்கணஞ் செய்து கொடுத்தான்

மூன்று குலத்தமிழ் மன்னர்—என்னை
மூண்டநல் லன்போடு நித்தம் வளர்த்தார்;
ஆன்ற மொழிகளி னுள்ளே—உயர்
ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்

கள்ளையுந் தீயையுஞ் சேர்த்து—நல்ல
காற்றையும் வானவெளியையுஞ்சேர்த்துத்
தெள்ளு தமிழ்ப்புலவோர்கள்—பல
தீஞ்சுவைக் காவியஞ் செய்து கொடுத்தார்

சாத்திரங்கள் பல தந்தார்—இந்தத்
தாரணியெங்கும் புகழ்ந்திட வாழ்ந்தேன்;
நேத்திரங் கெட்டவன் காலன்—தன்முன்
நேர்ந்த தனைத்துந் துடைத்து முடிப்பான்

நன்றென்றுந் தீதென்றும் பாரான்—முன்பு
நாடும் பொருள்கள் அனைத்தையும் வாரிச்
சென்றிடும் காட்டுவெள் ளம்போல்—வையச்
சேர்க்கை யனைத்தையுங்கொன்று நடப்பான்

மகாகவி பாரதியார்

# தாய்

கல்விப் பருவத்தில் அந்நாள்—என்றன்
காதில்விழுந்த திசைமொழி யெல்லாம்
என்னென்னவோ பெயருண்டு—பின்னர்
யாவும் அழிவுற் றிறந்தன—கண்டீர்

தந்தை அருள்வலியாலும்—முன்பு
சான்ற புலவர் தவவலி யாலும்
இந்தக் கணமட்டுங் காலன்—என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சியிருந்தான்

இன்றொரு சொல்லினைக் கேட்டேன்!—இனி
ஏது செய்வேன்? என தாருயிர்மக்காள்!
கொன்றிடல் போலொரு வார்த்தை—இங்கு
கூறத் தகாதவன் கூறினன் கண்டீர்

"புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்!
மெத்த வளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை

சொல்லவும் கூடுவதில்லை—அவை
சொல்லுந்திறமை தமிழ்மொழிக் கில்லை;
மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்"

என்றந்தப் பேதை உரைத்தான்—ஆ!
இந்த வசையெனக் கெய்திடலாமோ!
சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள்யாவுங் கொணர்ந்திங்குசேர்ப்பீர்!

தந்தை யருள்வலி யாலும்—இன்று
சார்ந்த புலவர் தவவலியாலும்
இந்தப் பெரும்பழி தீரும்—புகழ்
ஏறிப் புவிமிசை யென்று மிருப்பேன்.





## 10. இது என்ன வாழ்க்கை?

நிர்மலாவின் விருப்பப்படியே சொக்கன் விஜயரங்கனுக நடிக்க ஒப்புக் கொண்டு விட்டான். சொக்கனுக்கு அதனுல் ஆபத்து விளையுமோ என்று பயமாக இருந்தது. அதற்காக நிர்மலா அவன் மனத்தைத் திருப்பப் பல ஆசை வார்த்தைகளைக் கூறினுள். ''நமக்கு வரக்கூடிய அதிர்ஷ்டத்தை யாரும் தடுத்து விட முடியாது. நாம் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொண்டால் எந்தவித ஆபத்தும் வராது. நீங்கள் எஜமானியம்மாளிடம் பேசும்போதெல் லாம் எப்படி நடந்து கொள்ள வேண் டும் என்பதை நான் உங்களுக்குச் சொல்லி விடுகிறேன். நான் வைத்திருக் கும் கடிதங்களையும் தஸ்தாவேஜிகளையும் உங்களிடம் காட்டுகிறேன். அவைகளை யெல்லாம் நீங்கள் பாருங்கள்'' என்று சொல்லிக் கொண்டே போனுள். சொக்கன் அவள் பேச்சிலே மதி மயங்கிப் போயிருந் தான். அவள் மேலும் தொடர்ந்து பேசினுள். ''இப்பொழுது என்னி டமே ஆயிரக்கணக்கான ரூபாய் பெறுமான நகை கள் இருக்கின்றன. நமக்கு எத்தகைய அபா யம் ஏற்படுவதாக இருந் தாலும் இந்தப் பணத் தைக்கொண்டு அவை களிலிருந்து மீண்டு விட லாம். ஆனுல் அந்த அஞ் சுகம் இருக்கிறுளே அவளை நினைத்தால்தான் எனக்குச் சிறிது பயமாக இருக்கிறது.....'' என் றுள் நிர்மலா, சிறிது கொஞ்சுதலோடும் சஞ் சலத்தோடும்.

அஞ்சுகத்தின் 'பெய ரைச்சொன்னதும் சொக் கன் மறுபடியும் விழிப் படைந்தவனுகி விட் டான். என்ன மதிமயக் கம்...? அவன் இவ்வளவு நேரம் அவளை மறந்து விட்டான் அல்லவா? அவன் சிறிது பரபரப் போடு, ''அவளைப் பற்றி என்ன?'' என்று கேட்டான்.

''என்னவா? அவளை வெளியே விட்டு வைத் திருப்பதுதான் நமக்குப் பெரிய ஆபத்து. அவளுக்குப்பத்திரமான இடம் ஜெயில்தான். நாம் அவளை அங்கு அனுப்பத்தான் முயற்சி செய்ய வேண்டும். அதுதான் நமக்கு நல்லது'' என்றுள் அவள் அமைதி குலையாமல்.

''அது கூடாது. அவளால் நமக்கு என்ன ஆபத்து வந்து விடப் போகிறது? அப்பாவிப் பெண் — அநாதை. அவள் எதுவும் செய்ய மாட்டாள். பயப் படாதே'' என்றுன் சொக்கன்.

''அப்படி நினைக்காதீர்கள். அவள் எது வும் செய்வாள். நாம் இப்படி வெளியில் ஒரு அபாயத்தை வைத்துக் கொண்டு எந்தக் காரியத்தையும் துணிந்து செய்ய முடியாது. அது நமது காரியங்களுக்கு இடையூருக முடிந்தாலும் முடியும். என்னைப் பற்றிய ரகசியத்தைத் தெரிந்து கொண்ட யாரையும் நான் சாதாரண



மாக விட்டு வைத்திருக்க மாட்டேன். நாம் அவளை ஜெயிலுக்கு அனுப்பாத வரையில் நம்முடைய திட்டங்கள் நடக்காது. அதாவது லட்சக்கணக்கான ரூபாய்களை நாம் இழக்க நேரிடும். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்றான் அவன் அன்போடு கூடிய கண்டிப்பான குரலில்.

சொக்கன் மனத்தில் அஞ்சுகத்தின் மேல் வைத்திருந்த காதலும் பாசமும் எழுந்து போராடத் தொடங்கின. ஆனால் அவன் அதிக நேரம் மனத்தோடு போராடவில்லை. அவனுக்குத் தெரியும்,



அஞ்சுகத்தின் மேல் அவனுக்கு அன்பு இருந்தாலும் அவள் தன் தொழிலுக்கு ஏற்ற இணையில்லை என்று. எதற்காக அவளை நினைத்துக் கொண்டு அவன் சஞ்சலமடைய வேண்டும்?

நிர்மலா அவன் முகத்தில் எத்தகைய எண்ணம் ஊசலாடுகிறது என்பதை அறிந்து கொள்கிறவள் போல் பார்த்தாள். கடைசியில் நிர்மலா அவனிடமிருந்து எதை அறிந்து கொள்ள விரும்பினாளோ அதை அவன் சொல்லி விட்டான். அஞ்சுகம் எங்கே பதுங்கி இருக்கிறாள் என்பதை அறிந்து கொள்ள நினைத்தாள் நிர்மலா. அவள் இருக்கும் இடத்தை அவன் சொல்லி விட்டான் 'அங்காடிப்பேட்டை வெற்றிலைக் கடைக் குப்பம்மாவின் வீடு-' இது போதாதா? அது நிர்மலாவின் மனத்தில் நிற்காமல் மறந்து போய் விடுமா? அவள் மோக வெறி நிறைந்த தன் கண் பார்வையை மறுபடியும் அவன் மீது வீசினாள். அந்தப் பார்வைதான் அவனை இந்த உலகத்தையே மறக்கும்படி செய்து விடுகிறதே?

** ** **

மாலை வேளை: இருள் சூழும் நேரம். அஞ்சுகம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவளாகக் குப்பம்மாள் வீட்டுச் சமையல் அறையில் தனிமையில் உட்கார்ந்திருந்தாள். வெளியில் வெற்றிலைப் பாக்குக் கடையில் யாரோ குப்பம்மாவிடம் அதட்டி மிரட்டிப் பேசிக் கொண்டிருந்தது அவள் காதில் விழுந்தது. போலீஸ்! ஆம்; யாரோ போலீஸ்காரர்தான், குப்பம்மாவை ஏதோ மிரட்டி விசாரித்துக் கொண்டிருந்தார். அவருக்குக் குப்பம்மா ஏதோ குழைந்து குழைந்து சமாதானம் சொல்லிக் கொண்டிருந்தாள். அஞ்சுகத்துக்கு நன்றாகத் தெரிந்து விட்டது; தன்னைப் பற்றித்தான் குப்பம்மாவை மிரட்டி யாரோ போலீஸ்காரர் விசாரித்துக் கொண்டிருக்கிறார் என்று. அவள் உடல் நடுங்கியது. உள்ளம் சோர்ந்தது. சே! இது என்ன வாழ்க்கை? மறுபடியும் போலீஸ் — நியாயஸ்தலம் — விசாரணை- சிறைச்சாலை! எல்லாம் அவள் கண்களில் வந்து நின்றன.

என்ன பயங்கரம்! ஒரு அபலைப் பெண்ணின் வாழ்க்கை இப்படித்தானா? அவளுக்கு வேறு கதியே இல்லையா? அவள் நிரபராதி என்று சொல்லி உலகத்தில் அவளையும் நன்கு வாழ வைக்க மனிதர்களே கிடையாதா? 'இப்படிப் பட்ட நிலையில் எதற்காக உயிர் வாழ வேண்டும்?' என்று அவளுக்கு ஒருகணம் தோன்றியது. மறுகணம் சொக்கனின் ஞாபகம் அவளுக்கு வந்தது. அவன் எப்படியும் தன்னைக் கைவிட மாட்டான். தன்னைக் காப்பாற்றாமல் இருக்க மாட்டான் என்ற தைரியமும் நம்பிக்கையும் அவளுக்கு ஏற்பட்டன. தன்மீது

அவன் எத்தகைய காதல் கொண்டிருக்கிறான் என்று அவள் அறிந்திருக்கிறாளல்லவா? தான் போலீஸ்காரர்களிடம் சிக்கிக் கொண்டாலும் தன்னை எப்படியாவது அவன் மீட்டுவிடுவான் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்பட்டது. ஆனால் சட்டென்று அவள் மனம் மாறியது. 'அவன் எப்படித் தன்னை மீட்க முடியும்?—அதுவும் போலீஸ்காரர்களிடம் சிக்கிக் கொண்ட பின்! நான் நிரபராதி என்று நிரூபிக்க அவனிடம் என்ன ஆதாரம் இருக்கிறது? அவன் வார்த்தை நீதி ஸ்தலத்தில் ஏறுமா? எனக்காக வழக்காட அவனிடம் பணத் தெம்பு தான் உண்டா? அவனும் காலாடிகளின் ரகத்தில் சேர்ந்தவன்தானே? அவன் வார்த்தைகளை உலகம் நம்புமா?' வர வர அவளுடைய நம்பிக்கையில் தளர்ச்சி ஏற்பட்டது. போலீஸாரிடம் சிக்கிக் கொண்டால் தண்டனைக்குத் தப்ப முடியாது என்றுதான் அவளுக்குத் தோன்றியது. எப்படியாவது போலீஸ்காரர்கள் கண்களில் படாமல் தப்பிச் சென்று வேறு எங்கேனும் கண் மறைவாக இருப்பதுதான் அவளுக்கு நல்லதென்று அப்பொழுது பட்டது. போலீஸாரிடமிருந்து தப்பித்து எங்கேயாவது கண் மறைவாக இருந்து கொண்டு, அப்புறம் சொக்கனைச் சந்தித்து, பகிரங்கமாக - குற்றமற்றவளாக உலகத்தில் வாழ ஏற்பாடுகள் செய்து கொள்ளலாம் என்று அவள் நினைத்தாள்.

வாசலில் போலீஸ்காரர்களின் சத்தம் அதிகமாகியது. ஏதோ ஒரு சிறு கூட்டம் கூடி விட்டது போலவும் தோன்றியது. வாசல் கதவை வெளிப்புறமாகக் குப்பம்மா பூட்டி வைத்திருக்கிறாள் என்று அஞ்சுகத்துக்கு நன்றாகத் தெரியும். 'அங்கு அவள் இருப்பது வெளியே வேறு ஒருவருக்கும் தெரியக் கூடாது' என்று சொக்கன் குப்பம்மாவிடம் எச்சரிக்கை செய்து விட்டுப் போய் இருக்க வேண்டும். அன்று சொக்கன் அவ்விடத்தை விட்டுப் போனதிலிருந்து குப்பம்மா அஞ்சுகத்தை மிகவும் பத்திரமாகக் காப்பாற்றுவதிலேயே கவனம் செலுத்தி வந்ததையும் அஞ்சுகம்



அறிவாள். தன்னைக் காட்டிக் கொடுக்காமல் இருக்க வேண்டியதற்காகக் குப்பம்மாள் வெளியே போலீஸ்காரர்களிடம் தர்க்கம் செய்து கொண்டிருக்கிறாள் என்பதையும் அஞ்சுகம் உணர்ந்தாள். ஆனால் போலீஸாரிடம் எவ்வளவு நேரம்தான் குப்பம்மாவால் தர்க்கம் செய்து கொண்டிருக்க முடியும்? சில நிமிடங்களில் வாசற் கதவு பூட்டை உடைத்துக் கொண்டாவது போலீஸார் உள்ளே புகுந்து வீட்டைச் சோதனை போடாமல்இருக்கமாட்டார்கள் என்று அஞ்சுகத்துக்குப் பட்டது.



பாரதத்தின் சுப்ரீம் கோர்ட் நீதிபதியாக நியமிக்கப்பட்டுள்ள ஜஸ்டிஸ் திரு பி. கோவிந்த மேனன்

''யாரோ ஒருத்தி எங்கோ திருடி விட்டு ஓடினான் என்றால் அவள் எங்கள் வீட்டில்தான் வந்து ஒளிந்திருக்க வேண்டுமா? மடியில் கனம் இருந்தால் அல்லவா வழியில் பயம். நான் ஏதோ கண்ணியமாக ஒரு பெட்டிக் கடை வைத்து வயிறு பிழைக்கிறேன்'' என்றாள் குப்பம்மாள்.

''ஏ, புள்ளே! உன் கண்ணியம் கௌரவம் எல்லாம் எங்களுக்குத் தெரியும். அதிகமாய்ப் பேசாதே. நீ கண்ணியமானவளாய் இருந்தால் வீட்டுச் சாவியை இப்படிக் கொடு'' என்றார் ஒரு போலீஸ்காரர்.

''வீட்டைத் திறக்கிறாயா? இல்லாவிட்டால் உன்னைச் சரியானபடி உதைத்து உன்னிடமிருந்து சாவியை வாங்கி நாங்கள் வீட்டைத் திறந்து பார்க்க வேண்டுமா? அவளை நீதான் இங்கு பதுக்கி வைத்திருக்கிறாய்! நீ சாதாரண உருட்டல் மிரட்டல்களுக்கெல்லாம் படியமாட்டாய்போல் இருக்கிறது. வீணாக அடி வாங்காதே!'' என்று ஒரு போலீஸ்காரர் குப்பம்மாளை மிரட்டும் குரல் தெளிவாக அஞ்சுகத்தின் செவிகளில் விழுந்தது.

''எனக்கு இந்தத் திருட்டுச் சாவகாசமே கிடையாது. வீட்டுச் சாவி என்னிடம் இருந்தால் அப்பொழுதே உங்களிடம் கொடுத்திருப்பேன். என் மருமகன் சாவியை எடுத்துக் கொண்டு கடை வீதிக்குத் தொலைந்து போய் விட்டான். உங்களுக்கு என்னைத் தெரியாதா?'' என்றாள் குப்பம்மா நயமாக.

''உன்னை நன்றாகத் தெரியும். நீ மகா சக்தியாச்சே. நீ இல்லாமல் உலகத்தில் எந்தத் திருட்டுத் தொழில் நடக்கும்? அம்மா, பரதேவதை. நீ இல்லாமல் எது நடக்கும்?'' என்றார் ஒரு போலீஸ்காரர்.



வடக்கு ரயில்வேயில் பிரதம பாதுகாப்பு அதிகாரியாக நியமிக்கப் பட்டுள்ள திரு எஸ்.பார்த்தசாரதி ஐயங்கார்



சென்னை நகரத்தின் போலீஸ் கமிஷனர் பதவியை ஏற்றுள்ள திரு எப். டபிள்யூ. அருள்

'' வீணாகப் பரிகாசம் செய்யாதீங்க. உங்களுக்குஎவ்வளவு காரியங்களிலே உளவு சொல்லி இருக்கிறேன். இதை நான் மறப்பேனா? உங்கள் தயவில்லாமல் நான் உலகில் வாழ முடியுமா? என் மேலே கோபப்படாதீங்க! ஒரு சோடாக் கலர் கொடுக்கிறேன், குடிங்க! வெற்றிலைப் பாக்கு தரேன், போட்டுக்குங்க! என் மேல் மாத்திரம் சந்தேகப்படாதீங்க! அந்தத் திருட்டுப் பெண் எங்கே இருக்கிறாள் என்று இரண்டு நாட்களில் உங்களுக்கு நானே உளவு

சொல்கிறேன்!'' என்று மிகவும் வினயமாகக் கூறினாள் குப்பம்மாள்.

''உன் யோக்கியதை யெல்லாம் எனக்குத் தெரியும். உனக்கு வேண்டாதவர் களை மாட்டி வைக்கிறதுக்கு வேண்டுமானால் நீ நிறைய உளவு சொல்லுவே. இந்த விஷயம் அப்படி இல்லே. இதில் நாங்கள் உன்னை நம்பமாட்டோம். இப்பொழுதே வீட்டைச் சோதனை போட்டாகணும். உன்னிடம் சாவி இல்லாவிட்டால் கவலையில்லே. பூட்டை உடைத்துச் சோதனை போட எத்தனை நேரம் ஆகும்?'' என்றார் ஒரு போலீஸ்காரர்.

''ஐயோ! நல்ல பூட்டை உடைக்காதீங்க. புண்ணியவான்களே! தயவு பண்ணுங்க'' என்று குப்பம்மாள் கெஞ்சி மன்றாடும் குரல் கேட்டது. அடுத்த கணம், ''திருட்டு நாயே! ஒதுங்கி நில். டேய், நாணாத்தி எட்டு. இவளைப் பிடித்து அந்தண்டை தள்ளு'' என்ற அதிகாரக் குரலும், அதைத் தொடர்ந்து வாசற் கதவு பூட்டை எதைக் கொண்டோ உடைக்கும் பலமான சத்தமும் கேட்டன.

அஞ்சுகத்தின் உடல் பதறியது. அவள் புழுப்போல் துடித்தாள். அவள் மூச்சே நின்று விடும் போல் இருந்தது. அப்பொழுது தப்பித்து எங்கேனும் உயிரை விட்டாலும் விடலாமே தவிர, போலீஸார் கையில் சிக்கக் கூடாது என்று அவள் தீர்மானித்துக் கொண்டாள். அந்தத் தடுமாற்றமான நேரத்திலும் அவளுடைய புத்தி மிகவும் சூடிகையாக வேலை செய்தது. வாசற் கதவு வெளிப்புறமாகப் பூட்டப்பட்டிருந்ததே, தவிர கொல்லைப்புற வழியாகத் தப்பித்துக் கொள்வதற்கு மார்க்கம் இருக்கிறது என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். அதற்கு மேல் அவள் தாமதிப்பாளா? கொல்லைப் புறத்திலும் போலீஸார் காவல் இருந்தால் என்ன செய்வது? இந்தச் சமயத்தில் அதைத் தவிர வேறு மார்க்கமே இல்லையோ? 'கடவுளுக்குக் கருணை இருந்தால் என்னைக் காப்பாற்றட்டும்' என்று எண்ணிக் கொண்டு உடல் பதட்டமும் அவசரமும் கொண்டவளாகக் கொல்லைப் பக்கம் ஓடினாள்.

உண்மையாகவே கடவுள் அவள் மேல் சிறிது கருணையோடுதான் இருந்திருக்க வேண்டும். கொல்லைப்புறக் கதவை அவள் சுலபமாகத் திறக்க முடிந்தது. போலீஸார் எவரும் அங்கு காவல் நிற்பதாகவும் தெரியவில்லை. அவள் கொல்லைப்புற வாசற்படியைத் தாண்டி இருண்டிருந்த சந்து வழியாக வேகமாக நடந்தாள். பகல் வேளையில் அந்தச் சந்தை அவள் பார்த்திருப்பதால் அந்த அடையாளத்தைக் கொண்டு இரவு வேளையில் வழி தெரிந்து நடப்பது அவளுக்குச் சுலபமாக இருந்தது. எவ்வித மனித சஞ்சாரமும் இல்லாததினால் அவள் பயத்தோடும், நடுக்கத்தோடும் நெடுந் தூரம் வந்து விட்டாள். எப்படியோ தப்பி விட்டோம் என்ற ஆறுதலால் அவள் மனத்தில் இருந்த பீதியும், நடுக்கமும் ஓரளவு தணிந்து விட்டன. இனி எங்கேயாவது போய்த் தலை மறைவாக வாழ்ந்து விடலாம் என்ற நம்பிக்கை அவளுக்குஏற்பட்டது. இரவு வேளையில் அந்தச் சந்தில் பல சாக்கடைகளையும் குப்பை மேடுகளையும் தாண்டி அவள் நகரத்தின் பெரிய ரஸ்தாவை அடைந்தாள். ஜன நடமாட்டம் நிறைந்த அந்த ரஸ்தாவைத் தாண்டி எப்படிப் போகப் போகிறோம் என்ற திகில்தான் அவளுக்கு அதிகமாகியது. புடவைத் தலைப்பினால் தலையை முக்காடிட்டுக் கொண்டு விளக்கு வெளிச்சம் படாது நிழல் படிந்து கிடக்கும் ரஸ்தாவின் ஓரமாக அவள் நடந்தாள். அவள் ஏதேதோ எண்ணியபடியே மனம் தளராது வேகம் குறையாமல் நடந்து கொண்டிருந்தாள். இரண்டு புறங்களும் மரங்கள் அடர்ந்த சாலை அது. நெடுந் தூரத்துக்கு

அப்பால் தீபங்களின் ஒளி 'மினுக் மினுக்' என்று மின்னுவது அவள் கண்களுக்கு நன்றாகத் தெரிந்தன. அது ஏதோ ஒரு கிராமமாக இருக்க வேண்டும். அங்கு சென்றால் தலை மறைவாக வசிப்பதற்கு ஏதேனும் இடம் கிடைக்கும் என்று அவளுக்குத் தோன்றியது. அந்த இருண்ட பாறை நடுவிலே அவளைப் போன்ற இள மங்கை பயமில்லாது நடந்து வருவது கடினம்தான். ஒரு பெரிய ஆபத்திலிருந்து தப்பிய அவளுக்கு உலகத்தில் அதை விட வேறெதுவும் பயங்கரமாகத் தோன்றுதல்லவா?

இயந்திரப் பொம்மை போல் அதி வேகமாக நடந்து கொண்டிருக்கும் அவள் எதிரில் யாரோ ஒருவன் வந்து 'யாரது, நில்!' என்று அதட்டியதும் அவள் திகைப்படைந்து நின்று விட்டாள். அங்கும் போலீஸ்காரர்கள் வந்து விட்டார்களோ என்ற பயம் அவளுக்கு எழுந்தது. ஆனால் அந்த இருட்டிலும் தன்னை வழி மறித்து நின்றது போலீஸ்காரர்கள் அல்ல, வேறு யாரோ இருவர் என்பது அவளுக்குத் தெரிந்ததும் அவள் மனப் பதட்டம் சிறிது குறைந்தது. (தொடரும்)

# ஞானத்திருமகன் பாரதி

**— லால்குடி கிருஷ்ணமூர்த்தி —**

நாட்டிற்கு நல்லவை பாடினான் தமிழ்
    நாடெங்கும் சக்தியை ஊட்டினான் (தன்)
பாட்டிற்குள் பக்தியைக் கொட்டியே இந்தப்
    பாரெல்லாம் கோயிலாய்க் காட்டினான்.
வீட்டிற்குள் மங்கிய பெண்களின் நல்ல
    வீர உணர்ச்சியைத் தீட்டினான்
தோட்டிக்கும் மாநில மன்னர்க்கும் இங்கு
    தோழமை கூட்டினான் பாரதி!

பாருக்குச் சிவனைத் தந்தவள் இந்தப்
    பாரினை ஆட்டி அலைப்பவள்
யாருக்கும் அன்னையாய் நிற்பவள் அவன்
    ஆணைக்கு ஆடுவாள் சக்தியே.
நேருக்கு நேர் நின்று வாணியும் அவன்
    நேசத்தை நட்பினைக் கோருவாள்
போருக்கு அஞ்சிடும் பேடிகள் அவன்
    போதனை கேட்டபின் வீரராம்!

வானத்தின் அற்புதம் சொல்லுவான் அங்கு
    வாழும் கதிர்களைப் போற்றுவான்
மோனத்தின் இன்பம் நுகருவான் இடி
    மோதி முழங்கக் கூத்தாடுவான்
'ஞானத் திருமகன் பாரதி' அவன்
    நாவில் தெறிப்பது வேதமே (அக்)
கானத்தை எங்கும் பரப்பியே வரும்
    காலத்தில் நன்மைகள் காணுவோம்!






# FAMOUS *throughout* INDIA

சரித்திரப் புகழ் பெற்ற மாளிகைகள் அழகாலும் நீடித்திருக்கும் தன்மையாலும் எவ்வாறு தனிச்சிறப் புடன் விளங்குகிறதோ அதேபோல் சென்ற 80 வரு ஷங்களுக்கு மேலாக 'வெஸ்ட் எண்ட்' கடிகாரங்கள் இந்தியாவில் குன்றாப் புகழுடன் இருந்து வருகிறது.

அதிக விலையாலும் அல்லது குறைந்த விலையா லும் சரி, மிக்க தொழில் அனுபவம் வாய்ந்தவர் களால் தயாரிக்கப்பட்ட இந்தக் கடிகாரங்கள் சரி யான நேரம் காட்டுவதோடு நீடித்து நன்கு சேவை செய்கிறது. டயலின் மேல் "வெஸ்ட் எண்ட்" என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள்.



SECUNDUS TONNEAU
Everbright Steel ... Rs. 119
Rolled Gold, 20-Microns with Everbright Steel Back Rs. 135

**West End Watch Co.**

BOMBAY • CALCUTTA

# பாடுவோம் கொண்டாடுவோம்

பேராசிரியர் கல்கி

கனி ஒன்று கிடைக்குமானால், அதற்காகத் தனியே ஒரு விழாக் கொண்டாடலாம் என்று ரஸிக சிகாமணிகள் சொல்லுவார்கள்.

ஒரு கவிஞர் கிடைத்து விட்டால், அதற்காக எத்தனையோ விதமான எவ்வளவோ விழாக்கள் கொண்டாடலாம்.

ஒரு மகாகவி கிடைத்துவிட்டாலோ, அந்த நாட்டின் மக்கள் என்ன விதமான கொண்டாட்டம் நடத்துவது என்று தெரியாமல் திண்டாட வேண்டியதாகும்.

* * *

ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் ஒரு நாட்டில் ஒரு மகாகவி தோன்றக் கூடும் என்று இலக்கிய ஆராய்ச்சியாளரும் சரித்திரக்காரரும் திட்டமாய்க் கூறுகிறார்கள்.

குறைந்த பட்சம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இடையறாமல் தொடர்ந்து கலைகளும் இலக்கியமும் வளர்ந்து வந்த நாட்டிலேதான் மூன்று மகாகவிகள் வரிசைக் கிரமத்தில் தோன்றியிருக்க முடியும். தமிழ்நாடு அத்தகைய அதிர்ஷ்டம் வாய்ந்த நாடு. இந்த நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் திருவள்ளுவர் என்னும் மகாகவி தோன்றினார். சத்திய வேதம் என்று சொல்லத்தக்க தத்துவ ஒழுக்க நூலை அற்புத சக்தி வாய்ந்த கவிதையில் அமைத்துக் கொடுத்தார்.

வள்ளுவருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு கவிச் சக்கரவர்த்தி கம்பர் அவதரித்தார். உலகத்தில் வேறு எந்த நாட்டு எந்த பாஷைக் காவியத்துக்கும் மேம்பட்டது என்று சொல்லத்தக்க ராமாயண மகா காவியத்தைக் கன்னித் தமிழில் செய்தளித்தார்.



கவியரசர்

கம்பருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு, நம்முடைய காலத்தில், மகாகவி பாரதியார் தோன்றினார். எத்தனையோ நூற்றாண்டுகள் அடிமை இருளில் கிடந்த நாட்டுக்கும், செத்தவர்கள் போல் இருந்த நாட்டு மக்களுக்கும் புத்துயிர் தந்தார். தேச பக்தியையும் சுதந்திர தாகத்தையும் தமிழ் வெறியையும் தன்னம்பிக்கையுடன் கவிதை இன்பத்துடன் கலந்து மக்களுக்கு ஊட்டினார்.

பாரதியாரின் பாடல்கள் பலவற்றில் அதி ஆச்சரியமான தீர்க்க தரிசன சக்தியை நாம் காண்கிறோம். அவருடைய தீர்க்கதரிசன வாக்குகள் ஒவ்வொன்றாகப் பலித்து வருவதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறோம்.

பாரதியார் தம் காலத்தில் கண்ட தமிழ் மக்களைப் பற்றி அவ்வளவாக உற்சாகம் கொண்டு விடவில்லை. தமிழ் நாட்டு மக்களிடத்திலும் இந்திய மகா ஜனங்களிடத்திலும் பற்பல குறைகளைக் கண்டு நைந்துருகி நெஞ்சுருகி நின்றார்.

"நெஞ்சு பொறுக்குதில்லையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்!"

என்று மனம் பதறிக் கதறினார்.

"நெஞ்சில் உரமும் இன்றி
நேர்மைத் திறமும் இன்றி
வஞ்சனை செய்வாரடி—கிளியே
வாய்ச் சொல்லில் வீரரடி!"

என்று ஆத்திரத்தைக் கொட்டினார்.

ஆயினும் இத்தகைய நிலைமையைக் கண்டு விட்டு உற்சாகக் குறைவு அடைந்து விட்டாரா? அடியோடு நம்பிக்கை இழந்து விட்டாரா?

அவருடைய காலத்து 'அறிவாளி'கள் சிலரைப் போல், "இந்தத் தேசம் உருப்

படவாவது? இந்தியாவுக்கு விடுதலை யாவது!" என்று சொல்லிக் கொண்டு இருந்து விட்டாரோ! இல்லவே இல்லை.

அந்த நிலைமையில், அப்படிப்பட்ட மக்களுக்கு மத்தியில் இருந்து கொண்டு தீர்க்க திருஷ்டியுடன் வருங்காலத்தை நோக்கினார்.

"ஜயபேரிகை கொட்டடா!" என்று கம்பீரமாக முழங்கினார்.

"ஜயமுண்டு பயமில்லை மனமே—இந்த
ஜன்மத்திலே விடுதலையுண்டு நிலையுண்டு"

என்று கையடித்துச் சத்தியம் செய்து கொடுப்பது போல் உறுதி கூறினார்.

காரிருளுக்கு மத்தியில் பேரொளி பொங்கிவரும் அறிகுறிகளைக் கண்டார். அடிமைத்தனத்துக்கு மத்தியில் விடுதலையின் உதயப் பிரகாசத்தைக் கண்டு இரு கைகளையும் நீட்டி வரவேற்றார்.

இந்தியாவைப் பிடித்திருந்த பிடைகளும் இந்திய மக்களிடம் குடிகொண்டிருந்த இழி குணங்களும் அகன்று விடும் என்பதை உள்ளுணர்ச்சியினால் மகா கவி நிச்சயமாக அறிந்தார்.

"வலிமை யற்ற தோளினாய் போ போ போ
மார்பிலே ஒடுங்கினாய் போ போ போ"

என்ற பாடலில், அச்சம், மடமை, பலவீனம் முதலிய மக்களின் குறைபாடுகளை யெல்லாம் அடித்து விரட்டுவது போல் சபித்து ஓட்டினார்.

"வேறு வேறு பாஷைகள் கற்பாய் நீ
வீட்டு வார்த்தை கற்கிலாய் போ போ போ"

என்று தாய் மொழிப் பற்றில்லாதவர்களை நாடு கடத்தினார்.

"ஜாதி நூறு சொல்லுவாய் போ போ போ
தரும மொன்றியற்றிலாய் போ போ போ
நீதி நூறு சொல்லுவாய்—காசொன்று
நீட்டினால் வணங்குவாய் போ போ போ"

என்று மூட நம்பிக்கையாளரையும் சமூகத் துரோகிகளையும் அதட்டி அடித்தார்.

பின்னர், வருங்காலத்தில் வரப்போகும் உண்மையான பாரத ஜாதியை ஞானக் கண் கொண்டு பார்த்து சக்தி வாய்ந்த சொற்களினால் அற்புதமான கவிதை செய்து வரவேற்றார்:—

இளைய பாரதத்தினாய் வா வா வா
எதிரிலா வலத்தினாய் வா வா வா
ஒளியிழந்த நாட்டிலே—நின்றேறும்
உதய ஞாயிறொப்பவே வா வா வா
களையிழந்த நாட்டிலே—முன்போலே
கலை சிறக்க வந்தனை வா வா வா
விளையு மாண்பு யாவையும்
—பார்த்தன் போல்
விழியினால் விளக்குவாய் வா வா வா"

இப்படிப்பட்ட தீர்க்கதரிசனத்துடன் சுதந்திர பாரதத்தை அகக் கண்ணினால் கண்டு வரவேற்புக் கூறிய மகானுக்கு எத்தனை விழாக்கள்தான் நடத்தக் கூடாது? தினம் தினம் ஒரு கொண்டாட்டம் ஊரெங்கும் நாடெங்கும் உலகமெங்கும் நடத்தி மகிழலாமே?

# என் தங்தை

நாங்கள் திருவல்லிக்கேணிக்கு வந்தவுடன் ஸர் சங்கரன் நாயர் அவர்கள் என் தந்தையைச் சந்தித்தார். பின் என் தந்தையுடன் நெருங்கிப் பழக மிகவும் ஆவல் கொண்டார். என் தந்தை தமது கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அவருக்குச் சொல்வார். அதை அனுபவித்து ஆனந்தம் கொண்ட ஸ்ரீ நாயர் தாம் மீண்டும் இங்கிலாந்துக்குச் செல்லும் போது என் தந்தையையும் உடன் அழைத்துப் போவதாகக் கூறியிருந்தார். "பாரதி! உம் பெருமையை உணர்ந்து போற்ற நம் தாய் நாட்டாருக்குத் தோன்றுமளவும் நீர் அயல்நாட்டில் வசிப்பதே நலம்' என்பார் நாயர்.

பல பாஷைகளையும் எளிதில் கற்றுத் தேர்ச்சி யடைவதில் என் தந்தை மிக்க வல்லவர். சிறு பிராயம் முதல் தமிழே பயின்று வந்த என் தந்தை, பின் திருநெல்வேலிக் கல்லூரியில் ஆங்கிலமும் கற்றார். காசிக்குச் சென்று படிக்க நேர்ந்தபோது சம்ஸ்கிருதமும் ஹிந்தியும் கற்று வல்லவரானார். பின்னர், புதுவையில் பிரெஞ்சு பாஷையும், வங்காளி பாஷையும் படித்தார்.

முதல் உலக யுத்தம் தொடங்கியதும் ஜெர்மன் பாஷை கற்றார். அவர் லத்தின் பாஷையில் ஏற்கெனவே பயிற்சி பெற்றிருந்தார். உருது பாஷையை வட நாட்டில் வசித்தபோது கற்றிருந்தார். சென்னையில் வசித்த நாளில் தெலுங்கு கற்றுக் கொண்டார். கடைசி நாளில் அரபி பாஷையும் மலையாளமும் கற்கத் தொடங்கினார்.

என் தந்தையின் முகமதிய நண்பரொருவர் முகமதிய வேதமான "குர் ஆனை"த் தமிழில் மொழிபெயர்த்துத் தரும்படி கேட்டார். எனவே, என் தந்தை குர் ஆனை நன்றாகப் படித்துத் தெரிந்து கொண்டபின் மொழி பெயர்க்க ஆரம்பித்தார்.

—ந. சகுந்தலா பாரதி

# மின்னெழுத்து



சென்னை நகரிலும், தமிழ் நாட்டின் வேறு பல இடங்களிலும் ஒரு அதிசயக் காட்சியைக் கண்டு வருகிறோம். தெரு வீதிகளிலும், இன்னும் பல இடங்களிலும் மணிக்கணக்காக மக்கள் பெட்டி படுக்கைகளுடனும் மனைவி மக்களுடனும் கூட்டம் கூட்டமாக நின்று கொண்டிருப்பார்கள். இதற்குக் காரணம் எல்லாருக்கும் தெளிவாகத் தெரிந்திருக்கும். ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குப் போவதற்காக, இல்லையானால் ஒரு ஊரில் இருந்து நெடுந் தூரத்தில் இருக்கும் இன்னொரு ஊருக்குப் பிரயாணம் செய்வதற்காக அவர்கள் பஸ்ஸை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான்.

மக்கள் நீண்ட நேரம் நின்று தவம் செய்த பிறகு ஒரு பஸ் வரும். அதில் ஏற்கெனவே மக்கள் புளிமூட்டைகள் போல அடைபட்டுக் கிடப்பார்கள். அதில் மேலும் பல பிரயாணிகளை வைத்து அடைப்பார்கள். அதுவும் அந்தக் கண்டக்டர் புண்ணியவான் தயவு வைத்துச் செய்யும் மாபெரும் உதவியாக மக்கள் நினைத்து மகிழவேணும்.

ஆனால் சென்ற மாதம் மதுரைக்குப் போய் அங்கு சில தினங்கள் தங்கியிருந்தபோது அந்த மாதிரி—ஆனால் கொஞ்சம் வித்தியாசமான காட்சியைக் கண்டேன்.

மதுரைமா நகரம் பல விதங்களில் பெயர் பெற்றது. மீனாட்சி அம்மன் திருக் கோயில், திருமலை நாயக்கர் மகால், தமிழ்ச் சங்கம் முதலியவைகளால் மதுரை அகில உலகப் புகழ் பெற்றிருக்கிறது என்பது சரித்திரம் தெரிந்த எல்லாரும் அறிவார்கள். அப்பேர்ப்பட்ட மதுரைமா நகரத்தில் நடந்த ஒரு தொழில் அதிபரின் திருஉருவச் சிலை திறப்பு விழாவுக்குப் போயிருந்தேன். அப்போதுதான் மேலே சொன்ன, தமிழ்நாட்டில் இதர இடங்களில் காணமுடியாத காட்சியைக் கண்டேன்.

மதுரைமா நகரின் வீதிகளில் ஒவ்வொரு பஸ் நிற்கும் இடத்திலும் மக்கள் கூட்டமாக நிற்பதைக் காண முடியவில்லை.

மதுரைமா நகரில் மட்டும்தானா? இன்னும் அதைச் சுற்றிப் பல மைல் தூரம் உள்ள ஊர்களிலும் காண முடியவில்லை.

பத்துப் பேர், இருபது பேர், முப்பது பேர் என்று கும்பல் கும்பலாகக் குறிப்பிட்ட நேரத்துக்குப் பஸ்நிலையத்துக்கு அல்லது பஸ் நிற்கும் இடத்துக்கு மக்கள் வருகிறார்கள். கையில் கட்டியிருக்கும் கடிகாரத்தைப் பார்க்கிறார்கள். கடிகாரம் இல்லாதவர்கள் அருகில் உள்ளவரிடம் மணி என்ன என்று கேட்கிறார்கள். இன்னும் இரண்டு நிமிஷம் இருக்கிறது; மூன்று நிமிஷம் இருக்கிறது என்று சொல்லிக்கொள்கிறார்கள். வெள்ளை வெளேர் என்று பஸ் வருகிறது. அதில் சாவகாசமாக ஏறுகிறார்கள். பஸ்ஸில் இடம் உள்ள வரையில் உட்காருகிறார்கள். மற்றவர்கள் கீழே

திரு டி. வி. சுந்தரம் ஐயங்கார் திருவுருவச் சிலைத் திறப்பு விழாவில் 'டி.வி.எஸ்.' ஸ்தாபனத் தொழிலாளர்கள் மாறுவேடம் புனைந்து மக்களை மகிழ்வித்தனர்.



# வளர்த்த மோட்டார் தொழில்




இறங்கி நிற்கிறார்கள். கொஞ்சம் கூட முகம் கோணாமல் நிற்கிறார்கள். இன்னும் சில நிமிஷங்களில் அடுத்த பஸ் வந்துவிடும் என்று தாங்களே மனத்துக்குள் சொல்லிக் கொள்கிறார்கள்.

பஸ்ஸில் ஏறிச் செல்ல வேண்டிய பிரயாணிகள் பரபரப்புக் காட்டாமல் தாங்கள் குறித்த நேரத்தில் குறிப்பிட்ட இடத்துக்குப் போய்ச் சேர்ந்து விடலாம் என்று எப்படி நம்புகிறார்கள் என்று ஆச்சரியமாயிருந்தது.

சென்னை நகரில், அதுவும் காலையிலும் மாலையிலும் பஸ்ஸுக்காகக் காத்துக் காத்து மனம் சோர்ந்து போனவர்களும், முண்டியடித்துப் பஸ்ஸில் ஏறி மணிபர்ஸைப் பறி கொடுத்தவர்களும், வேட்டி சட்டையைக் கிழித்துக் கொண்டவர்களும், கண்டக்டரிடம் மற்போர் இட்டுத் தோல்வி கண்டவர்களும் மதுரையில் நடைபெற்று வரும் அதிசயத்தை நம்ப மாட்டார்கள். நானும் முதலில் இதை நம்ப மறுத்தேன். ஆனாலும் அதற்குக் காரணம் கண்டு பிடிப்பது அவ்வளவு பிரயாசையாக இல்லை.

இரண்டு காரணங்கள் பிரத்தியட்சமாகவும் தெள்ளத் தெளிவாகவும் புலப்பட்டன.

அவற்றில் ஒன்று மூன்றெழுத்தையுடைய அந்த மோட்டார் தொழில் ஸ்தாபனம்; இரண்டாவது அதில் தொண்டாற்றும் தொழிலாளர்களின் உயர்ந்த பண்பு.

அது என்ன அப்பா அதிசயமான மூன்றெழுத்து என்று நேயர்கள் கேட்பது காதில் விழுகிறது.

சென்ற நாற்பத்து நான்கு ஆண்டுகளாக உழைத்த உழைப்பு; விடாமுயற்சி; மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டும் என்ற ஆவல் எல்லாமாகச் சேர்ந்து அடைந்திருக்கும் மாபெரும் வெற்றியின் சின்னம்தான் அந்த மூன்றெழுத்து.— டி. வி. எஸ்.

எனினும், நாற்பத்து நான்கு ஆண்டுகளின் உழைப்பால் புகழ் பெற்ற டி. வி. எஸ். என்னும் மூன்றெழுத்தின் சிறப்பானது சமுத்திரத்தில் கரைத்த பெருங்காயம்போல் ஆகியிருக்கும், அதன் தொழிலாளர்கள் மட்டும் கடமை உணர்ச்சியுடன் சரியாக உழைக்காமல் இருந்திருப்பார்களானால்!

டி. வி. எஸ். தொழில் ஸ்தாபனத்தைப் போல் இதர சில தொழில் ஸ்தாபனங்களில் தொழிலாளர்கள் கடமையை உணர்ந்து சரியாக உழைக்காமல் 'வேலைநிறுத்தம்' போன்ற தேச விரோதமான காரியங்களில் ஈடுபட்டு வருவதற்கு முக்கிய காரணம் — அடிப்படையான காரணம் — அவர்களால்தான் தொழில் வளருகிறது என்று உணர்ந்து அவர்களுக்கு வேண்டிய வசதிகளையும், ஊதியத்தையும் தொழில் அதிபர்கள் கொடுக்காமல் அவர்களை உதாசீனம் செய்வதுதான்.

தொழிலாளர்கள் எல்லாருமே உயர்ந்த பண்பு நிறைந்தவர்கள்; அற்புதமான கைத்திறமை உடையவர்கள்; அதிசயமான அறிவு



டி. வி. எஸ். உருவச் சிலையைத் திறந்து வைத்து ஸ்ரீ டி. டி. கே. சொற்பொழி வாற்றுகிறார். மேலே காட்சிதருபவர்தான் காலஞ்சென்ற ஸ்ரீ டி.வி.எஸ்.



ஸ்ரீ டி. வி. சுந்தரம் ஐயங்கார் அவர்களின் உருவப்படத்தைத் திறந்து வைத்து ராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு பேசுகிறார்.

படைத்தவர்கள்; அவர்கள் மட்டும் மனம் வைத்து உழைத்தால் எந்தத் தொழிலையும் அவர்களால் உயர்த்திவிட முடியும்.

ஆனால் தொழிலாளர்களிடம் இருக்கும் இத்தனை சக்திகளையும் உணர்ந்து அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றல் படைத்த தொழில் அதிபர்கள் வேண்டும்; அவர்கள் மீது கருணை காட்டும் நல்ல இதயம் படைத்தவர்கள் வேண்டும். அப்படிப்பட்ட திறமையும், நல்ல இதயமும், அஞ்சா நெஞ்சமும் படைத்தவர்தான் திரு டி. வி. சுந்தரம் ஐயங்கார் அவர்கள்.

அவருடைய நல்ல இதயத்தின் சிறப்பைத்தான் சென்ற மாதம் ஐந்தாந் தேதி மதுரையில் நடந்த அவருடைய உருவச் சிலைத் திறப்பு விழாவில் கண்டேன்.

ஸ்ரீ டி. வி. சுந்தரம் ஐயங்கார் அமரராகி ஒரு ஆண்டு பூர்த்தியாகி விட்டது. அவர் உருவச் சிலையைப் பார்த்து அவர் களிக்கப் போவதில்லை. அவருக்கு ஒரு சிறந்த ஞாபகச் சின்னமாக அவர் வளர்த்த ஸ்தாபனங்களே இருக்கின்றன. ஆனால் அந்த உத்தமருடைய இதயத்தில் இருந்த கருணையின் சின்னமாக ஸ்ரீ டி. வி. எஸ். உருவச் சிலை இருக்கிறது.

மதுரையில் உள்ள டி.வி.எஸ். ஸ்தாபனத்தில் ஊழியம் செய்யும் குமாஸ்தாக்கள், தொழிலாளர்கள், இதர பெரும் உத்தியோகஸ்தர்கள் எல்லாரும் தங்கள் அன்பைக் காட்டுவதற்கு அறிகுறியாக அமைத்த சிலை அது! இருபத்தைந்து ரூபாய் ஊதியம் பெறும் சாதாரணத் தொழிலாளியிலிருந்து, இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் ஊதியம் பெறும் பெரிய உத்தியோகஸ்தர்கள் வரை தங்கள் தங்கள் வருமானத்தில் ஒரு பங்கை மனம் உவந்து காணிக்கையாக அளித்து உருவாக்கிய அன்புச் சின்னம் அது.

திரு டி. வி. சுந்தரம் ஐயங்கார் மறைந்த பிறகும் அவரிடம் ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் அன்பு காட்டும்படி அவர் என்ன செய்தார்? அப்படிப் பிரமாதமாக அவர் சாதித்த காரியங்கள்தான் என்ன? என்பதைத் தெரிந்து கொள்வதற்கு முன்னால் ஸ்ரீ டி. வி. எஸ். ஐயங்காரின் வாழ்க்கையைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

உழைப்புக்கும் ஊக்கத்துக்கும் இந்தியாவில் எடுத்துக்காட்டாக விளங்கி வருவது கேரள நாடு என்று சொன்னால் விருப்பு வெறுப்பு இல்லாத நேர்மை உள்ளம் படைத்த எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள். இந்தக் கேரள நாட்டிலே 1877-ம் ஆண்டில் திரு டி. வி. எஸ். ஐயங்கார் பிறந்தார். ஒரு காலத்தில் கேரள நாட்டைத் தமிழ் ஆண்டு வந்தது. அங்குள்ள நீதிமன்றங்களில் தமிழ் மொழி ஆட்சி செலுத்தி வந்தது. கேரள நாட்டின் பிரசித்திபெற்ற தமிழ் வக்கீலாக ஸ்ரீ டி. வி. சுந்தரம் ஐயங்காரின் தந்தை விளங்கி வந்தார். தமிழின் உயர்வை எங்கிருந்தோ வந்த ஆங்கிலம் குலைக்கத் தொடங்கியது. கேரளத்தில் தமிழ் வக்கீல்களைவிட ஆங்கில வக்கீல்களுக்கே மதிப்பு அதிகமாகத் தொடங்கியது. தம் மகன் ஆங்கில வக்கீலாக வரவேண்டும் என்று ஸ்ரீ டி. வி. எஸ். அவர்களின் தந்தை விரும்பினார்.

திருநெல்வேலியில் உள்ள இந்துக் கல்லூரியில் தம் புதல்வர் டி. வி. சுந்தரத்தைப் படிக்க வைத்தார். பையனுக்குக் கல்லூரிப் படிப்பு கவர்ச்சி அளிக்கவில்லை. பிறகு கோயமுத்தூர் போதனைமுறைக் கல்லூரிக்கு அனுப்பி வைத்தார். அங்குள்ள ஆங்கில துரைமார்களிடம் கல்வி பயின்றதும் டி. வி. சுந்தரத்துக்குப் பட்டப் படிப்பில் உள்ள ஆசை அடியோடு குறைந்து விட்டது.

கல்லூரிப் படிப்பில் காலத்தைப் போக்குவதைவிட, உத்தியோக வேட்டையில் வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்வதைவிட வர்த்தகத்திலும், தொழில் துறையிலும் ஈடுபட்டால் தான் நாடு முன்னேறும் என்று நம்பினார் ஸ்ரீ டி. வி. சுந்தரம்.

தந்தையின் விருப்பத்துக்கு விரோதமாகவே வர்த்தகத் துறையில் புகுந்தார். வர்த்தகத்தில் நல்ல லாபம் கிடைத்தது. அந்தத் தொகையைக்கொண்டுமோட்டார்தொழிலில் ஈடுபட்டு முதலில் பஸ் ஓட்ட ஆரம்பித்தார்.




அது கூர்மையாக இருக்கிறது.

எவ்வளவுதூரம் மரத்தில் துளை யிட்டாலும் மரங்கொத்திப் பறவையின் அலகு கெடாம லிருக்கிறது. ப்ளேட்டோ 66ன் நிப்பை இதற்கு ஒப்பிடலாம். அதிக உபயோகத்திற்குப் பிறகும், அது கூர்மையாக இருக்கிறது. எனினும் அது வழவழப்பாயும் எழுதுவதற் குச்சுகமாயுமிருக்கிறது.

**Plato 66**

## இன்றே ஒரு ப்ளாட்டோவை வாங்குங்கள்.

ரூ. 4 தான்.

## ஒரு மாத்ரே தயாரிப்பு

ஏக விநியோகஸ்தர்கள்:
தி பெண்ட் பவுண்டன் பென் டிப்போ,
79, தேவ்கரன் மான்ஷன்
பிரின்ஸஸ் ஸ்ட்ரீட்
பம்பாய்-2.

SHILPI-MP-312-TAM

சென்னை ஏஜண்டு: தி ப்ளாட்டோ டிரேடர், 97, நாராயண முதலி தெரு, சென்னை-1

அவர் பஸ் தொழிலில் ஈடுபட்டதும் அதில் உள்ள ஊழல்களைக் கண்டு மனம் வெதும்பி ஞர். தொழிலாளர்களுக்குச் சரியாக ஊதியம் கொடுக்காமல் வேலை வாங்கும் கொடுமையை முதலில் ஒழித்தார். பிரயாணிகளிடம் தம் இஷ்டப்படி பணம் வசூல் செய்யும் முறையை ஒழித்து, 'இன்ன தூரத்துக்கு இன்ன பணம்' என்று தமிழ்நாட்டில் முதன் முதலில் முறை வகுத்தவர் ஸ்ரீ டி. வி. எஸ் தான். அவ்வாறு வாங்கும் கட்டணத்துக்கு டிக்கட் கொடுக்கும் வழக்கத்தையும் ஏற்படுத்தியவர் அவர் தான். எல்லாவற்றுக்கும் மேலாக, குறிப்பிட்ட நேரத்தில் பஸ்கள் புறப்பட்டுக் குறிப்பிட்ட நேரத்தில் போய்ச் சேரவேண்டும்



விவசாய மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் அவர்களை டி.வி.எஸ். உத்தியோகஸ்தர்கள் வரவேற்கின்றனர்.

என்ற வழக்கத்தை அமுலுக்குக் கொண்டு வந்தவரும் அவரேதான்!

இவ்வாறு பஸ் தொழிலைச் சீர்திருத்தம் செய்வதற்கு அவர் பட்டிருக்கும் கஷ்டங்களையும், உழைத்திருக்கும் உழைப்பையும் எடுத்துக் கூறினால் அது பெரும் பாரதமாக முடியும்.

எந்த நல்ல காரியத்துக்கும் எதிர்ப்பு இருப்பது போல ஸ்ரீ டி. வி. எஸ். மேற் கொண்ட பணியிலும் எதிர்ப்புகளும், பொறாமைகளும், துவேஷங்களும் இருக்கத்தான் செய்தன. அவைகளை எல்லாம் தம்முடைய உழைப்பின் சக்தியால், நிர்வாகத் திறமையால், தொழிலாளர்களிடம் காட்டிய கருணையால், நிலையான நியாயத்தால் வென்றார்.

"கடிகாரம் தப்பு மணி காட்டினாலும் காட்டும்; டி. வி. எஸ். பஸ் நேரம் தப்பி வரவே வராது!" என்ற புதுமொழியை நாட்டில் உண்டாக்கினார்.

கடைசி மூச்சு இருக்கும் வரையில் உழைத்துக் கொண்டே இருந்தார். சும்மா வீட்டில் அடைந்து கிடப்பவர்கள் பத்திரிகைகளில் வரும் விமான விபத்துச் செய்திகளைப் படித்துப் பீதியடைந்து இருக்கும் காலத்தில் தம்முடைய எழுபத்தோராவது வயதில் ஆகாய விமானத்தில் ஏறிப் பாதாள உலகுக்கு, அதாவது அமெரிக்காவுக்குச் சென்றார்.

அவருடைய அமெரிக்கப் பிரயாணத்தின் பயனாகத் தென்னாட்டில் மோட்டார் தொழில் எவ்வளவோ வகையில் சிறந்து வளர்ந்தது என்பதற்கு அவருடைய டி. வி. எஸ். மோட்டார் தொழில் ஸ்தாபனமே இன்று சாட்சி கூறிக் கொண்டிருக்கிறது.

மதுரையில் 1912-ம் ஆண்டு டி. வி. சுந்தரம் ஐயங்கார் அண்டு சன்ஸ் என்ற பெயரில் மோட்டார் சில்லறைக் கருவிகள் விற்பனைக் கம்பெனியை ஆரம்பித்தார். 1921-ல் மேற்படி கம்பெனி மோட்டார் வண்டி விற்பனை தொடங்கியது. 1923-ல் மேற்படி கம்பெனியார் ஆரம்பித்த மோட்டார் ரிப்பேர் தொழிற்சாலை இப்போது இந்தியாவிலேயே மிகப் பெரிய மோட்டார் ரிப்பேர் தொழிற் சாலையாக விளங்குகிறது. சென்னையிலும், சேலத்திலும், கோயமுத்தூரிலும், புதுக்கோட்டையிலும், திருச்சியிலும், திருநெல்வேலியிலும் கிளைக் கம்பெனிகள் இருக்கின்றன. இதில் எல்லாவற்றிலும் சுமார் நாலாயிரம் பேர்கள் தொண்டாற்றுகின்றனர்.

இந்த நாலாயிரம் பேர்களும் ஒரே குடும்பமாக உழைத்து வருகின்றனர். இவர்கள் எல்லாரும் டி. வி. எஸ். குடும்பம்தான்.

இந்த அருமையான குடும்ப ஒற்றுமை உணர்ச்சியை டி. வி. எஸ். தொழிற்சாலையில் நடைபெற்ற டி. வி. சுந்தரம் ஐயங்கார் உருவச் சிலைத் திறப்பு விழாவில் தெரிந்து கொள்ள முடிந்தது.

ஸ்ரீ சுந்தரம் ஐயங்கார் உருவச் சிலை நிர்மாணிப்பதற்காக டி. வி. எஸ். ஸ்தாபன ஊழியர்கள் சுமார் பதின்மூவாயிரத்து முந்நூறு ரூபாய் சேர்த்தார்கள்.

"அடேயப்பா! பதின்மூவாயிரத்துச்சொச்ச ரூபாயா? வெறும் சிலை அமைப்பதற்கா? அவ்வளவு பணத்தையும் என்ன செய்தார்கள்?" என்று யாராவது கேட்பார்களோ என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் மதுரையில் நடந்த டி. வி. எஸ். உருவச் சிலை திறப்பு விழாவில் கலந்து கொண்டவர்கள் யாரும் அவ்வாறு கேட்கமாட்டார்கள்.

டி. வி. எஸ். வெண்கல உருவச் சிலை ஒன்று. வெள்ளை சலவைக்கல் சிலை ஒன்று. பெரிய வர்ணச் சித்திரம் ஒன்று.

இந்த உருவச்சிலை, உருவப்படத் திறப்பு விழாவைப் பெரிய திருவிழாவாகவே கொண்டாடி விட்டார்கள்.

உருவச்சிலைத் திறப்பு விழாவை இந்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் நடத்தி வைத்தார். (ஸ்ரீ டி. வி. எஸ். உருவச்சிலையைத் திறந்துவைத்துவிட்டுப் போன முகூர்த்தம் ஸ்ரீ டி.டி.கே. இந்திய சர்க்கார் நிதிமந்திரியாகப் பதவி ஏற்று விட்டார்) விழாவுக்குத் தலைமை வகிப்பதற்கு ராஜ்ய விவசாய மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம்; டி.வி.எஸ். உருவப் படத் திறப்புக்கு ராம

நாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு:

காருகுறிச்சி ஸ்ரீ ப. அருணாசலம் நாதஸ்வரம்; திரு வி. வி. சடகோபன், ஸ்ரீமதி ஜிக்கியின் கச்சேரிகள். ஸ்ரீமதி டி. டி. குசலகுமாரியின் நடன விருந்து. இவை எல்லாவற்றுக்கும் மேலே டி. வி. எஸ். ஸ்தாபனத் தொழிலாளர்களின் மாறுவேடக் காட்சிகள்.

இவைகளை எல்லாம் பார்த்தபோது உருவச் சிலை திறப்பு விழாச் செலவுக்கு ரூ. 13,300 எந்த மூலைக்கு என்றுதான் தோன்றுகிறது.

இந்த உருவச்சிலை திறப்புவிழாவில் இந்தியாவின் பல இடங்களில் இருந்தெல்லாம் மோட்டார் தொழில் சம்பந்தப்பட்ட பல பிரமுகர்கள் வந்து கலந்து கொண்டார்கள்.

டி. வி. எஸ். ஐயங்கார் சிலை அமைப்புக் குழுவின் காரியதரிசி ஸ்ரீ கண்ணன் விழாவுக்கு வந்தவர்களை வரவேற்ற பண்பு பாராட்டத் தக்கது. டி. வி. எஸ். தொழில் ஸ்தாபனத்தின் கண்யம் அவருடைய பேச்சில் மிக நன்றாகத் தொனித்தது. விழாவுக்காக என்று விசேஷமாகப் பம்பாயிலிருந்து வந்த தங்கள் தொழில் அதிபரைத் தொழிலாளர்கள் கைகொட்டி ஆரவாரித்து வரவேற்ற போது தொழிலாளர்கள் தங்கள் தொழில் அதிபர் மீது கொண்டிருக்கும் அன்பும், எத்தனையோ வேலைகளை எல்லாம் விட்டு விட்டுத் தொழிலாளர்கள் நடத்தும் விழாவில் கலந்து கொள்ள வந்த ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணாவின் அன்பும் ஒன்றையொன்று பின்னிக் கொண்டு காட்சி அளித்தன. ஸ்ரீ டி. கே. சேஷாத்ரி விழாவுக்கு வந்திருந்த வாழ்த்துச் செய்திகளைப் படித்த போது டி. வி. எஸ். ஸ்தாபனம் எத்தனை பெரியோர்களின் ஆசியையும் அன்பையும் பெற்றிருக்கிறது என்பதை எளிதாகத் தெரிந்து கொள்ள முடிந்தது.

ஸ்ரீ எஸ். ஆர். துரைசாமி சாஸ்திரிகளின் கடல்மடை திறந்தாற் போன்ற ஆங்கிலப் பேச்சையும், திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார் ஆற்றிய ஆழ்ந்த பொருள் கொண்ட அழகுரையையும் கேட்டு எல்லாரும் மூக்கின் மேல் விரல் வைத்தனர்.

ஜனாப் உசேன் மரக்காயர், ஸ்ரீ டி. சி. காமராஜன் முதலிய தொழில் பிரமுகர்கள் பேச்சில் டி. வி. எஸ். அவர்களின் திறமையை எவ்வளவு தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பது நன்றாகத் தெரிந்தது.

டி. வி. எஸ். என்ற மூன்றெழுத்து வளர்த்த மோட்டார் தொழில், மோட்டார் தொழிலை மட்டும் வளர்க்காமல் தொழிலாளர்களின் உயர்ந்த பண்பையும் வளர்த்திருக்கிறது. குறிப்பாக டி. வி. எஸ். தொழிலாளர்கள் பொது மக்களிடம் மதிப்பும் மரியாதையும் கொடுத்து நடந்து கொள்ளும்படி டி.வி.எஸ். ஸ்தாபனத்தின் அதிபர்கள் செய்து வரும் அதிசயத்தைப் பாராட்ட வேண்டும்.

இப்பொழுது டி. வி. எஸ். தொழில் ஸ்தாபனங்களை நிர்வகித்து வரும் ஸ்ரீ டி. வி. சுந்தரம் ஐயங்காரின் குமாரர்கள் தொழிலாளர்களிடையே பிறந்துவளர்ந்து, தொழிலாளர்களின் கஷ்டங்களை எல்லாம் நன்றாகத் தெரிந்து கொண்டிருப்பவர்கள். அதனால் தொழிலாளர்களை நன்றாக நடத்துவதற்கென்றே இவர்கள் தொழில் நடத்துகிறார்களோ என்று எண்ணி வியக்க வேண்டியிருக்கிறது.

எனவே 'டி.வி.எஸ்.' ஏதோ தனி மனிதரின் ஸ்தாபனமாயிற்றே என்று எண்ணிவிடாமல், அவர்கள் சுமார் நாலாயிரம் குடும்பங்களை நல்ல முறையில் காப்பாற்றி வருகிறார்கள் என்பதை எண்ணிப் பார்த்தால் 'டி.வி.எஸ்.' என்பது தென்னாட்டுக்கே மிகப் பெரிய ஸ்தாபனம் என்பது நன்றாக விளங்கும். மூன்றெழுத்து வளர்த்து வரும் மோட்டார் தொழிலின் மேன்மையும் தெரியும். அதன் மூலம் லட்சக்கணக்கான மக்கள் நன்மை அடைந்து வருவதும் புரியும்.

டி. வி. எஸ். மோட்டார் தொழில் இவ்வளவு சிறப்பாக நடப்பதற்கு அவர்கள் கையாளும் முறையென்ன? அவர்கள் காரியாலயங்களையும், தொழிற்சாலையையும், தொழிலாளர்களையும் எவ்வாறு நடத்துகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?

மதுரை ரயிலடியில் இறங்கியவுடன் அதோ மீனாட்சி அம்மன் கோயிலைப் போல வானோங்கி நின்று வரவேற்கிறது டி. வி. எஸ். தொழில் ஸ்தாபனத்தின் மிக உயர்ந்த கட்டடம். அந்தக் கட்டடம் 'வாருங்கள்! வாருங்கள்!' என்று கண்காட்டிக் கைகூப்பி நம்மை வரவேற்கிறது. அந்த விந்தைக் கட்டடத்துக்குள் சென்று அங்கு நடக்கும் அதிசயங்களை எல்லாம் நேரிலேயே பார்ப்போம். (தொடரும்)



"உலகிலுள்ள நிலமனைத்தும்
உலகநாதன் உடைமையே
ஊரிலுள்ள விளைநிலங்கள்
ஊர்ப்பொதுவாம் கடமையே!"

தமிழகத்திலே தற்போது பாத யாத்திரை புரிந்து வரும் வினோபா அடிகளின் (63-வது பிறந்த தினம்) செப்டம்பர் 11-ம் தேதி வருகிறது. அவருடைய பிறந்த தினத்தைப் பாரத நாட்டில் 'நில மகளின் விடுதலை தின'மாகக் கொண்டாட விரிவான திட்டங்கள் வகுத்து வருகிறார்கள். நாம் இப் புனித தினத்தில் நம் வணக்கங்களை ஆசார்ய வினோபா அவர்களுக்குச் செலுத்திக் கொள்கிறோம். அவருடைய பூதானம் ஓர் லட்சியமா அல்லது லட்சியத்தை அடைய மார்க்கமா என்பதைக் கீழ்க்கண்ட கட்டுரை விளக்குகிறது.

# பூதான லட்சியம்

சுரேஷ் ராம்

ஒரு நாள் வினோபாஜியிடம் ஓர் விவசாயி அவசரமாக வந்தார்.

"என்னிடம் நாலு ஏக்கர் நிலம் இருக்கிறது. அவ்வளவையுமே தங்களுக்குக் கொடுத்து விட விரும்புகிறேன்!" என்று அடிகளிடம் நெஞ்சம் தழதழக்கக் கூறினார்.

"உன்னிடமிருக்கும் நாலு ஏக்கரையும் கொடுத்து விட்டால் பிழைப்புக்கு நீ என்ன செய்வாய்?" என்று கேட்டார் வினோபா.

"ஏன், இப்பொழுது கூட நான் பிறத்தியார் நிலத்தில் உழுது பயிர் செய்துதான் ஜீவனம் நடத்துகிறேன். அதையே தொடர்ந்து செய்கிறேன்!"

"ஆனால் பிறருடைய நிலங்களை யெல்லாம் வாங்கி, நில உடைமை யில்லாததோர் சமுதாயத்தை உண்டாக்குவது என் நோக்கமல்ல. அதனால் உன் எல்லா நிலமும் எனக்கு வேண்டாம்... உனக்கு எத்தனை பிள்ளைகள்?"

"மூன்று."

"அப்படியானால் என்னை நாலாவது பிள்ளையாக ஏற்றுக் கொண்டு உன் நிலத்தில் நாலில் ஒரு பங்கை எனக்குக் கொடுத்து விட்டு மிச்சத்தை நீயே உழுது பயிர் செய்!" என்று கூறி அனுப்பினார் வினோபா.

* * *

மற்றொரு சமயம் ஒரு பெரிய நிலப் பிரபு வினோபா அடிகளைப் பார்க்க வந்தார்.

"நான் எதற்காகக் கிராமம் கிராமமாக நடந்து செல்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும் அல்லவா?" என்றார் வினோபா.

"அது எனக்குத் தெரியும். நில தானம் கோரி நடக்கிறீர்கள். தாங்கள் எவ்வளவு நிலம் கேட்கிறீர்களோ கொடுக்கத் தயார்."

"சந்தோஷத்தோடு கொடுப்பீர்களோ?" என்று மீண்டும் கேட்டார் வினோபா.

"ரொம்ப சந்தோஷத்தோடு, பரிபூரண மனத் திருப்தியுடன் தருகிறேன்" என்றார்.

"அப்படியானால் உங்களிடம் எவ்வளவு நிலம இருக்கிறது என்று சொல்லுங்கள்."

"ஒரு லட்ச ஏக்கர் வானம் பார்த்த பூமியும் 12,000 ஏக்கர் பண்படுத்திய நன்செய் நிலமும் இருக்கின்றன."

"நான் சொல்வதென்ன வென்றால் உங்கள் புன்செய் நிலம் முழுவதையும் எனக்குக் கொடுத்து விடுங்கள். நன்செய் நிலத்திலும் ஆறில் ஒரு பங்கு கொடுத்துவிடுங்கள். என்ன, முடியுமா?" என்றார்.

"ஓ, உங்கள் விருப்பப்படியே!" என்றார்.

அந்தக் கணமே ஒரு லட்சத்து இரண்டாயிரம் ஏக்கர் நிலத்துக்குத் தான பத்திரம் எழுதிக் கொடுத்து விட்டார் அந்தப் பிரபு.

ஒரு நாள் சாயங்காலம், கண் பார்வை இழந்த ஒரு கிழக் குருடர் வினோபா அடிகளின் முகாமுக்கு வந்தார். அவர் கையில் நிலதான பத்திரம் வைத்திருந்தார். கால் ஏக்கர் நிலதானம் செய்வதாக அதில் குறித்திருந்தார். அந்தப் பத்திரத்தை வினோபா அடிகளிடம் கொடுத்து, "பாபா, இந்த உலகில் எனக்குச் சொத்து என்று இருப்பதெல்லாம் இவ்வளவுதான். இதை ஏற்றுக் கொண்டு என்னை ஆசீர்வதிக்க வேண்டும்" என்றார்.

"இந்தக் கால் ஏக்கர் நிலத்தையும் எனக்குக் கொடுத்து விட்டு நீ எப்படி அப்பா வாழ்வாய்? ஜீவனத்துக்கு என்ன செய்வாய்?" என்று கேட்டார் அடிகள்.

"ஏற்கனவே ஜீவனத்துக்கு நான் உழைத்து வேலை செய்து வருகிறேன். இந்தக் கால் ஏக்கர் நிலத்தினால் அதிகப் பிரயோஜனம் ஒன்றும் ஏற்பட்டுவிட வில்லை. அதனால் இந்த நிலத்தை மகிழ்ச்சியோடு தங்களுக்குக் தந்து விட்டு, நான் எப்பொழுதும் போல் உழைத்துப் பிழைத்துக் கொள்கிறேன்" என்றார்.

வினோபா அவர் கொடுத்த தானத்தை வாங்கிக் கொள்வதாகக் கூறினார். அந்தத் தான பத்திரத்தை வாங்கினார். அதன் பின்னால் பின் வருமாறு எழுதினார் :—

"இந்தக் கண் பார்வை யில்லாத குருடர் பக்தி சிரத்தையோடு இந்தத் தானம் செய்திருக்கிறார். அவர் பக்திக்குப் பிரசாதமாக இதை நான் அவருக்கே திருப்பித் தந்து விட்டேன்!" என்று எழுதினார்.

அந்தக் கிழவர் அப்போது அடைந்த ஆனந்தம் சொல்லுந்தரமன்று.

* * *

மேற்கண்ட மூன்று சம்பவங்களும் பூதானத்தின் நுட்பத்தை விளக்கி விட்டன.

ஒருவன் நாலு ஏக்கர் நிலம் வைத்திருந்தால் அதிலிருந்து ஒரு பகுதியைக் கொடுத்து விடு என்று கேட்பதற்கு உலகில் எந்தச் சர்க்காருக்கும் உரிமை கிடையாது. ஆனால் பூமி தானமோ தானாகவே ஒருவனைக் கொடுக்கும்படி செய்கிறது!

சர்க்கார் நம் ஜமீன்தார்களின் நிலத்தையெல்லாம் பறிக்கவில்லையா? ஜமீன்தார்களை ஒழிக்க வில்லையா என்று கேட்கலாம்! எப்படி ஒழித்தார்கள்? நஷ்ட ஈடு கொடுத்து ஒழித்

தார்கள். சர்க்கார் பறிமுதல் செய்தால் நஷ்டஈடு கொடுத்தேயாக வேண்டும். ஆனால் நமது பூதான யக்ஞமோ லட்சக் கணக்கான ஏக்கர் நிலங்களை ஒருவித நஷ்ட ஈடும் கோராமல் கொடுக்கத் தூண்டுகிறது. கால் ஏக்கர் வைத்திருப்பவனேயும் பரிபூரண மாகத் தானம் கொடுத்து விட்டு, சர்வபரி தியாகம் செய்து பேர் ஆனந்தம் கொள்ளச் செய்கிறது.

இதை யெல்லாம் பார்க்கும் போது ''சட்டம் சாதிக்க முடியாததைப் பூதானம் சாதிக்கிறதே, இது என்ன ஆச்சரியம்'' என்றே வியக்கத் தோன்றுகிறது.

* * *

உலகில் உள்ள பல அதிசயங்களில் ஒன்று நிலம் ஒரு வியாபாரப் பொருளாகக் கருதப் படுவது! ரூபாய் அணுபைசாக்களில் நிலத்தை மதிப்பது போல் அர்த்தமற்ற காரியம் வேறு ஒன்றில்லை. நிலத்தைப் பணத்தினுல் மதிக்க லாம் என்ருல், ஒரு கஜம் என்பது இருபது நிமிஷம் என்றுகூடத்தான் சொல்லலாம். இப்படிச் சொன்னுல் பைத்தியக்காரத்தனம் என்பார்கள். கஜம் என்பது ஒரு தூரத் தைக் குறிக்கும். நிமிஷம் என்பது காலத் தைக் குறிக்கும். இவையிரண்டும் எப்படிச் சமமாகும் என்பார்கள்.

அப்படியேதான் நிலமும், பணமும். நிலம் நாம் உண்ணும் உணவை உற்பத்திசெய்வது! பணம் சர்க்காரினுல் அச்சிடப்பட்டு வழங்கும் நாணயம், நோட்டு. சர்க்காரின் விருப்பத் துக்குத் தகுந்தபடி எல்லாம் நாணயங்களின் மதிப்பு ஏறி இறங்கும். பின் நோட்டு, உணவை உற்பத்தி செய்யும் நிலத்துக்கு எப்படிச் சமமாகும்?

நிலத்தை வியாபாரப் பொருளாகக் கருதும் வழக்கத்தை இன்றைய உலக அரசாங்கங்கள் விட்டொழித்தால் பல பிரச்னைகள் தீர்ந்து விடும். அணுகுண்டுகள் தீர்ந்து போகும்! ஆனல் இன்றையச் சர்க்கார்களினுல் இதைச் செய்வது என்பது முடியாத காரியம். ஆனல் சர்க்காரைச் சிருஷ்டிப்பவர்கள் யார்? மக்கள். அவர்கள் தங்கள் சிந்தனையை, வாழ்க்கை முறையை மாற்றிக் கொண்டால் சர்க்கார் களும் தானுகவே மாறிவிடும்!

ஆனல் ஒரு வேளை சர்க்காரே இந்த மாறு தலை இயற்றி விட்டது என்று வைத்துக் கொள்ளுவோம். நிலம் எல்லோருக்கும் விநி யோகிக்கப்பட்டு விடுகிறது; வேலை எல்லோ ருக்கும் விநியோகிக்கப்பட்டு விடுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்போது ஒரு கேள்வி எழுகிறது. இந்த மாறுதலை மக்கள், தாங்களே ஏன் செய்து கொள்ளக் கூடாது? ஏன் சர்க்கார் செய்யும்படி விட் டார்கள் என்று கேட்கலாம்.

* * *

இந்தச் சந்தர்ப்பத்தில் மகான் டால்ஸ் டாய் எழுதிய கதை யொன்று எனக்கு நினைவுக்கு வருகிறது.

இரண்டு விவசாயிகள் இருந்தனர். அவர் களுக்குள் பகை முற்றிவிட்டது. அவர்கள் பகையைத் தீர்த்துக் கொள்ள நீதிமன்றத் துக்குப் போகும் நிலை ஏற்பட்டது.

இந்த விவசாயிகளில் ஒருவன் தன் நண்பன் ஒருவனைச் சந்தித்தான். அவனிடம் தனக்கும் தன் எதிராளிக்கும் எப்படிப் பகை மூண்டது என்ற விவரமெல்லாம் சொன்னுன். கடைசி யில் இனி நீதி மன்றத்துக்குப் போவதைத் தவிர வேறு வழியில்லை என்று முடித்தான்.

முழுவதையும் கேட்ட அந்த நண்பன், ''ஆமாம், வழக்கில் நீ தோற்று விட்டால் என்ன செய்வாய்?'' என்று கேட்டான்.

''ஜில்லா கோர்ட்டில் வழக்குப் போடு வேன்'' என்ருன்.

''அங்கேயும் உன் எதிராளி ஜெயித்து விட்டால்...?''

''ஹைகோர்ட்டு இருக்கிறதே! அங்கே வழக்குத் தொடர்வேன்.''

''அங்கேயும் நீ தோற்றுப் போனுல், என்ன செய்வாய்?''

''பிறகு கடவுளிடம் முறையிட வேண்டி யதுதான்'' என்ருன் விவசாயி.

இப்படி இந்த நண்பர்கள் பேசிக் கொண் டிருந்த போது அங்கே விளையாடிக் கொண்டி ருந்த, விவசாயியினுடைய ஏழு வயது மகள் தன் தந்தை கடைசியாகச் சொன்னதைக் கேட்டவுடன், ''அப்பா, இவ்வளவு தூரம் சண்டை போட்ட பிறகு கடவுளிடம் முறை யிட வேண்டியதுதான் வழி என்ருல், அதை இப்போதே ஏன் செய்யக் கூடாது? ஏன் நீதி மன்றத்துக்குப் போக வேண்டும்?'' என்ருள்.

தன் மகளின் இம்மொழிகள் அவனுக்குக் கண்களைத் திறந்து விட்டன! விவசாயி புதிய ஒளியைக் கண்டான். அன்புப் பாதை அவ னுக்குப் புலப்படலாயிற்று.

பூதானம் கூட ஒரு அன்புப் பாதை தான். ஆம், பூதானம் என்பது ஒரு லட்சிய மல்ல. உலகத்தோடு தோழமை வளர்த்துப் புது உறவை நிலை நாட்டும் லட்சியத்தை அடைய ஒரு சாதனம் மாத்திரமே.

முப்பது ஆண்டுகளுக்கு முன் காந்தி மகான் இராட்டையைக் கொடியில் ஏற்றி மக்களை நூல் நூற்கச் சொன்னுர். எதற்குச் சொன் னுர்? துணி உற்பத்தியைப் பெருக்க வேண்டு மென்பதற்காகவோ, ஏழைகளின் துயரைத் துடைப்பதற்காகவோ அவர் கூற வில்லை. தேச விடுதலை என்னும் இயக்கத்தை அன்பு மார்க்கத்தில் நடத்திச் சுதந்திரம் என்னும் லட்சியம் அடைய வேண்டும் என்பதற்காகவே சொன்னுர். இன்று பூதானம் கொடுங்கள் என்று விநோபா கேட்கிருர் என்ருல், ஏழை களுக்கு நில விநியோகம் செய்வதற்காகவா கேட்கிருர்? இல்லை. மனித உள்ளத்திலே ஒரு புரட்சியை, மாறுதலை யுண்டாக்கக் கூறுகிருர். ஒரு பொருளைத் தனது என்று உடைமை கொண்டாடுவது, திருடுவது போன்றதோர் பாவமேயாகும் என்ற உணர்ச்சியை உண் டாக்க விரும்புகிருர். மக்களை விழிப்படையச் செய்யப் பாடுபடுகிருர். சுதந்திர சோதியை ஒவ்வொருவர் இல்லத்திலும் ஏற்றி வைக்க விரும்புகிருர். பூதான மூலமாக இந்த லட்சி யத்தை அடைய விரும்புகிருர்.

# 60 SECONDS TO NEW BEAUTY

***the simplest, easiest, quickest way is with***

# PAN-STIK

**MAKE-UP *by***

# MAX FACTOR

**HOLLYWOOD**

Pan-Stik, the ideal cream-base make-up, strokes on in seconds, lasts for hours. Rich in lanolin, it's a real beauty treatment for your skin. It covers every flaw, freckle or trace of fatigue shadows, yet never looks "masky." It's the favorite make-up of the Hollywood Stars, both on and off the screen. Try Pan-Stik Make-Up today.



JULIE ADAMS

*CARRY PAN-STIK WITH YOU EVERYWHERE*

PAN-STIK (trademark) means Max Factor Hollywood Cream Base Make-Up



SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA.

# கடல் கொண்ட கனவு

## பதினைந்தாம் அத்தியாயம்

## மாயப் புன்னகை!



திருமணக் குதூகலத்துக்கு மத்தியில் திடீரென்று எதிர்பாராத விதத்தில் '' மண விழாவை நிறுத்துங்கள்!'' என்று அறிவிப்பு எழுந்தால் எப்படியிருக்கும்! அதிலும் அப்படிப்பட்ட அறிவிப்பு மணப் பெண்ணின் தந்தையிடமிருந்தே வந்தது என்றால் எத்தனை பெரிய அதிர்ச்சியாக இருக்கும்!

'' தெய்வ கோபம் ஆவேசத்தோடு கேட்கிறது. மண விழாவை நிறுத்துங்கள்!'' என்று வலம்புரித் தீவின் பேரரசர் கூச்சலிட்டதும், நிமித்தகர்கள் அனைவரும் திடுக்கிட்டு இருக்கையிலிருந்து எழுந்தார்கள். குருக்கள் உடம்பெல்லாம் பதறினார்.

'' யாழிலிருந்து எழுந்த முரண்பாடுகளையெல்லாம் கேட்டுக் கொண்டு சும்மா இருக்கிறீர்களா? நம்முடைய தீவுக்கு வர இருக்கும் கேட்டை நீங்கள் சிந்தித்துப்பார்க்கவில்லையா! அரச விசுவாசத்தையே இழந்து விட்டீர்களா, பிரதானிகளே?'' என்று சிம்ம கர்ஜனை புரிந்தார் வலம்புரித் தீவின் அரசர்:

அவ்வளவுதான்; மறுகணம் திருமண மன்றம் ஒரே குழப்பத்திலே சுழன்றது. வீரர்களும் தளபதிகளும் ஏதேதோ கூக்குரல் இட்டுக் கொண்டு எழுந்தார்கள். பெண்கள் அனைவரும் அந்தப்புரத்துக்கு விரைந்தார்கள். வாத்தியங்களின் ஒலி நின்று, மக்களின் குழப்பப் பேரிரைச்சல் கேட்டது.

திருமண மன்றிலுக்கு எதிரேயிருந்த நீலமேக யாழ்ப்பாணரை ஒரு கையிலே தாங்கிக் கொண்டு, பேரியாழோடு அங்கிருந்து நகர்ந்தான் சந்திரசூடன்.

சித்தன்னவாசல் மலை யுச்சியிலே அமர்ந்து கொண்டு, மேலே கண்டவாறு கதையைச் சொல்லிக் கொண்டே வந்த சமணத் துறவி இந்த இடத்தில் சிறிது நிறுத்தி, சித்திராங்க பூபதியைப்' பார்த்து ஆணித்தரமான ஒரு கேள்வியைப் போட்டார்.

'' இளவரசே! இப்பொழுது உங்களுக்குச் சந்திரசூடனைப் பின்தொடர்ந்து செல்ல இஷ்டமா? அல்லது மணமன்றத்திலிருந்து அந்தப்புரத்தில் மறைந்து விட்ட மணப் பெண்ணை தரங்கவல்லி என்ன ஆனாள் என்று அறிந்து கொள்ள இஷ்டமா?'' என்று கேட்டார் துறவி.

ஏழடிப் பட்டத்திலே நன்றாகச் சாய்ந்து கொண்டிருந்த சித்திராங்க பூபதி இப்பொழுது நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

'' இரண்டு பேரைப் பற்றியுமே தெரிந்து கொள்ள ஆசைதான். ஆனால்





சோமு

எல்லாவற்றையும்விட அதிக ஆசை அந்தப் பெரியாழைப் பற்றித் தெரிந்து கொள்வதிலேதான். ஏனென்றால் என்னிடம் எங்கள் வலம்புரித் தீவின் மந்திர நாயகம் வேறொரு மாதிரியாக அதன் வரலாற்றைச் சொன்னார். நீங்கள் சொல்வது முற்றிலும் மாறுபட்டு இருக்கிறது. அதனால் வேறு யாரையும் பின் தொடர்ந்து செல்வதைவிட அந்தப் பெரியாழைப் பின்தொடர்ந்து செல்லவே எனக்கு ஆவல்! தயவு செய்து இடைமறிக்காமல் கூறுங்கள்!'' என்றான் பூபதி. சமணத் துறவி பேச ஆரம்பித்தார். சமண சமயத்தை ஆழ்ந்து கற்றவரானதால் அந்தத் துறவி ஒவ்வொரு சம்பவத்தை வர்ணிக்கும் போதும் 'பூர்வ வினை' 'வினைப் பயன்' ஆகிய கருத்துக்களை அடிக்கடி வற்புறுத்திக் கொண்டே வரலாற்றைச் சொல்லி வந்தார். அவர் அப்படிச் சொன்ன தொடர்ச்சியின் சாரம் வருமாறு:

பெரியாழோடு நீலமேக யாழ்ப்பாணரை வீடு கொண்டு சேர்த்த சந்திரசூடனுக்கு மனம் ஒரு நிலையில் இல்லை. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை அந்த வலம்புரிக்கடலிலே ஒரு மின்னோட்டம் ஏற்பட்டுக் கடலானது பிரளயத்தைப்போன்று கொந்தளிப்பது உண்டு. அந்த மாதிரிக் கொந்தளித்தது சந்திரசூடனுடைய உள்ளம்! முதியவரான பாணரின் உள்ளமோ? அது கொந்தளிக்கவில்லை. எவ்விதமான சலனமும் இல்லை அந்த உள்ளத்தில்! அவருடைய கண்களைக் கூர்ந்து பார்த்தால் கொந்தளிப்பையெல்லாம் மீறி விட்ட மரணத்தின் அமைதி அந்த முதிர்ந்த உள்ளத்திலே ஐக்கியப்பட்டு நின்றது!

சாருகேசி பதறிக் கொண்டே பெரியவரின் அருகே வந்தாள். ''அப்பா!'' என்று அன்போடும், அன்பு கலந்த ஆற்றொணாத வேதனையோடும் அழைத்தாள். கண்களை அகலத் திறந்து பார்த்தார். மறுகணம் அம்முதியவர் இமைகளை நன்கு மூடிக் கொண்டு விட்டார். உதடுகள் பேசவில்லை.

''குருநாதா!'' என்றான் சந்திரசூடன். இமைகள் மூடியேயிருந்தன பாணருக்கு! உள்ளத்தின் குமுறலையெல்லாம் திமிறிக் கொண்டு வெளிப்படுகிற பாசத்தோடு, ''மாமா!'' என்றான் மறுபடியும் சந்திரசூடன். விழிகளைத் திறக்கவில்லை பாணர்! விழிகள் திறக்காவிட்டாலும், சந்திரசூடனுடைய குரலின் அழைப்பு அவருடைய செவியிலே புகுந்தது என்பதற்கு அடையாளமாக, அந்த வயோதிகரின் பரந்த உதடுகளிலே ஒரு மாயமான மின்னல் ஒருகணம் வளைந்து நெளிந்தது! அந்த மின்னலின் பொருள் வார்த்தைகளுக்குள் அடங்காது! அதன் பொருள் சொல் கடந்த நூறு கோடி உணர்ச்சிகளின் சுழிப்பு. அந்த ஒரு கணச் சுழிப்பிலே நீலமேக யாழ்ப்பாணரின் ஆன்மா சுழித்துக் கொண்டு ஓடி மறைந்து விட்டது!

''அப்பா! அப்பா!'' என்று பதறினாள் சாருகேசி. ஓலமிட்டுக் கதறினாள் அந்தக் கள்ளங்கபடம் இல்லாத அபலை. பதில் இல்லை! ''மாமா!'' என்றான் சந்திரசூடன். ''குருநாதா!'' என்று உரக்கக் கூப்பிட்டான். பயன் இல்லை. நீலமேக யாழ்ப்பாணருக்கு மூச்சு ஒடுங்கி விட்டது!

அரச வைத்தியர்கள் வந்தார்கள். வலம்புரித் தீவின் ''வாகடச் சாலை'' என்ற மருந்துக் கூடத்திலிருந்து நாடி நிபுணர்கள் வந்தார்கள். உடற் கூற்று வண்ணத்திலே தேர்ந்த பெரியார்கள் ஓடோடியும் வந்து பாணரைப் பார்த்தார்கள். யார் வந்து, யார் பார்த்து என்ன பயன்? எண்பது ஆண்டுகளாக யாழ்ப்பாணர் என்ற அந்த உடற் கூண்டுக்குள்ளே சிறைப் பட்டிருந்த உயிர்ப் பறவை பறந்தோடி விட்டது! பறந்து விட்ட அந்தப் பறவையைப் பிடித்துக் கொண்டு வருவதற்கு எந்த நூலில், எந்த சாஸ்திரத்தில் யார் எழுதி வைத்திருக்கிறார்கள்?

''யாழ்ப்பாணருடைய மரணம் நரம்பு அதிர்ச்சியினால் ஏற்பட்ட பரிதாபமான விபத்து!'' என்று வைத்தியர்கள் நிர்ணயித்துச் சொன்னார்கள். ''இத்தனை வயோதிகப் பருவத்தில்



இம்மாதிரியான குழப்பங்களை அந்த இதயத்தினால் தாங்க முடியவில்லை!'' என்று பிரதானிகள் பேசிக் கொண்டார்கள். ஆனால் பேரியாழிலே அபஸ்வரம் விழுவதற்கு உண்மையான காரணம் என்ன என்பதும், அந்தக் காரணம் முதியவரின் உள்ளத்தை என்ன பாடு படுத்தியது என்பதும் எவருடைய பேச்சிலும் அடிபடவில்லை. இது சந்திரசூடனுடைய மனசாட்சியை அறுத்துக் கொண்டே தொல்லைப்படுத்தியது. இத்தனை தொல்லைகளுக்கும், வேதனைகளுக்கும், குழப்பங்களுக்கும் மத்தியில் அந்தத் தீவிலுள்ள அத்தனை மனிதர்களையும் ஆச்சரியப்படுத்திய ஒரு விஷயம் நீலமேக யாழ்ப்பாணரின் முகத் தோற்றந்தான்! யாருக்குமே பிடிபடாத ஒரு பெரும் இரகசியமாக இருந்தது. பாணருடைய உதடுகளிலே தெளிந்த அந்தக்கடைசி மின்னலின் வளைவு! அதை அதிர்ச்சி என்று எப்படிச் சொல்லுவது?

புன்னகை என்று அதைச் சொல்வதா? சந்திரசூடனுடைய பேதைமையைப் பற்றிய பரிகாசச் சாயல் என்று சொல்வதா? அல்லது எல்லையற்ற ஞானத்தின் பக்குவத்தினால் மரணத்தை வரவேற்கிற மந்தகாசம் என்பதா? எந்த வைத்தியருக்கும், வலம்புரித் தீவிலுள்ள எந்த மனிதருக்கும் அந்த மாயப் புன்



னகையின் பொருள் விளங்க வில்லை! யோசித்துப் பார்த்ததில் சந்திரசூடனுக் குங்கூட அதன் நுட்பம் புலனாகவில்லை.

நிமித்திகர்கள் சொன்னார்கள்: ''எண் பது ஆண்டுகள் நிரம்பிய கிழவர் இவர். இந்த எண்பது ஆண்டுகளிலும், கை விரல்களில் நகம் முளைத்த நாளிலிருந்து வலம்புரி அம்மனுக்கு யாழ் வாசித்து வருகிற சங்கீத யோகி இவர். வருங் காலத்தை உணர்கிற ஞான தரிசனம் மரணத் தறுவாயில் அவருடைய அகக் கண்ணுக்குத் துலங்கி யிருக்கிறது. வலம் புரித் தீவுக்குப் பெருங் கேடு வரு வதைப் பேரியாழிலே கேட்ட அபஸ் வரம் அறிவித்தது அல்லவா? அந்தப் பெருங் கேட்டையே ஞான திருஷ்டி யிலே கண்டிருக்கிறார் கிழவர். இந்த ஞான மின்னல் அதன் சாயல்தான்!''

நிமித்தகர்கள் இப்படிச் சொன்ன போது அந்த மின்னல் ஆயிரங்கோடி மின்னல்களாகச் சந்திர சூடனுடைய இதயத்திலே பாய்ந்தது! கிழவருடைய மரணத்துக்குக் காரணம் அபஸ்வரம் பேசிய தன்னுடைய விரல்கள் அல்லவா என்று நினைத்துப் பார்க்கும் போதே மின்னல்கள் அத்தனையும் இடிகளாக இடித்து அவனுடைய தலையிலே அதிர் வது போல் இருந்தது சந்திரசூடனுக்கு!

சாருகேசியின் மனநிலையோ வேறு விதமாக இருந்தது. தன்னுடைய தந்தை யைச் சந்திரசூடன் ''மாமா'' என்று அழைத்துக் கொண்டு அருகிலே சென்ற போதல்லவா, கிழவரின் முகத்தில் அந்தச் சாயல் துவண்டது. சாருகேசி நினைத்தாள்: தன் தந்தையின் அந்த உணர்ச்சிச் சுழலுக்கு ஒரே ஒரு கார ணந்தான் இருக்க முடியும்; அந்தக் காரணம் தனக்கு மட்டுமே தெரியும் என்று அவள் எண்ணினாள். எனவே, அந்தக் காரணத்தை அவள் யாரிடமும் வெளியிட வில்லை. எத்தனையோ பேர் அவளிடம் வந்து அநுதாப வார்த்தை கள் சொன்னார்கள். யாழிலே ஒலித்த அபஸ்வரந்தான் கிழவரின் செவிகளை யும் உள்ளத்தையுமே தீயாக எரித்து விட்டன என்று கலைஞர்கள் கூறினார்கள். அரச விசுவாசமுள்ள வயோதிகரா யிருந்ததால், வலம்புரித் தீவுக்குக் கேடு வரப் போகிறதே என்று எண்ணியதும் அந்த அதிர்ச்சியிலே கிழவரின் உயிர் பிரிந்து விட்டது என்று அரசப் பிரதா னிகள் பேசினார்கள்.

இந்த வார்த்தைகளை யெல்லாம் சாருகேசி மௌனமாகக் கேட்டுக் கண்ணீர் வடித்தாள். அவள் வடித்த கண்ணீருக்கு அப்பால், கண்ணீரை யும் கடந்த ஓர் இரகசியம் அவ ளுடைய உடம்பிலே ஒரு சிசுவாக வளர்ந்து வந்தது! காரணம் சாருகேசி அப்பொழுது கர்ப்பவதி!

## பதினொரு அத்தியாயம்

# ஒற்றன் வந்தான்!

சமணத் துறவி சொன்ன கதையை இதுவரையில் மௌனமாகக் கேட்டுக் கொண்டு வந்த சித்திராங்க பூபதி, சாருகேசியின் தாய்மை நிலையைப் பற்றிய இடம் வந்ததும், ''என்ன பரி தாபம்!'' என்று சொல்லிக் கொண்டே கண் கலங்கினான்.

''என்ன இளவரசே! அதற்குள் உருகிப் போகிறீர்கள்! கதையே இனி மேல் அல்லவா இருக்கிறது!'' என்றார் துறவி சிரித்துக் கொண்டே!

''இதைவிடப் பெரிய அநியாயம் இன்னும் இருக்கிறதா?'' என்று கேட் டான் சித்திராங்கன்.

''நியாயம் அநியாயம் என்றெல்லாம் பேசாதீர்கள்! அது பெரிய வார்த்தை. உலகில் நடக்கிற எந்த அநியாயத்தை ஆராய்ந்து பார்த்தாலும் அதற்கு ஒரு நியாயம் புலப்படும்!'' என்று குறும்புத் தனமாகச் சொல்லிக் கொண்டே பூபதியின் கோபத்தை அதிகப்படுத்தி னார் துறவி. அவருடைய குறும்பின் காரணம் என்ன என்று தெரியாத முறையில், சித்திராங்க பூபதி ஆவேசத் தோடு கேட்டான்: ''உங்களைப் போன்ற துறவிகள்கூட இப்படிப் பேச ஆரம்பித்து விட்டால், பிறகு இந்த உலகில் நியாயம் அநியாயம் என்று எடுத்துச் சொல்வதற்கே ஆள் இல்லா மல் போய் விடுமே! இதெல்லாம் என்ன அர்த்தம் துறவிகளே!''

இவ்வாறு சித்திராங்க பூபதி கேட்ட தும், துறவிக்கு முகத்திலே திருப்தியின் அறிகுறி தோன்றியது.

''இளவரசே! கோபப்படுங்கள். நன் றாகக் கோபப்படுங்கள். நீங்கள் சந்திர சூடனுக்காக அநுதாபப்பட்டு விடக் கூடாதே என்றுதான் கவலைப்பட்டேன். ஏனென்றால் உங்களைப் போல அவனுக் கும் பேரியாழிலே பிடிப்பு உண்டல் லவா! அதனால்தான் பயந்தேன். இனி




# ஒரு ரேடியோ இருப்பதால் உங்கள் வீட்டில் குதூகலம் நிலவுகிறது!

ரேடியோ மூலம் வரும் சங்கீதத்தை ரஸிப்பதால் உங்களுக்கு பொழுது போவதே தெரிவதில்லை. ஒரு சிறு விசையைத் திருப்புவதால், பலவித புது நிகழ்ச்சிகளை நீங்கள் கேட்டு ஆனந்திக்க முடிகிறது.

மேலும் ஞாபகமிருக்கட்டும்—நீங்கள் மின்சார சக்தியில்லாத இடத்திலிருந்தாலும், பாட்டரி சக்தியால் இயங்கும் ரேடியோ மூலம் நீங்கள் அதே ஆனந்தத்தை அடையலாம்.

*இன்றே உங்கள் ரேடியோ வியாபாரியிடம் இதைப்பற்றி கேளுங்கள்*

"NINE LIVES"
TRADE-MARK

**EVEREADY**
TRADE MARK

'எவரெடி' ரேடியோ பாட்டரிகள்

நாஷனல் கார்பன் தயாரிப்புகள்

NCM 9k

## பாரதி வாக்கு

தமிழா! தெய்வத்தை நம்பு. பயப்படாதே. உனக்கு நல்ல காலம் வருகின்றது.

ஊர்தோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் போட்டு மேல் நாட்டு சாஸ்திரங்களையெல்லாம் தமிழில் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்.

வேதங்களை நம்பு. அவற்றின் பொருளைத் தெரிந்து கொண்டு பின் நம்பு. புராணங்களைக் கேட்டுப் பயன் அடைந்து கொள். புராணங்களை வேதங்களாக நினைத்து மடமைகள் பேசி விலங்குகள் போல் நடந்து கொள்ளாதே!

மேல் பயமில்லை. ஆனால் ஒன்று. கதை முழுவதையும் சொன்ன பிறகு, எந்த அநியாயமான காரியத்துக்கும் நியாயமான காரணங்களைச் சொல்லிச் சமாதானம் தேடக் கூடாது! அந்த உறுதி மட்டும் உங்களுக்கு இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்! ஏனென்றால் சந்திர சூடன் செய்த காரியம் அத்தனை பிசகானது!'' என்றார் சமணத் துறவி.

''அப்படியா!'' என்று வியப்போடு கேட்டான் பூபதி. துறவி சொன்னார்:

''இளவரசே! எந்தப் பொருளிடத்திலும் அளவுக்கு மீறி ஆசை வைத்தால் அது விபரீதத்திலேதான் முடியும். எத்தனை பெரிய பேரியாழாக இருந்தாலும் சரி. ஆசை என்று ஒன்று ஏற்பட்டு விட்டால் தொலைந்தது காரியம். ஆசைதான் எல்லாவற்றிற்கும் வித்து என்பது சமண சித்தாந்தம். அந்தச் சித்தாந்தத்துக்கு உதாரணமாக நடந்து கொண்டான் சந்திரசூடன்.

நீலமேக யாழ்ப்பாணர் இந்த உலகிலிருந்து மறைந்த மறுவருஷம் சாருகேசிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தை தந்தையின் சாயலும் தாயின் சாயலும் ஒன்றுகூடி உருவெடுத்திருந்ததாக எல்லாரும் ஒருமுகமாக அபிப்பிராயப்பட்டார்கள். என்றாலும் அந்தக் குழந்தையின் முகத் தோற்றத்தில் வேறு யாருக்கும் பிடிபடாத ஓர் இரகசியம் அதன் பெற்றோர்களுக்கு மட்டும், சந்திரசூடனுக்கும் சாருகேசிக்கும் இருவருக்கும் மட்டும், நன்றாகத் தெரிந்தது! பசலை முகத்திலே தோன்றுகிற விவரிக்க முடியாத பல பளிங்குச் சாயல்களுக்கு மத்தியிலே அந்தப் பெண் குழந்தை ''தாத்தாத்தா'' என்று உதடுகளைப் பொக்கையாக வைத்துக் கொண்டு சில சமயங்களிலே ஒரு மாயச் சிரிப்பு சிரிக்கும். அந்தச் சிரிப்பிலே ஒரு மின்னல் துவளும். அந்த மின்னலைக் கூர்ந்து பார்த்தால் அது, ஒரு வருஷத்துக்கு முன்னால் நீலமேக யாழ்ப்பாணரின் முகத்திலே கடைசி முறையாக நெளிந்ததே அதே மின்னல்! அந்த மின்னலைச் சாருகேசி பல முறை கவனித்தாள். வெளியே காட்டிக் கொள்ளவில்லை. உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டாள். ஆனால் சந்திர சூடனோ? அவனால் அப்படியிருக்க முடியவில்லை.

நீலமேக யாழ்ப்பாணர் மறைந்த தினத்திலிருந்து சந்திரசூடன் இரவு சரியாக உறங்குவதில்லை. படுத்திருக்கும் போதே திடீரென்று பாணரின் முகம் அவருடைய அந்த மின்னலின் சாயல்—பாணர் என்ற நீலமேகத்திலே துவண்ட அந்த மின்னலின் சாயல்—உள்ளத்தை என்னவோ செய்யும். தன்னுடைய தவறுகளையெல்லாம் நோக்கி ஓர் அனற் சிரிப்புச் சிரிப்பது போலச் சந்திரசூடனுடைய உள்ளத்தில் நெருப்பைக் கொட்டும் அது! அப்படியே எழுந்து கடற்கரையோரமாக நடந்து சென்று, விடிந்த பிறகுதான் வீடு திரும்புவான் அவன். இப்படிப் பல இரவுகள் நடந்திருக்கிறது. ஆனால் இப்பொழுதோ?....

ஒரு தந்தையின் அன்போடு தன் குழந்தையைக் கையிலே எடுப்பான் சந்திரசூடன். மறு கணம் அதனுடைய சிரிப்பு அவனை என்னவோ செய்யும். குழந்தையைச் சாருகேசியிடம் கொடுத்து விட்டு அப்படியே இடிந்து போய்ப் பூமியிலே இருந்து விடுவான் சந்திரசூடன்! சில இரவுகளில் தூங்குகிற குழந்தை விழித்துக் கொண்டு ''குவா குவா'' என்று அழும். அந்த அழுகை ஒலி சந்திரசூடனுடைய செவிகளிலே நீலமேக யாழ்ப்பாணரின் இதய ஒலி போல் கேட்கும்! வேறு சில இரவுகளில் கண்ணயர்ந்து கொண்டிருக்கும் குழந்தையின் முகத்திலே ஏதோ கனவு உலகிலிருந்து பின்னி வருகிற புன்முறுவலின் இரேகை தெரியும். அதைப் பார்க்கும் போது, சந்திரசூடனுடைய உள்ளத்தில் மின்னல் மின்னும்; இடி இடிக்கும்!

நாளாக நாளாகச் சந்திரசூடனின் வேதனையும் சஞ்சலமும் அதிகரித்தன. நடு ஜாமத்தில் திடீரென்று குழந்தை அழும் போது பதறி விழிப்பான் சந்திரசூடன். பிறகு உறங்கவே மாட்டான்! இருளோடு கிழவர் சிரிப்பது போலக்

கேட்கும். அந்தச் சிரிப்பின் ஒலி சுவர்களிலே எதிரொலி செய்யும். அந்த எதிரொலி சற்று நேரத்துக்கெல்லாம் பெரிய குகைகளிலே கேட்கும் பேரொலியாகச் செவியைத் தாக்கும்! ஒரு சிரிப்பு பல சிரிப்பாகப் பெருகி எதிரொலி செய்து, ஏக காலத்தில் ஆயிரம் பேர் கசப்பையும், வெறுப்பையும், சிரிப்பாகச் சிரித்துக் கொட்டுவது போலக் கேட்கும். உலகமே தன்னைப் பார்த்துச் சிரிப்பது போல எண்ணிப் படுக்கையிலிருந்து எழுந்து செல்லும் சந்திரசூடன், இரண்டு நாள் மூன்று நாள் வீட்டின் பக்கமே வரமாட்டான்!

இப்படியாகச் சொல்லொணாத வேதனையிலே சிக்கித் தவித்துச் சந்திரசூடன் அவஸ்தையனுபவித்துக் கொண்டிருந்த நாட்களிலே, ஓர் இரவில் அவன் கடலின் கரையோரமாக நடந்து சென்ற போது, பின்னால் யாரோ தொடர்ந்து வருவதைக் கவனித்து விட்டான்! அப்படியே திரும்பியதும் அந்த மனிதன் ஓட ஆரம்பித்தான். சந்திரசூடனுக்கு ஒரு பெரும் ஆவேசமே வந்தது. பின் தொடர்ந்த மனிதன் ஓடிப் படர்வதற்குள் அவன் மேல் வேகமாகப் பாய்ந்து பிடித்தான் சந்திரசூடன்.

"உண்மையைச் சொல். முதன் முதலாக நீ இன்றுதான் என்னைப் பின் தொடர்கிறாயா?"

இவ்வாறு கேட்டான் சந்திரசூடன். அவனுடைய பிடி உடும்புப் பிடியாக இருந்தது. பிடிபட்ட மனிதனுக்கு!

"இல்லை! கடந்த ஒரு மாதமாகவே நான் உங்களைப் பின் தொடர்கிறேன்!" என்று திருத்தமான மொழிகளிலே திருத்தமாகப் பேசினான் அந்த மனிதன். சந்திரசூடன் ஒருகணம் நிதானித்தான். பிறகு கேட்டான்: "தம்பீ! உண்மையைச் சொல்லி விடு. நீ செந்தமிழ் நாட்டிலிருந்துதானே வருகிறாய்? பல்லவ இலச்சினையாகிய நந்தியின் பேரில் ஆணையாகக் கேட்கிறேன். உண்மையைச் சொல். நீ ராஜசிம்ம மகாராஜனால் அனுப்பப்பட்ட ஒற்றன்தானே?"

"ஆமாம். ஆனால் விபரீத நோக்கம் ஏதும் இல்லை! தமிழ் நாட்டிலிருந்து தாங்கள் இங்கே வந்து இத்தனை காலம் ஆகியும்—"

"அதெல்லாம் சரி. விபரீதமான நோக்கம் ஏதும் இல்லையென்றால் ஏன் ஒரு மாதமாகியும் என்னை வந்து பார்க்கவில்லை? ஏன் ஒற்றனாகவே என்னைப் பின் தொடருகிறாய்?"

"மந்திரி குமாரா! மன்னிக்க வேண்டும். தாங்கள் இங்கு வந்து சேர்ந்த பிறகு ஏற்பட்டுள்ள மாறுதல்களினால் தங்களுடைய மன நிலை எவ்வாறு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியதல்லவா எனது முதற்கடமை. தங்கள் நிலைமையைத் தெரிந்து கொள்ளாமல் நான் தங்களை வந்து காண்பது எப்படி?" என்றான் பல்லவ ஒற்றன்.

"தம்பீ! நீ சொன்னது சரியான வார்த்தை. ஒற்றன் என்ற முறையில் பல்லவ குலத்தின் திறமைக்கு ஏற்ற முறையிலேதான் நடந்து கொண்டிருக்கிறாய். அது பற்றி மகிழ்ச்சிதான். இந்த ஒரு மாதத்தில் நீ என் மன நிலையை எப்படிப் புரிந்து கொண்டிருக்கிறாய்? அதைச் சொல், பார்க்கலாம்!" என்று கேட்டான் சந்திரசூடன் ஒற்றனைப் பார்த்து.

"சந்திரசூடரே! தாங்கள் அடிக்கடி இரவு நேரங்களில் இப்படித் தனியாக



நடந்து செல்வதைக் காண்கிறேன். தங்களுடைய நடையிலே தயக்கமும் சொல்லொணாத வேதனையின் அறிகுறியும் தெரிகின்றன. இந்த ஒரு மாதமும் நானும் பின் தொடர்ந்து வந்து கொண்டுதான் இருக்கிறேன். ஒரு நாளாவது தாங்கள் என்னைக் கண்டு கொள்ள முடியவில்லை. அத்தனை தூரம் தங்கள் கவனம் அனைத்தும் அந்த வேதனையிலே சிக்கியிருந்திருக்கிறது!" என்றான் பல்லவ ஒற்றன்.

"அப்படியானால் இன்று?..." என்று பளிச்செனக் கேட்டான் சந்திரசூடன்.

"இன்று வேதனைக்கு முடிவு கண்டு விட்டீர்கள். அதனால்தான் என்னையும் கண்டு பிடித்து விட்டீர்கள்!" என்றான் ஒற்றன். அவனுடைய வார்த்தைகளைப் பாராட்டு கலந்த மகிழ்ச்சியோடு கேட்டுக் கொண்டு வந்த சந்திரசூடன்

பல்லவ ஒற்றனின் முதுகிலே தட்டிய வண்ணம் கேட்டான் :

"தம்பி ! நீ என்ன நினைக்கிறாய் ? இப்பொழுது என்னுடைய மன நிலை என்ன தெரியுமா ?"

"ஐயா ! நான் கூசாமல் பதில் சொல்லலாம் அல்லவா ?"

"தாராளமாகச் சொல். தயங்க வேண்டாம்" என்றான் சந்திரசூடன்.

"சந்திரசூடரே ! தங்களுடைய பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டு நாளை மறுநாள் இதே நேரத்தில் இதே இடத்தில் உங்களை வந்து சந்திக்கிறேன். சரிதானா ?"

இவ்வாறு ஒற்றன் கேட்டதும் சந்திரசூடன் அப்படியே நடையை நிறுத்தித் திகைத்து நின்று விட்டான்.

"தம்பி ! ஒன்று கேட்கிறேன், தெளிவாகச் சொல். ராஜசிம்ம மகாராஜா என்னிடம் கோபமாக இல்லையே ?"

இந்தக் கேள்விக்கு ஒற்றன் பளீரென்று பதில் சொன்னான்.

"என்ன கேள்வி இது ! ராஜசிம்மருடைய உள்ளத்தில் மறந்துங்கூடத் தங்களிடம் கோபம் உண்டாகுமா ? தங்களையும் பேரியாழையும் எத்தனை ஆவலோடு அவர் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார் தெரியுமா !"

"அப்படியா ? இத்தனை காலமாகியும் யாழினிடத்தில் அவருக்கு இன்னும் அத்தனை ஆவல் நீடித்திருக்கிறதா ?" என்று கேட்டான் சந்திரசூடன்.

"ஆவலா ? அந்த ஆவல் நாளுக்கு நாள் அதிகரித்துத்தான் வருகிறது. மகேந்திரவர்மருடைய இசைக் கல்வெட்டுக்களிலே காணப்படுகிற ராக லக்ஷணங்களுக்குப் பேரியாழிலே ஆதாரம் கிடைக்கும் என்று சமீபத்தில் ஓர் ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருக்கிறார். வடமொழிப் புலவர்களும் தமிழ்ப் புலவர்களும் பேரியாழைப் பற்றிய இந்த ஆசையைத் தினந்தோறும் அதிகப்படுத்தி வருகிறார்கள் !" என்றான் பல்லவ ஒற்றன்.

"அப்படியானால் என்னை விடப் பேரியாழுக்குத்தான் ராஜசிம்மன் சபையில் நல்ல வரவேற்புக் கிடைக்கும்! அப்படித் தானே?" என்றான் சந்திரசூடன். ஒற்றன் சிரித்தான்.

"தம்பி! நான் ஒன்று கேட்கிறேன். நன்றாக யோசித்துத் தைரியமாகப் பதில் சொல். இப்பொழுது பேரியாழ் இல்லாமல் நான் மட்டும் தமிழ் நாட்டுக்கு வந்தால் எனக்கு வெகுமதி கிடைக்குமா ? அல்லது தண்டனை கிடைக்குமா ?"

இப்படிக் கேட்டுக்கொண்டே கடலின் பாறைகளுக்கு வந்து விட்டான் சந்திரசூடன். ஒற்றனும் அவனோடு நடந்து வந்து விட்டான்.

வலம்புரித்தீவின் அணிகலனாகவும், தீப ஜோதியாகவும் விளங்குகிற கலங்கரை விளக்கம் கடலுக்குள்ளே கற்றை கற்றையாக ஒளிக்கதிர்களை வீசி எறிந்து சுழன்று கொண்டிருந்தது. அதன் அடித்தளத்தில், கலங்கரை விளக்கத்தைச் சுற்றி எப்பொழுதும் வட்டமாக இருள் தானே கவிந்திருக்கும்; அந்த நிழலில் நடந்து சென்று சந்திரசூடனும் பல்லவ ஒற்றனும் பாறைகளிலே அமர்ந்து கொண்டார்கள். (தொடரும்)

## இனிமையாகப் பேசு !

பாரதியாருக்கு ஹார்மோனியம் என்றால் பிடிக்காது. அத்துடன், "பேசும்போது கிளிபோல் பேசவேண்டும்; கர்ணகடூரமாகப் பேசக்கூடாது; பேச்சே ஒரு சங்கீதம் போல் அமைய வேண்டும்" என்பார்.

ஒரு நாள் அவருடைய மனைவியும் குழந்தைகளும் ஏதோ ஒரு விஷயத்தைப் பற்றி இரைந்து கடுமையாகப் பேசிக் கொண்டிருந்தார்களாம். அப்போது பாரதியார் மெதுவாக உள்ளே போய் ஹார்மோனியத்தை எடுத்து, எல்லாக் கட்டைகளையும் அழுத்திக் கொண்டு சுருதி போட்டார். பலமான ஓசை உண்டாயிற்று. எல்லோரும் திடுக்கிட்டுத் திரும்பி, "ஏன் இப்படித் திடீரென்று ஹார்மோனியம் வாசிக்கக் கிளம்பி விட்டீர்கள் ?" என்று கேட்டார்கள்.

பாரதியார் சிரித்துக் கொண்டே, "உங்களுடைய சம்பாஷணை எனக்கு இப்படித்தான் இருந்தது. இனி இப்படி அபஸ்வரமாகப் பேசாதீர்கள் !" என்றாராம்.

# ஆடை அலங்காரம்

அன்புமிக்க சுஜாதா,

உன் கடிதத்தில், துணிகள் வாங்குவதைப் பற்றி எழுதிக் கேட்டிருக்கிருய்.

ஆடைகள் தேசத்துக்குத் தகுந்தபடி மாறுபடுகின்றன. அடுத்தபடி அவரவர்கள் நிலைக்குத் தகுந்தபடி ஆடைகள் வாங்குவது என்று ஏற்படுகிறது. மூன்ருவதாக வயதுக்கு ஏற்ற துணிகள், நிறம் என்று ஓரளவு பார்க்கத்தான் வேண்டி வருகிறது. கடைசியாகப் போலி கௌரவத்துக்காகவும் வாங்குகிறோம். உணவு எப்படி இன்றியமையாததோ, அப்படியேதான் ஆடைகள். எனவே அந்த விஷயத்திலும் விசேஷ கவனம் செலுத்த வேண்டியதுதான்.

மேல் நாட்டில் உடைகளுக்கு அதிக கௌரவம் கொடுக்கிருர்கள். அவர்கள் கல்யாணப் பெண்ணுக்குத் தைக்கும் 'கௌன்' பிரமாதமாக இருக்கும். அதற்காகப் பிரசித்தி பெற்ற தையல்காரர்களைத் தேர்ந்தெடுப்பார்கள்.

நாம் விலை அதிகம் கொடுத்துத்தான் வாங்குகிறோம். அதைச் சரியானபடி உபயோகிக்கும் முறை போதாது. விலை மதிப்புள்ள உடைகள் விசேஷ தினங்களுக்கு இயன்ற அளவு வாங்கிக் கொள்ளலாம். கல்யாணம், பண்டிகை போன்ற வைபவங்களில் நம்முடைய சந்தோஷத்தைக் காட்ட விருந்து சாப்பிடுகிறோம். அப்படியே நல்ல ஆடைகளை உடுத்துவதும் நம் மகிழ்ச்சியை அறிவிக்கும் நோக்கம்தான். விலை மதிப்புள்ள துணிகளை வாங்கி அவற்றை நன்ருகத் தைக்காமல், அதற்குரிய மரியாதை கொடுக்காமல் சுருட்டிப் போடுவது வருந்தத்தக்கது. சிலருக்கு எதிலுமே வாங்கும் வரையில் ஆசை இருக்கும். பிறகு அதில் அக்கறை குறைந்து விடுகிறது. 'தேவையான துணிகள் போதுமா? அபரிமிதமாக (வசதி இருந்தாலும்) வாங்கிக் கொள்வதா?' என்பது தற்காலப் பெண்களின் பிரச்னையாக இருக்கிறது.

ஒரு இளம் பெண் பீரோ நிறையப் புடவைகள் இருப்பதால் எதைக் கட்டிக் கொள்வதென்று தெரியாமல் வருந்துவதாக அந்தப் பெண்ணின் அன்னை சொன்னுள். 'இதில் அவளுக்கு ஏன் இத்தகைய வருத்தம் ஏற்பட வேண்டும்?' என்பது வியப்பா யிருக்கிறது. ஆடைகள் மிதமாக இருந்தால் போதுமானது.

தினசரி உபயோகிக்கும் உடைகள் எளியனவாகவும், சுத்தமாகவும் இருக்க வேண்டும். எனக்குத் தெரிந்த மிகவும் கண்ணியம் வாய்ந்த ஒரு குடும்பத்தினரை விடுமுறை நாட்களில் பார்த்திருக்கிறேன். குடும்பத் தலைவர் அந்த வாரத்துக்குத் தேவையான துணிகளைச் சோப்பு போட்டுத் துவைப்பார். அந்த அம்மாள் உலர்த்துவார். உத்தியோகம் பார்க்கும் பெண் 'இஸ்திரி' போடுவாள். சின்னப் பிள்ளைகள் மடித்து எடுத்து அடுக்கி விடுவார்கள். அவர்கள் எப்பொழுதும், சுத்தமாகவும் நன்ருகவும் உடுத்தி யிருப்பதைக் கண்டு நான் ஆச்சரியப்படுவேன். சுத்தம் முக்கியம். 'கந்தையானாலும் கசக்கிக் கட்டு' என்பது முதுமொழி யல்லவா? நம் ஆடைகளை நாமே தோய்த்துக் கட்ட வேண்டும். அதில் தனி ஆனந்தம் இருக்கத்தான் செய்கிறது. அதோடு, நம் வேலையை நாம் செய்து கொள்ளும் போது பெருமிதம் உண்டாகிறது.

வடநாட்டுச் சகோதரிகள் எவ்வளவு பணக்காரர்களாக இருந்தாலும் பத்து ரூபாய் மதிப்புள்ள புடவைகளைத் தான் தினசரி உடுத்துகிருர்கள். அவர்கள் ஆடைகளுக்காகச் செலவழிப்பது மிகக் குறைவு. தினசரி துணிகளையும் நாம் நன்ருக உபயோகிக்கப் பழக்கிக் கொள்ள வேண்டிய அவசியமல்லவா?

ஒருவரை முதன் முதலாகப் பார்க்கும்போது அவர்களுடைய உடைகளிலிருந்து அவர்கள் கண்ணியத்தை நிர்ணயிக்கிறோம். கதர் உடைகளைப் போட்டுக் கொண்டு உலகத்தின் எந்தப் பாகத்துக்குப் போனாலும், ''காந்தி ஊரிலிருந்து வந்தவர்களா? இந்தியாவிலிருந்து வருபவர்களா?'' என்று கௌரவமாக விசாரிக்கிருர்கள். 'ஆள் பாதி ஆடை பாதி' என்று பழமொழி ஒன்று வழங்கி வருவதை நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும். சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி உடை அணிவதும் ஒரு கலை.

நாம் அணியும் முறை பிறர் நம்மைக் கண்டு மரியாதை செய்யும் வகையில் அமைய வேண்டும். பிறர் நம் ஆடைகளை விசேஷமாக நோக்கும்படி கவர்ச்சிகரமான வகையில் அணிய வேண்டாம் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இப்படிக்கு,

பூமாதேவி

# வஸந்தத்தின் புத்துணர்ச்சி

## உங்களுக்கு இன்றும்....என்றும்!




காஷ்மீர்பொக்கே டால்கம் பௌடர் சுத்த மனோரம்மியமே! மிக்க மிருதுவாக உங்கள் உடலில் வஸந்தநாள் காலையின் புத்துணர்ச்சியை அள்ளித் தெளிக்கிறது- உடலை ரம்மியமணத்துடனும் குளிர்ச்சியுடனும் மணிக்கணக்காக வைத்திருக்கிறது. அதிகப்படி ஈரத்தை உறிஞ்சுகிறது ... அரிப்பையும் எரிச்சலையும் தவிர்க்கிறது ... உங்கள் வசீகரத்தையும் மென்மையையும் பன்மடங் காக்குகிறது.

# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பௌடர்

*ஆண்கள் விரும்பும் நறுமணத்துடன்*

ஒரு கால்கேட்—பாமாலிவ் தயாரிப்பு

கால்கேட் 1806 முதல் தரத்துக்குப் பெயர் போனது

**கா**டே நடுநடுங்கும்படி கர்ஜித்து, தன் மீது பாயத் தயாராக நின்ற வேங்கையைக் கண்ட குமாரசிம்மன், சற்றும் தாமதியாமல் குதிரை மேலிருந்து தரையில் குதித்தான். அவன் குதித்தவுடன் அவன் மேல் பாய்ந்தது வேங்கை. தன் கையிலிருந்த வேலைக் குறி பார்த்து - எய்தான். வேல் வேங்கையின் முதுகில் பாய்ந்தது. குத்துண்ட வேங்கை அதிக ஆக்ரோஷத்துடன் அவனைத் தாக்கியது. வேங்கையும் மனிதனும் ஒருவரை யொருவர் தாக்கிக் கட்டிப் புரண்டனர். சற்று நேரம் வெகு தீவிரமாகப் போராடியது வேங்கை. பிறகு செருகப்பட்டிருந்த வேலின் வேதனை அதிகரிக்கவே பலமிழந்தது வேங்கை.

அதே சமயம், குமாரசிம்மன் தன் குத்து வாளால் வேங்கையின் கழுத்தில் குத்தினான். பலம் மிகுந்த குத்தைத் தாளாது ஒரு புறம் சாய்ந்த வேங்கையின் அடிவயிற்றில் 'சர்' ரென்று எங்கே யிருந்து வந்ததென்று தெரியாத இரு அம்புகள் வந்து பாய்ந்தன. வேங்கை பெரிய குரலில் ஒரு முறை அழுது விட்டு மீளா நித்திரையில் ஆழ்ந்தது! எதிர் பாராத இக்காட்சியைக் கண்ட குமார சிம்மன், அம்பெய்த வீரனைக் காண வேண்டுமென்ற ஆவல் மிகுந்தவனாகத் தலையைத் தூக்கினான். தலையைத் தூக்கியவன் ஆச்சரியத்தினால் திகைத்து நின்றான்!

அவன் எதிரே கம்பீரமான குதிரையில் கையில் வில்லும், அம்பும் கொண்ட ஒரு அழகான மங்கை உட்கார்ந்திருந்தாள். அவளுடைய உடைகள் வேட்டைக்கு வரும் வீரர்களின் உடையை ஒத்திருந்தது. கவசம் அணிந்து இடுப்பில் வாளுடன் காட்சியளித்தாள் அம்மங்கை. மங்கையைக் கண்ட குமார சிம்மன், வேங்கையை ஒரு முறை அசைத்துப் பார்த்தான். வேங்கை போய் விட்டது! பிறகு அதன் முதுகில் செருகியிருந்த தன் வேலை அசைத்து எடுத்தான். குருதியுடன் வெளி வந்தது அவனுடைய வேல். வேலைக் கையில் எடுத்துக் கொண்ட அவன் மங்கையின் அருகில் வந்தான். குமார சிம்மனின் முகத்தைக் கண்ட அம்மங்கை ஒரு கணம் தன்னை மறந்தாள். வீரம் ஒளி வீசும் குமார சிம்மனின் கண்கள் அவளை ஒரு முறை ஊடுருவிப் பார்த்தன.

"தக்க சமயத்தில் என்னைக் காப்பாற்றி யதுபற்றி, தங்களுக்கு என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறேன்!" என்றான் குமாரசிம்மன். அவன் குரலைக் கேட்ட மங்கை தன் நிலைக்கு வந்தாள். பிடுக்கும் ஒய்யாரமும் ஒருங்கே தோன்றக் குதிரையிலிருந்து கீழே குதித்தாள். "..இல்லாவிடில் நீங்களே கொன்றிருப்பீர்கள்! நான்தான் அவசரப்பட்டு விட்டேன். இரண்டு அம்புகள் வீணாயின!"

"வீண் அல்ல! அந்த அம்புகளால் தான் வேங்கை பரலோகம் அனுப்பப் பட்டது! தங்கள் உதவிக்கு நன்றி! தங்களை யாரென்று அறியலாமா?" என்றான் குமாரசிம்மன்.

"என்னைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ள வேண்டிய காரணம்?" என்றாள் மங்கை.

"உண்டு! தன்னைக் காத்தவரின் பெயரை அறிய ஆவல் ஒவ்வொருவருக்கும் உண்டல்லவா! அந்த ஆவலினால்தான் கேட்டேன். விருப்பமிருந்தால் சொல்லுங்கள். இல்லையேல் வற்புறுத்த வில்லை!"

"வற்புறுத்தினாலும் ஒன்றும் கிடைக்காது! நான் வருகிறேன்!"—வெகு வேகமாகக் குதிரை மீது ஏறினாள். ஆனால் அந்தோ! கால் நழுவி விட்டது! கீழே விழும் சமயம்! திடீரெனக் குமாரசிம்மன் விழ இருந்தவளை அப்படியே தாங்கிக் கொண்டான். அந்த வேகத்தில் கையிலிருந்த வேல் நழுவி விட்டது. "குதிரை சவாரி செய்யும் பொழுது அதிக





ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஏறும் பொழுது இன்னும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!'' என்று கூறிய குமாரசிம்மன் தன் பிடியிலிருந்த மங்கையைப் பார்த்தான்.

''தங்கள் உபதேசத்துக்கு நன்றி!'' என்று கூறிய அவள், மறுகணம் குதிரையைக் கண்டி விட்டான். குதிரை நாலுகால் பாய்ச்சலில் கிளம்பியது! உயர்ந்த ஜாதிக் குதிரையாகையால் கண்மூடித் திறக்குமுன் வெகு தூரம் சென்றுவிட்டது. குதிரை செல்லும் திக்கையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த குமாரசிம்மன் தன் நினைவு வந்தவுடனே, தன் குதிரையில் ஏறித் தன் வழி செலுத்தினான்.

யாதொரு தடங்கலுமின்றிக் குதிரை ஒரு மலையின் அடிவாரத்தில் நின்றது. குதிரையை நிறுத்தி விட்டு உட்புகுந்தான் குமாரசிம்மன். மலையின் அடிவாரத்தில் பெரிய குகையினுள் சென்றான். அங்கே பீமசேனன் போன்ற இருவர் உருவின வாளோடு காத்து நின்றனர். அவர்கள் உள்ளே நுழைந்த குமாரசிம்மனைக் கண்டதும் மரியாதையோடு வணங்கினர்.

''எல்லோரும் வந்து விட்டார்களா?'' என்றான் குமாரசிம்மன்



'' ஆம் பிரபு! தங்களுக்காகக் காத்திருக்கிறார்கள்!'' என்றனர் இருவரும்.

தன் மேலங்கியை வாகவமாக எடுத்துக்கீழே போட்ட குமாரசிம்மன் வேகமாக மற்றொரு வாசிற்படியை அடைந்தான். அங்கே விசாலமான கூடம் ஒன்று இருந்தது. அங்கே பல மனிதர்கள் கூட்டமாகக் கூடியிருந்தனர். அவர்கள் யாவரும் குமாரசிம்மனைக் கண்டதும்'' வாழ்க குமாரசிம்மர்! வாழ்க சித்தூர் சுதந்திரம்! ஜெய் பவானி!'' என்று பலமாகக் கோஷமிட்டனா.

நண்பர்களின் ஆரவாரங்களைக் கேட்ட குமாரசிம்மன், அன்போடு அனைவருக்கும் தலை வணங்கினான். பிறகு அங்கு போடப் பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தான். அவன் கண்கள் ஒரு முறை கூட்டத்தைச் சுழன்று பார்த்தன. அவன் முகம் மாறுபட்டது.

'' ஜெயசிம்மா! எங்கே பிரபாகரன்? ஏன் கூட்டத்துக்கு அவன் வரவில்லை! அவனில்லாமலா கூட்டம்! அவன் இங்கே வராததற்குக் காரணம் என்ன தெரியுமா?''

'' காரணம் எங்களுக்குத் தெரியாது! பிரபாகர சிம்மனைத் தவிர, மற்ற யாவரும் வந்து விட்டார்கள்! பிரபாகரன் எவ்வளவு முக்கியம் என்று எங்களுக்குத் தெரியும்!''

'' ஏன் அவன் வரவில்லை! ஏதாவது ஆபத்தாக இருக்குமோ.... ஒரு வேளை....!''

'' விரோதிகளிடம் அகப்பட்டிருப்பாரோ என்று பயப்படுகிறீர்களா? பிரபாகரசிம்மன் சாதாரண வீரனல்ல! மாவீரன்! அவனுக்குத் தீங்கிழைக்க இந்த நாட்டில் யாருக்குமே முடியாது! அவருடைய வீரத்தில் எனக்குச் சற்றும் சந்தேகம் இல்லை! வராததற்குக் காரணம் பல இருக்கலாம்!'' என்று கூறியவாறு குமாரசிம்மனின் அருகில் வந்த ஜெயசிம்மன் திடுக்கிட்டான். '' தலைவ!' இதென்ன! இரத்த காயங்கள்! யார் தங்களைத் தாக்கியது?''

இதைக் கேட்டதுதான் தாமதம், குழுமியிருந்த அனைவரும் ஓடிவந்து குமாரசிம்மனைச் சூழ்ந்து கொண்டனர். ஒவ்வொருவரும் ஆத்திரத்தோடு துடித்து நின்றனர். தலைவனைத் தாக்கிய விரோதியைக் கண்டதுண்டமாக வெட்டிபோடத் தயாராக நின்றார்கள்.

'' பொறு! ஜெயா! என்னை விரோதிகள் தாக்கவில்லை! வேங்கைதான் தாக்கியது!''

'' வேங்கையா! கொன்று விட்டீர்களா? உங்கள் வீரம் வாழ்க!''என்றான் ஜெயசிம்மன்.

'' வேங்கையால் தாக்கப்பட்ட நான், ஒரு மங்கையால் காப்பாற்றப்பட்டேன்! வேங்கையும் இறந்தது! அது இருக்கட்டும். நேரமாகி விட்டது. நண்பர்களே! நாம் கூட்டத்தை ஆரம்பிப்போம்!'' என்றான் குமாரசிம்மன். அனைவரும் தத்தம் இடத்தில் சென்று அமர்ந்தனர். குமாரசிம்மன் தன் ஆசனத்தை விட்டு எழுந்திருந்தான்.

'' என் அன்புக்குரிய அருமை நண்பர்களே! இப்பொழுது நாம் ஈடுபட்டிருக்கும் சுதந்திரப் போர் எவ்வளவு அபாயகரமானது என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும்! நண்பர்களே! மன்னன் செங்கில்காநுடைய கொடுங்கோன்மை அளவுக்கு மீறிவிட்டது! வலிமை பொருந்திய நம் படையை இரு பகுதிகளாகப்

# கால்கேட் குளோரோபில்*
# ஈறுகளை பலப்படுத்துகிறது
## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப் பலப்படுத்துகிறது.

வேறு சாதாரண பற்பசையை விட மிகமிகத் தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

கால்கேட் குளோரேர்பில் டூத்பேஸ்டை ஒவ்வொருமுறையும், சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற்பசையிலும் இதைவிட வீரிய குளோரோபில்**

குழந்தைகள் விரும்பும் மதுரமான சுவை.
மதுரமான இனிய சுவையுள்ள கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை குழந்தைகள்கூட விரும்புவார்கள்.




**குளோரோபில் டூத்பேஸ்டின் பூரண நன்மைகளைத்தரும் விசேஷ கால்கேட் சூத்திரம்!**

நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

பிரிக்கிறேன்! ஒரு பகுதி நகரத்தில் யாருக்கும் தெரியா வண்ணம் பிரபாகர சிம்மனிடம் இருக்க வேண்டும். மற்றொரு பகுதி இங்கு இருக்கட்டும்! அன்னியனின் ஆதிக்கத்தை வேருடன் கிள்ளி எறிய வேண்டும்! ஒன்று சேர்ந்து ஒற்றுமையுடன் இருப்போம் என்று உறுதி யளிக்கிறீர்களா?''

உடனே அனைவரும் ஒரே குரலாக, ''தேசத்தின் விடுதலைக்காக, எங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அர்ப்பணிக்க நாங்கள், என்றும் தயாராக இருப்போம்! இது எங்கள் வாளின் மேல் ஆணை! அன்னை பவானியின் மீது ஆணை!'' என்றனர்.

நண்பர்களின் உறுதியைக் கேட்ட குமார சிம்மன் மனம் நிம்மதியடைந்தவனாக, ''நல்லது, நீங்கள் செல்லலாம்!'' என்று உத்தர விட்டான். நண்பர்கள் அனைவரும் எழுந்து வெளியில் சென்றனர். யாவரும் சென்ற பிறகு குமாரசிம்மன் தன் அறையினுள் நுழைந்தான். அந்த அறையினுள் பலவிதமான போர்க்கருவிகள் வரிசையாக வைக்கப் பட்டிருந்தன! மையமாக விளங்கிய ஒரு மாடத்தில், ஒரு வீராங்கனையின் படம் வைக்கப்பட்டிருந்தது! வீரமும் சாந்தமும் ஒருங்கே பிரதிபலித்தன அம்முகத்தில். அதன் பக்கத்தில் மற்றொரு படம், அரச உடையுடன் கூடிய ஒரு வீரனின் உருவம் வைக்கப்பட்டிருந்தது. அரசனுக்குரிய சகல ராஜாபரணங்களும் அந்த வீரனை அணி செய்தன. இரு படங்களுக்கும் அன்றலர்ந்த மலர்கள் போடப் பட்டிருந்தன! அந்தப் படங்களுக்கு அருகில் சென்ற குமாரசிம்மனின் கண்கள் கலங்கின! இரண்டு சொட்டுக் கண்ணீர் வழிந்தது!

''அம்மா! தங்களின் கட்டளைப்படி, விடுதலைப் போரைத் துவக்கி விட்டேன். தங்களை நயவஞ்சகமாகக் கொன்று நாட்டை அபகரித்துக் கொண்ட செங்கிஸ்கானை ஒழிக்க நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. நாட்டின் விடுதலைப் போரை நடத்தும் உறுதியை எனக்கு அருள வேண்டும்!'' என்று அவனை யறியாமல் சற்றுப் பலமாக வெளிவந்தது குமாரசிம்மனின் வாக்கியங்கள். அதே சமயத்தில் அசரீரி போன்ற ஒரு குரல் பின்னிருந்து எழுந்தது.

''சந்தேகம் எள்ளளவும் வேண்டாம்! குமாரசிம்மா! உன் முயற்சிகள் யாவும் வெற்றி யடையும்! தோல்வி என்பது நம் வாழ்விலேயே கிடையாது! நிச்சயம் சித்தூர் விடுதலையடையும்!''

கம்பீரமாக ஒலிக்கப்பட்ட இவ் வாக்கியங்கள் குமாரசிம்மனுக்கு மகிழ்வையூட்டின. அவனுக்கு எதிரே ஒரு வீரன், நெடிய உருவத்துடன், ஆஜானுபாகுவாக நின்று கொண்டிருந்தான்.

''பிரபாகர்! நீயா? எப்பொழுது வந்தாய்!''

''நானா!'' என்றான் பிரபாகர். ''தனயனின் குரல்கேட்டுத் தாளாத தாய், 'பூலோகத்திலிருக்கும் என் மைந்தன் கண்ணீர் விடுகிறான்! நீ போய் அவனுக்குத் தேறுதல் சொல்லு!' என்று அனுப்பினாள். உடனே ஓடோடியும் வந்தேன், நண்பனைத் தேற்ற!''

''இன்று நீ ஏன் கூட்டத்துக்கு வரவில்லை? இவ்வளவு தாமதம் ஏன்?'' என்று வியப்புடன் கேட்டான் குமாரசிம்மன்.

* * * * * * * * * * * * * *

தமிழுக்கும் தமிழகத்துக்கும் புத்துயிர் தந்த கவி சுப்பிரமணிய பாரதியாரின் ஞாபகத்தை வருஷம் 365 நாளும் தமிழர்கள் கொண்டாட வேண்டும் என்று நாம் கருதுகிறோம். ஏன் 365 நாள் என்று வரையறை செய்கிறோமென்றால் வருஷத்தில் அதற்கு மேல் அதிக நாட்கள் இல்லாமையினால்தான்.

—கல்கி

* * * * * * * * * * * * * *

''இன்று மன்னனாக இருக்கும் செங்கிஸ்கான் நாட்டிலே கலகத்தைத் தூண்டி விட்ட கலகக்காரர்களைக் கண்டுபிடிக்கக் கடுமையான நடவடிக்கைகளை எடுக்கப் போகிறான்! அந் நடவடிக்கைகளை அறிந்துவரச் சென்றிருந்தேன்! அது இருக்கட்டும் குமாரசிம்மா! உன் கண்கள் கலங்க வேண்டிய காரணம் என்ன?''

''அன்னையின் அடி பணிந்து நின்றேன், பிரபாகர்! அதனால் ஒருவேளை கண்கள் கலங்கி யிருக்கலாம்!''

''குமாரசிம்மா! நான் ஒன்று உன்னைக் கேட்கப் போகிறேன்! பதில் சொல்லுவாயா?'' என்று கேட்டான் பிரபாகரன்.

''தயாராக இருக்கிறேன்!''

''குமார்! இதோ நம் முன் இருக்கும் இப் படம் ராணிபவானியின் படம். இது அரசரின் படம்! அவர்தான் உன் தந்தை என்றால், பவானிதான் உன் தாய் என்றால், சில மாதங்களுக்கு முன் இருந்த சந்திராவதி யார்?'' என்று கேட்டான் பிரபாகரசிம்மன்.

''பிரபாகர்! இத்தனை நாள் என்னுள் புதைந்து கொண்டிருக்கும் இரகசியத்தை, இன்று கிளறுகிறாய். சொல்லுகிறேன், பிரபாகர சிம்மா! வெளியில் அம்மரத்தடியில் அமருவோம்! கேள் என் சோகக் கதையை!''

★

ராஜபுத்திரர்களின் உறைவிடமான, வீரம் குன்றாத ஜென்ம பூமியான, சித்தூரின் கோட்டை வாயிலில் போர்முரசின் சப்தம் மக்களைப் பரபரப்படைய வைத்தது!

''வீர ராஜபுத்திரர்களே! இரண்டெழுங்கள், போருக்கு. சோர்ந்து கிடந்த உங்களுக்கு மகிழ்ச்சிதரும் செய்தி! சித்தூரின் சுதந்திரத்தைப் பறிக்க வருகிறான் கொடுங்கோலன் செங்கிஸ்கான். அனைவரும் ஒன்று சேருங்கள்! முறியடிப்போம் செங்கிஸ்கானை! புறப்படுங்கள்! ஜெய்பவானி!''

மக்களின் மனத்திலே வீராவேசத்தைக் கிளப்பியது வீரனின் பெருங்குரல்! அன்னியனை எதிர்க்க ராஜபுத்திரர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து விட்டனர்.

படைகள் புறப்படும் தினம் வந்தது! கோட்டை மைதானத்தில் சேனைபதி விக்ர சிம்மன் படைகளை அணிவகுத்து நிறுத்தினான். அன்னியனின் ஆக்கிரமிப்பை அடியோடு அழிக்க, ஒவ்வொரு வீரனும் குதூகலமாக நின்றான்! அது சமயம் அரண்மனையிலிருந்து வெளிப்பட்டார் மன்னர் வீரசிம்மர்! பெய

**பாரதி வாக்கு**

**கடவுள் ஓயாமல் தொழில் செய்து கொண்டிருக்கிறான். அவன் அண்ட கோடிகளைப் படைத்த வண்ணமாகவும் காத்த வண்ணமாகவும் அழித்த வண்ணமாகவும் இருக்கிறான். இத்தனை வேலையும் ஒரு சோம்பேறிக் கடவுளால் செய்ய முடியுமா? கடவுள் கர்மயோகிகளில் சிறந்தவன்.**

ருக்கேற்றவாறு வீரசிம்மனாகக் கர்ஜித்தார் மன்னர்! மார்பில் போர்க்கவசம் விளங்க, போர்க்கிரீடம் தலையில் ஜொலிக்க, கம்பீரமான தோற்றத்துடன் வந்தார் மன்னர். அவருடைய பக்கலில் அவருடைய அன்புக்குரிய மனைவியார் பவானி தேவியும், ஒரே மகன் குமார சிம்மனும் உடன் வந்தனர்.

வெளியே வந்த மன்னரைக் கண்ட போர் வீரர்கள் குதூகலத்துடன், "வாழ்க, வீர சிம்மர்! வாழ்க சித்தூர் சுதந்திரம்!" என்று வீர கோஷமிட்டனர். ராணி பவானி தன் கையால் கணவனுக்கு மங்கள ஆரத்தி எடுத்தாள். நெற்றியில் திலகமிட்டாள். பலத்த கோஷத்துடன் படைகள் புறப்பட்டன.

பவானி போரின் ஒவ்வொரு கட்டத்தையும் அரண்மனையிலிருந்தே தெரிந்து கொண்டு வந்தாள். தன் நாட்டுப் படைகள் செய்யும் வீர சாகசங்களைக் கேட்டு, அவள் நெஞ்சம் மகிழ்ச்சியால் நிறைந்தது! ஆனால்......ஓடி வந்தான் ஒரு வீரன். வரும்போதே அலறிக் கொண்டு வந்தான்.

"தாயே!" என்று அலறிய அவன் "மன்னர் கொல்லப்பட்டார்! படைகள் நிலை குலைந்து விட்டன! பின் வாங்கி ஓடுகின்றன! தளபதி என்ன செய்வது என்பதறியாமல் தவிக்கிறார். செங்கிஸ்கான் முன்னேறுகிறான்!" என்று கதறினான்.

"மன்னர் மாண்டார்!" என்ற சொல் அவளுடைய மூளையில் மின்னல் போல் தாக்கியது. "தடால்!" என்று கீழே சாய்ந்தாள். பணிப் பெண்கள் ஓடி வந்தனர். கீழே கிடந்த பவானியைத் தூக்கி எடுத்துக் கட்டிலில் கிடத்தினர். அது சமயம் வெகு வேகமாக உள்ளே வந்த சேனாதிபதி விக்ரமன் பவானியின் நிலை கண்டு கலங்கினான். சற்று நேரம் கழித்துக் கண் விழித்தாள் பவானி. தன் எதிரே தோளில் காயத்துடனும் தலையில் வழியும் இரத்தத்துடனும் நிற்கும் தளபதியைக் கண்டாள். ஆத்திரம் அளவு கடந்தது.

"தளபதி! மன்னர் மாண்டார் என்பதையும், படைகள் எதிர்க்க முடியாமல் பின் வாங்கி வருவதையும், தெரிவிக்கவா ஆள் அனுப்பினீர்கள்? எதற்காக மன்னருடன் சென்றீர்? தோல்வியுடன் திரும்பி வரவா?" என்றாள் பவானி ஆக்ரோஷத்துடன்!

தலை குனிந்து நின்ற சேனாதிபதி அவமானத்தால் குன்றிப் போனான்.

"தாயே! வீரம் இல்லாது எதிர்க்கவில்லை அன்னியனை! நயவஞ்சகச் செயலில் திறமை படைத்த விரோதிகள் தந்திரமாக மன்னரைக் கொன்று விட்டனர்! நான் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் நம் படைகள் தைரியத்தை இழந்துவிட்டன தாயே! போருக்குப் பயந்து அரண்மனைக்குள் ஒளிந்து கொள்ள வரவில்லை! கோழையல்ல விக்ரமன்! தாயே, ஒரு வேண்டுகோள். இறுதி வேண்டுகோள்!"

"என்ன?" என்றாள் பவானி.

"தாயே! தங்களையும் தங்கள் மகன் எங்கள் வருங்கால மன்னர்-இப்பொழுது இளவரசரான குமாரசிம்மரையும் கோட்டைக்கு வெளியே பத்திரமாக வழி யனுப்பவே வந்தேன்! தாங்களும், இளவரசரும் தப்பி விட்டால், கோட்டையின் பாதுகாப்பில் வைத்திருக்கும் தனிப்படையை நடத்தி, எல்லாப் படைகளையும் ஒன்று சேர்த்து எதிர்க்கப் போகிறேன் செங்கிஸ்கானை! எங்கள் உயிரைப் பற்றிக் கவலையில்லை!"

பவானி கண்களில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டாள். "ஆத்திரத்தில், ஆராயாமல், மனது புண்படும்படி ஏதேதோ பேசிவிட்டேன்! தளபதியாரே! அதனால் வருத்தம் அடைந்தேன்! எஞ்சியிருக்கும் படைகளை ஒன்று திரட்டுங்கள்! நானே தலைமை வகித்துப் போரை நடத்துகிறேன்!"

திகைத்தான் தளபதி. "தாயே! தாங்களா! போருக்குத் தாங்களா புறப்படுகிறீர்கள்! தளபதி நான் இருக்கும் போது ராணி போருக்குச் செல்வதா? தாயே! கொல்லாமல் கொல்லுகிறது தங்களின் ஒவ்வொரு வாக்கியமும்! நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே?"

"தளபதியாரே! தங்களைக் குற்றம் சொல்லவில்லை நான்! என் எண்ணத்தைச் சொன்னேன்! நான் போருக்கு வருவதை யாராலும் தடுக்க முடியாது! மன்னர் மாண்டதும், வெற்றி நிச்சயம் என்று மனப்பால் குடித்து வரும் செங்கிஸ்கானைப் புறமுதுகிட்டு ஓடச் செய்வோம்! குமார சிம்மனைப் பத்திரமாக வேறொருவரிடம் அனுப்புகிறேன்!"

மகாராணியை வணங்கியவண்ணம் தளபதி, வெளியே சென்றான்! பவானி உள்ளே திரும்பினாள். நடந்த விஷயங்களை அறியாது, வரப்போகும் அபாயங்களை உணராது பால் வடியும் முகத்துடன் கட்டிலில் படுத்துறங்கும் குமார சிம்மனைப் பார்த்தாள்! கண்ணீர் கண்களை மறைத்தது! மனத்தைத் திடப்படுத்திக் கொண்டபின் தன்னுடைய தோழி சந்திராவதியைப் பார்த்தாள்!

"சந்திரா! குழந்தை குமாரசிம்மனை உன்னிடம் ஒப்படைக்கிறேன். நாட்டின் வருங்கால இணையற்ற சோதியை உன்னிடம் விட்டுச் செல்கிறேன். நீ இவனுடன் நாட்டை விட்டே ஓடிவிடு. நான் திரும்பாவிடில் அவனை வீரனாக வளர்ப்பது உன் பொறுப்பு!" கடைசி வாக்கியம் சொல்லும் பொழுது அவள் குரல் தழதழத்தது! தோழியிடம் தன் குலக் கொழுந்தைத் தந்தாள். கடைசியாக அதன் மாம்பழக்கன்னங்களில் முத்தமிட்டாள் பவானி. தோழியை வெளியில் அனுப்பினாள். அவள் போகும்வரை சிலைபோல்நின்ற பவானி, கட்டிலைப் பார்த்தாள்! மனத்துயரம் தீரும் வரை குழந்தையின் கட்டிலில் முகத்தைப் பதித்துக் கொண்டு அழுதாள்.

(அடுத்த இதழில் முடியும்)




## போஸில்

**மெடிஸனல் காஸ்டர் ஆயில்**
தற்சமயம் பில்பர்ப்ரூப் மூடிகளு டன் இருப்பதால், வேறு எவ்வித மான கலப்பிலிருந்தும் காப்பாற் றப்படுகின்றது. மூடி சரியாக இருந்தாலொழிய வாங்காதீர்கள். ஸீல் ஆப் க்வாலிடி இருக்கிறதா என கவனிக்கவும்.

## போஸில்

மெடிஸனல் காஸ்டர் ஆயில்
ஒன்றுதான் பில்பர்ப்ரூப் மூடிகள் கொண்ட பாட்டில்களில் வருகிறது

கலப்பற்ற காஸ்டர் ஆயிலுக்கு . . .

மூடியின் பில்பர்ப்ரூபை கவனியுங்கள்




## போஸில்

*தபால் பெட்டி 1611, பம்பாய் - 1.*

ஸ்டாக்கிஸ்டுகள் :

மெஸர்ஸ் ராஜன் ஸ்டோர்ஸ்
41, நேதாஜி சுபாஷ் போஸ் ரோடு, தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

**மாதவன் மெடிகல் ஸ்டோர்ஸ், செந்திட்டை, திருவனந்தபுரம்**

# ஏருபழ்கி ராகலவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 43

புத்தர், கடவுள் இருப்பதாக நம்பவில்லை என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். சில நூல்களிலும் அப்படியே எழுதியிருக்கிறார்கள். இது சுத்தத் தவறு. பௌத்த மதத்தின் முக்கிய உபதேசத்துக்கு இது விரோதமாகும். கடவுள் இல்லை என்றால் புத்தருடைய உபதேசமெல்லாம் பயனற்றுப் போகும். புத்தர் நாஸ்திகர் என்று சொல்வது உண்மையல்ல. கடவுள் பெயரை வைத்து அந்தக் காலத்தில் நடைபெற்ற பல கெட்ட விஷயங்களை அவர் நிராகரித்தார். அவரை நாஸ்திகர் என்று எண்ணிக் குழப்பியதற்கு இதுவேதான் காரணம். யாரையாவது ஈசுவரன் துவேஷிப்பான் என்றால், அத்தகைய ஈசுவரன் இல்லை என்று புத்தர் கண்டிப்பாகச் சொன்னார். பூமியை யாளும் அரசர்களைப்போல் அக்கிரமம் செய்தும், பொருளுக்காக அநியாயமாகச் சிலரை விரும்பியும் சிலரை வெறுத்தும் வரும் ஒரு கடவுள் இல்லை என்றுதான் புத்தர் சொல்வார். ஜீவ ஹிம்ஸை செய்து அதைப் பூஜையாகச் சமர்ப்பித்தால் அதைப் பெற்றுக் கொண்டு சந்தோஷப்படுவார் என்று எண்ணிய அறியாமையை அவர் மிகவும் வெறுத்தார். ஆண்டவன் படைத்த சாதுப் பிராணிகளின் உயிரை மாய்த்துச் செய்யப்பட்ட யாகங்களைக் கூடவே கூடாது என்று சொன்னார். ஆகவே புத்தர், கடவுளை அவனுக்கு உரிய அரியாசனத்தில் அமர்த்தினார். அவ்வளவே யொழிய, 'அவன் இல்லை' என்று சொன்னதில்லை. கருணை வள்ளலான ஈசனை மறந்து ஒரு குரூர அரக்கனை அவனுக்குப் பதிலாக வைத்துப் பூஜை செய்ததை ஒழித்து, மறுபடியும் உண்மை ஆண்டவனுக்கு மக்கள் உள்ளத்தில் இடம் செய்தார். வாழ்க்கையில் இன்றியமையாதது சீலம். பிரபஞ்சத்தின் ஆட்சி முறையே தருமம். அது என்றும் மாறாமல் நிலையாக நிற்கும் என்று புத்தர் ஹிந்து மதத்தில் சொல்லப் பட்டிருப்பதை ஊர்ஜிதப்படுத்திச் சொன்னார். தருமமே கடவுள் என்று சொன்னார்.

ஈசனுடைய செங்கோலும் சட்டமும் நிரந்தரமானது. என்றும் மாறுபடாதது. அவன் வேறு; அவன் சட்டம் வேறல்ல. அவனுடைய பரிபூரண சுபாவத்துக்கே தருமம் என்று பெயர். பௌத்த மதத்தில் கடவுள் இல்லை, தருமம்தான் உண்டு என்று சிலர் அதைப் பற்றிக் குழப்பிக் கொள்வதற்கு இதுவே காரணம். இதனாலேயே நிர்வாணம் என்றால் இன்னது பொருள் என்று சரியாகப் புரிந்து கொள்ளாமல் வாதித்து வருவதும். நிர்வாணம் என்றால் சூன்யமாகப் போவது அல்ல. புத்தருடைய சரித்திரத்தினின்று நான் அறிந்து கொண்ட முக்கியத்துவம் என்னவென்றால், நமக்குள் இருக்கும் குற்றங்கள் எல்லாம் கழிந்து முற்றிலும் நிர்மலமாவதுதான் நிர்வாணம். மாசுகள் தீர்ந்து அழிந்து போக வேண்டியதெல்லாம் அழிந்து விட்டுப் பூரண சுத்தப் பொருள் ஆவதுதான் நிர்வாணம். நிர்வாணம் என்பது மயானமல்ல. ஆத்மா தனக்குரிய விடுதலை பெற்று வீடு அடைந்து பெறும் பேரின்பமே நிர்வாணம்.*

[யங் இந்தியா 24—11—27]

கடவுளுக்குக் கற்பித்த குரூர லட்சணங்களை அகற்றிவிட்டு உரிய ஸ்தானத்தில் அமர்த்தியது போக, புத்தர் உலகத்துக்குச் செய்த பெரும் பணி ஜீவ காருண்ய உபதேசம். எந்தப் பிராணியின் உயிரையும் துன்புறுத்தலாகாது என்று புத்தர் போதித்த உபதேசமே அவருடைய சிறந்த பணி.

[யங் இந்தியா 20—1—27]

---

* 'நிர்வாணம்' என்பது பௌத்த மதத்துக்கே உரிய தனி மொழி அல்ல. பகவத்கீதை இரண்டாவது அத்தியாயத்துக் கடைசி சுலோகத்தில் இந்தச் சொல்லைக் காணலாம். அந்த அத்தியாயத்தில் உபதேசிக்கப்பட்ட முறையில் மனிதன் வாழ்ந்தால் 'நிர்வாண'த்தை அடைவான் என்று சொல்லப்பட் டிருக்கிறது. இன்னும் ஐந்தாவது அத்தியாயத்தில் 24, 25, 26வது சுலோகங்களிலும் ஆறாவது அத்தியாயத்தில் 15வது சுலோகத்திலும், 'நிர்வாண' நிலையைக் குறிப்பிட்டிருக்கிறது. 'நிர்வாணம்' என்பது வீடு அல்லது முக்தி.

# காசி யாத்திரை

சுபஸ்ரீ

[கணபதி கழகத்துக் காரியதரிசி ஸ்ரீமான் விநாயகம் காசிக்கு மாற்றிப் போவதை முன்னிட்டு ஒரு பிரிவு உபசாரக் கூட்டம் வெகு விமரிசையாக நடைபெறுகிறது.]

**தலைவர் ஹனுமந்த ராவ்:**—நம்முடைய கணபதி கழகத்தின் தும்பிக்கை போன்ற ஸ்ரீமான் விநாயகம் மாற்றலாகிப் போவது நமக்கெல்லாம் துக்கம் தரும் செய்தி. தனது உடல், பொருள், திருமண வாழ்வு—யாவற்றையும் தியாகம் செய்து, சங்கத்தை வளர்ப்பதற்கென்றே சுத்தப் பிரும்மச்சாரியாக இருக்கும் 'பீஷ்மர்' ஸ்ரீமான் விநாயகம். அவருடைய வரப்போகும் பிரிவை நினைந்து நாம் ஒவ்வொருவரும் கல்யாணம் செய்துகொண்ட சம்சாரிபோல் கண்கலங்கி நிற்கிறோம். முச்சந்தி தோறும் வீற்றிருக்கும் மூஷிக வாகனப் பெருமானுக்கு ஆபத்து ஏற்பட்டுள்ள இந்நாளில் யானைமுகனைச் சின்னமாகக் கொண்டு பிரும்மச்சாரிகள் சங்கத்தைத் துவக்கிச் செவ்வனே நடத்தி வரும் துணிச்சல் விநாயகத்துக்கு உரியது. 'காசிக்குப் போனாலும் கர்மம் தொலையாது' என்பதுபோல் அவர் காசிக்குச் சென்றாலும் சங்கத்தின் லட்சியம் அவரது கருத்தை விட்டு அகலாது என்பது உறுதி. தவிர அன்பர்களே. . . .

**[உப காரியதரிசி கந்தசாமி தலைவரை அணுகி 'மற்றவர்களைப் பேச விடுகிறீர்களா?' என்று கேட்கவே, தலைவர் அரைகுறை மனத்துடன் அமருகிறார்.]**

**ஆயுள் அங்கத்தினர் முருகேசன்** (உள்ளூர் முனிசிபல் பள்ளியில் தமிழ்ப் பண்டிதர்:)—சம்சாரக் கடலில் தடுமாறி வீழ்ந்து 'உழலுவதும் உழைப்பதும் ஓய்வதுமின்றி வேறொரு சுகத்தையும் அறியாத பராபரங்க'ளாக வாழ்க்கை நடத்தும் மக்கள் குலத்தில்—இல்லை, மாக்கள் குழாத்தில் சேருவதினின்று இளைஞர்களைத் தடுப்பதே குறிக்கோளாகக் கொண்டு தோன்றி நின்றது, நம் சங்கம். இவண் மாட்டு 'கண் துஞ்சாது, பசி நோக்காது, கருமமே கண்ணாக' உழைத்த திருவாளர் விநாயகத்தின் எண்ணற்ற தொண்டினை விண்டுரைக்க வார்த்தைகள் கண்டிலம். வடக்கே தமிழ்க் கொடி நாட்டிய குமர குருபரர் போல், மாட்சி மிக்க விநாயகம் காசிக்குச் சென்று கணபதி கழகத்தின் கொள்கைகளைப் பரப்புவார் என்று நம்புகிறோம். வட திசை ஏகும் அவருக்கு ஞாலத்தில் எல்லா நலத்தையும் அருள, 'கோலம் செய் துங்கக் கரிமுகத்துத் தூமணி'யைத் துதி செய்கிறேன்.

**[பிறகு 'வெண்பா'வில் இறைப்பட்ட வாழ்த்துக் கவிதை ஒன்றை ராகத்துடன் வாசித்து அளிக்கிறார்!]**

**டாக்டர் விவேகானந்தன்:**— சங்கத்தின் ஜீவநாடி போன்ற விநாயகம் மாற்றலாகிப் போவது பெரும் அதிர்ச்சியே. அவருடைய உழைப்பு சங்கத்தின் உயிர் மூச்சாக இருந்து வந்தது. இல்லற வாழ்க்கையின் அபாயங்களை 'இன்ஜக்ஷன்' போன்ற குத்து நடையில் எழுதப்பட்ட அவரது நாவல்களான 'சம்சாரமோ சாகரமோ?' 'மாமனார்—எனது முதல் வைரி' முதலியன இளைஞர்களுக்கு வைடமின் நிறைந்த உணவு போலச் சிறந்த 'டானிக்'காக உதவின. சிதர்த் தேங்காய் போல உடைந்த உள்ளத்துடன் சோர்ந்த ஆத்மாக்களாக வாழும் சம்சாரிகளின் பாதையைப் பின்பற்றாமல் இளைஞர்களை நிரந்தர 'கணபதி'களாக்கிய பெருமை விநாயகத்தின் நாவல்களையே சாரும் என்று தாராளமாக 'சர்டிபிகேட்' கொடுக்கலாம். அத்தகைய உழைப்பாளி நம்மை விட்டுப் பிரிவது என்றால் நமது இருதய ஓட்டமே நின்று விடும் போல இருக்கிறது. நார்மலுக்கு வரும் உடம்பின் உஷ்ணம் போல், காசிக்குச் செல்லும் அவர் விரைவில் இந்த ஊருக்கு வந்து விடுவார் என்று பிரார்த்திப்போமாக. அவரது காசி வாழ்க்கையில் ஆரோக்கியமும், திடகாத்திரமும், கைக்குத்தல் அரிசியும், பாலும் நிறையக் கிடைக்க இறைவனை வேண்டுகிறேன்!

**உபதலைவர் சிவராம கிருஷ்ணன்:**—(நிஜவாழ்வில் 'ட்யூஷன்' வாத்தியாராக இருப்பதால் தானே கேள்வி கேட்டு, தானே பதில் சொல்லிக் கொள்ளும் வழக்கம் உண்டு) பிரும்மச்சாரிகள் சங்கம் என்ற புதுமையான 'கணபதி கழகத்'துக்குப் 'பிள்ளையார் சுழி'யிட்ட முதல்வர் யார்? ஸ்ரீ விநாயகம் என்பதில் சந்தேகமில்லை. நான்கு கைகளுடன் அறையிலே பொழுதைப் போக்கி இரண்டாம் ஆட்டம் சினிமா கண்டு, ஹோட்டல் உணவு உண்டு,



மடிப்புக் கலையாத ஆடையுடன் விரலில் சாவி வளையம் சுழல வளையவரும் கவலையற்ற பிரும்மச்சாரி கல்யாணம் ஆனதும் என்ன ஆகிறான்? கிருகமே கதியாக, ஒரு கையில் சிணுங்கும் குழந்தையை ஏந்தி, மற்றொரு கையால் கறிகாய்ப் பைக்கு அபயம் அளித்து, சம்சார மகா விஷ்ணுவாகக் காட்சி அளிக்கிறான். இந்தப் பரிதாபக் கோலத்தினின்று வாலிபர்களைக் காப்பது எது? நமது க. கழகம்தான். இச் சங்கத்தின் கண்டெடுத்த மாணிக்கம், கையால் பிடித்த மோதகம் ஸ்ரீமான் விநாயகம் புரிந்த மிகப் பெரிய பணி யாது? கல்யாணமே நடைபெறாத ஆடி மாதத்தைப் 'பிரும்மச்சாரிகள் மாதம்' என்று கொண்டாடி, நாட்டிலுள்ள கல்யாணமாகாத புண்ணியாத்மாக்கள் அனுஷ்டிக்கும்படி செய்த பெருமை ஒன்றே போதும். இதனைக் கெடுப்பதற்காகப் பெண்ணைப் பெற்றவர்கள் சங்கத்தார் 'மேனகை வாரம்' கொண்டாடிய போதிலும் நமது கணபதிகள் மன உறுதி குலையாமல் இருந்தது பாராட்டத் தக்கது.

**'கணேஷ் பவன்' கல்யாணராமய்யர்** :—இந்த மாதிரி கணபதி சங்கங்கள் இருக்கிறதினாலே, பிரும்மச்சாரிகள் பெருத்து, எங்கள் ஹோட்டல் தொழில் அமோகமாக நடைபெறுகிறது. கல்யாணமாகி வீட்டிலே இருந்தால் கஞ்சியோ கூழோதான் குடிக்கணும். ஆனால் ஹோட்டலிலே வெந்ததோ வேகாததோ இரண்டு வேளையும் கடச்கட நாலு இலைகள் போடுகிறோம். அதிகாரம் பண்ணிக் கொண்டு சாப்பிடக்கூடிய இடம் ஹோட்டல் ஒன்றுதான். இந்த மாதிரி நாடுமுழுவதும் சங்கங்கள் வளர வேண்டும்; இந்த ஸ்தாபனத்திலே விநாயகம் ரொம்ப உழைத்திருக்கிறார். ஹோட்டல் நடத்துபவர்கள் சங்கத்தின் சார்பிலே இந்த அருகம் புல் மாலையை ஸ்ரீ விநாயகம் அவருக்குச் சாத்துகிறேன்.

**உபகாரியதரிசி கந்தசாமி** :—நம்முடைய அன்பின் அடையாளமாக வெள்ளியில் செய்யப்பட்ட இந்த மூஷிக வாகனத்தை ஸ்ரீ விநாயகத்துக்கு அளிக்கிறோம். 'பொன் வைக்கும் இடத்தில் எருக்கம்பூ'தான். ஆனால் அது தாங்கி வரும் அன்பு மகா கணபதியை விட உருவில் பெரியது.

**ஸ்ரீமான் விநாயகம்** (நெஞ்சை அடைத்த துக்கத்தை ஒரு கனைப்பால் அகற்றிவிட்டுப் பேசுகிறார்):— கழகத்து அன்பர்களே, கட்டைப் பிரும்மச்சாரிகளே! உங்கள் அன்பின் வலிமையால் எதிர்பாராத பெருமைகளை எனக்கு நிவேதனம் செய்து விட்டீர்கள். அதற்குரிய அருகதை என்னிடம் இல்லை. 'ஆடி உற்சவங்கள்' வெற்றிகரமாக நடந்தால் அப்பெருமை என்னைச் சார்ந்தது அல்ல. எத்தனையோ பெண்ணைப் பெற்றவர்களின் சாபத்துக்கு ஆளாகிய போதிலும் கல்யாண ஆபத்துக்கு ஆளாகாமல் 'நடமாடும் கணபதி'களாக வளையவரும் சங்க அங்கத்தினர்களே பாராட்டுக்குரியவர்கள். காசிக்குச் சென்றாலும், கங்கையில் மூழ்கினாலும், சங்கநாயகன் கணேசரின் வழிகளைக் கடைப் பிடிக்கத் தவற மாட்டேன். (கரகோஷம்) அனேகமாக இன்னும் ஒரு ஆண்டில் மீண்டும் மாற்றலாகி வந்து விடுவேன் என நம்புகிறேன். நான் உங்களிடம் தோப்புக்கரணமிட்டு முறையிடுவது இதுதான். அங்கத்தினர்கள் பொறுப்பறிந்து சங்க லட்சியங்களைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதே! உங்கள் யாவருக்கும் எனது வணக்கமும், வந்தனங்களும்.

**கூட்டத்துக்கு வெளியே நரைத்த தலை நபர் ஒருவர்** :—என் சார், இவர் எந்த ஊருக்கு மாற்றி...?

**ஒருவர்** :—காசிக்கு...

**நரை** :—காசி யாத்திரையா? நான் பார்த்துக் கொள்கிறேன்.

** ** **

**[ஒரு வருடம் தேங்காய் போல் உருண்டு ஓடுகிறது. க. கழகத்து நிர்வாகிகள் ஸ்டேஷனில் மாலையும் கையுமாக நிற்கிறார்கள். வண்டியிலிருந்து விநாயகத்துடன் ஒரு பெண்ணும் இறங்குவதைக் கண்டு திகைக்கின்றனர்.]**

**தலைவர்** (திகைப்புடன்) :— என்ன மிஸ்டர் விநாயகம்? இது யாரு?

**விநாயகம்** :— என்ன தெரியவில்லையா, எனது சகதர்மிணி!

**முருகேசன்** :—அந்தோ பேரிடி! கணபதி கழகத்து முன்னாள் காரியதரிசிக்கு இன்னாள் துணைவியா?

**சிவராமகிருஷ்ணன்**:—என்ன தலைவர்வாள்! நம் கட்சியை விட்டு 'எக்ஸ்பெல்' பண்ணத் தீர்மானம் 'டிராப்டு' பண்ணட்டுமா?

**அங்கத்தினர்** :—அதைத் தமிழய்யா கிட்ட விடுங்க; ஒரு வசை கவி பாடிடுவாங்க.

**டாக்டர்**:—இது என்ன 'பிள்ளையார் பிடிக்க.'

**தலைவர்** :—என்ன விநாயகம், நம் கழக நோக்கங்களுக்கு எதிராக நீங்களே இப்படிக் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாமா?

**முருகேசன்** :—நமது சங்கச் சின்னம், கண் கண்ட தெய்வம் கணபதியை மறந்துபோய் விட்டீர்களா?

**விநாயகம்** :—மன்னிக்க வேண்டும், நண்பர்களே! நான் மகா கணபதியை மறக்கவே இல்லை. பிள்ளையாரது வழியையே பின்பற்றியுள்ளேன். ஆனால் கணேசரில்தான் வித்தியாசம் வந்து விட்டது. வடநாட்டுக் கணபதிக்கு இரண்டு மனைவிகள். ரோமாபுரியில் இருக்கும்போது ரோமர்கள் போலத்தானே வாழவேண்டும்?

**ஒருவர்** :—அட பாவி, இந்த வயசிலே இரு மனைவியா?

**விநாயகம்**:-இல்லை; கொள்கை அளவில் அவர்கள் கணேசரை ஒப்புக் கொண்டு பாதி கணபதி



யாக மாறிவிட்டேன். இதோ என் மனைவி. எங்களை ஆசீர்வதியுங்கள்.

**[கொண்டு வந்த மாலையை இருவர் கழுத்திலும் [illegible].]**

**அங்கத்தினர்** :—அப்பவே 'காசி யாத்திரை' புறப்படும்போதே நினைத்தேன், பெண்ணைப் பெற்ற படுபாவி எவனாவது குறுக்கிட்டுக் 'கன்னிகாதானம்' செய்வான் என்று. இந்தக் காலத்திலேதான் என்ன 'தானம்' செய்யலாம் என்று பயனாக அலையறுங்களே? அது சரி. உப தலைவர்வாள், எங்கே புறப்பட்டீங்க...?

**சிவராமகிருஷ்ணன்** :—வட நாட்டுக்கு!

**அங்கத்தினர்** :—அப்படின்னு...?

**சிவராமகிருஷ்ணன்** :—தீர்த்த யாத்திரை!

# படித்துப் பாருங்கள்

## Mankind

உலக சமாதானத்தில், சாத்துவிகத்தில், ஜீவகாருண்யத்தில் நம்பிக்கையும் மானிட வர்க்கத்தின் எதிர்கால க்ஷேமத்தில் அக்கறையும் கொண்ட உலக மக்கள் யாரும், 1956—ம் ஆண்டில் நிகழ்ந்த ஓர் அருமையான சம்பவத்தை மறக்க முடியாது. ஆம், மகான் கௌதம புத்தரின் 2500—வது ஜெயந்தி வைபவம் நடந்த அந்தப் புனித வருஷத்தை மானிட வர்க்கம் மறக்க முடியாதுதான். யுத்த பீதியாகிற அந்தகாரம் சூழ்ந்துள்ள உலகத்தில் மக்கள் உய்வதற்குப் புத்தர் பிரான் காட்டிய வழிதான் சிறந்தது என்பதில் கருத்து வேற்றுமை இருக்க முடியாது. புத்தர் ஜெயந்தி வைபவம் குறிப்பாக இந்நாட்டில் பல சிறியசக்திகளைத் தூண்டி விட்டதாகவும், அதன் பலனாகவே Mankind (மானிட வர்க்கம்) என்ற ஆங்கில மாத சஞ்சிகை உதயமாகியிருக்கிறது என்றும் அதன் தலையங்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தச் சஞ்சிகையில் சிந்தனையைக் கிளறும் பல அரிய கட்டுரைகள் அடங்கியிருக்கின்றன. அதன் ஆசிரியர் குழுவில் ஒருவரான ஸ்ரீராம் மனோஹர் லோஹியா 'ராமனும் கிருஷ்ணனும் சிவனும்' என்ற மகுடத்தில் இதிகாச ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். சென்ற ஆகஸ்டு மாதத்திலிருந்து ஆரம்பமாகியுள்ள இந்தச் சஞ்சிகை அதன் பெயருக்கேற்ப மானிட வர்க்கத்துக்குத் தொண்டு செய்யும் சிறந்த பத்திரிகையாகத் திகழுமாக.

வருஷச் சந்தா ரூ. 10. இரண்டு, மூன்று வருஷச் சந்தா முறையே ரூ. 18, ரூ. 25. கிடைக்குமிடம்: ஒய். சூர்யநாராயண ராவ், 3–6–19, ஹிமாயத் நகர், ஹைதராபாத்.

## குத்து விளக்கு

சிறுகதை எழுதுவது என்பது ஒரு தனிக் கலை. சம்பவங்கள் சுவாரஸ்யமாக அமைந்து விட்டால் கதை நன்றாயிருக்கும் என்று சொல்ல முடியாது. ஒரு கதைக்கு இத்தகைய கருத்துத்தான் நன்றாயிருக்கும் என்று குறிப்பாகச் சொல்ல முடியாது. எந்தக் கருத்தாயிருந்தாலும், எந்தச் சம்பவமாயிருந்தாலும் எழுதுகிறவரின் திறமையைப் பொறுத்தது. கதை நன்றாக அமைவது. ஒரு சிறந்த எழுத்தாளர் எந்த ஒரு அற்ப நிகழ்ச்சியையும் அற்புதமான கதையாக எழுதி விடுவார். கதையைப் பற்றிப் பொதுவாக ஒரு அபிப்பிராயம் கூறலாம். நிகழ்ச்சிகளை நன்றாய்ப் பிணைத்து, தான் சொல்ல வந்ததை மனத்தில் நன்றாய் வாங்கிக் கொண்டு கதை எழுதினால் எந்தக் கதையும் படிப்பதற்குச் சுவாரஸ்யமாக அமைந்து விடும்.

"குத்து விளக்கு" முதலிய கதைத் தொகுதிகளில் உள்ள ஒவ்வொரு கதையும் ஒரு நல்ல நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு சுவை குன்றாமல், தெளிவான நடையில் பின்னப்பட்டிருக்கிறது. ஒரு கதையில் ஒரு ஆனந்த நிகழ்ச்சி பின்னணியில் நின்றால், இன்னொரு கதையில் விரக்தி மனப்பான்மையில் உண்டாகும் அமைதி நிலைக்களனாக அமைகிறது. இந்நூலில் உள்ள பதினைந்து கதைகளும் குடும்ப வாழ்க்கையை ஒட்டியே எழுதப்பட்டிருப்பது வியப்புக்குரியது. மன்னி, அண்ணா, தங்கை, அத்தை, பாட்டி, மனைவி, கணவன் முதலிய குடும்ப பாத்திரங்களைச் சுற்றியே எல்லாக் கதைகளும் படர்ந்திருப்பதைப் பாராட்ட வேண்டியதுதான். எல்லோரும் படித்து இன்புறக் கூடிய இந்தக் கதைத் தொகுதியினூடே குத்து விளக்கின் மின்னொளி வீசி மனத்துக்கு இதம் தருகிறது.

எழுதியவர்: ஜயலக்ஷ்மி; பிரசுரம்: ஔவை நூலகம், பிராட்வே, சென்னை. விலை: ரூ. 2.

## ஸந்தியாவந்தனம்

ஸந்தியா தேவியை மூன்று காலங்களிலும் வழிபடுவதால் ஆயுள் விருத்தி, தெளிந்த அறிவு, வாக்கு வன்மை, மனச் சாந்தி முதலிய பலன்கள் உண்டாகின்றன என்பது ஆன்றோர் வாக்கு. மனித வாழ்வில் மனம், வாக்கு, சரீரம் இவைகளால், அறிந்தும் அறியாமலும் செய்யப்படும் குற்றங்கள் கணக்கிலடங்கா; அவற்றை அகற்ற உறுதுணையாயிருப்பது ஸந்தியா உபாசனையேயாகும். மேற்படி தவறுகளுக்காக மனப்பூர்வமாக வருந்தி மன்னிப்புக் கோரும் பாவனையில் அமைந்திருக்கும் மகத்தான மந்திரமாகிய அது, உபநயன காலத்தில் உபதேசமாக வந்தடைந்து, வாழ்வில் சிறுமையை அகற்றிச் சீலத்தை அளிக்கும் சீரிய செல்வம் என்று யாவராலும் போற்றப்படுவது. எளிய நடையில் அநுஷ்டான விளக்கத்துடன் இந் நூல் நல்ல பதிப்பாக வெளி வந்திருக்கிறது. மூலம் முதலில் தேவநாகர லிபியிலும், அதன் அடியில் தமிழ் எழுத்திலும், பின்னர் பதவுரையும் அச்சிடப்பட்டிருக்கின்றன.

உரையாசிரியர்: "அண்ணா," பிரசுரம்: கணேஷ் அண்டு கோ, லிட். சென்னை—17; விலை: ரூ. 1.



# தந்தையின் ஆசி

ராஜலக்ஷ்மி

கடிகாரத்தில் மணி ஏழு அடித்தது. நான் மெள்ள எழுந்து கட்டிலை விட்டுஇறங்கிச் சுவரைப் பிடித்தபடியே பூஜை அறையில் நுழைந்தேன். கைகால்களைக் கழுவிக்கொண்டு குத்து விளக்கை ஏற்றினேன். அன்றையதினம் வெள்ளிக்கிழமை. பூஜாக்கிருகம் விசேஷப் பொலிவுடன் விளங்கியது. ஜானகி, ராஜ ராஜேசுவரி படத்துக்கு மலர் மாலைகள் சூட்டி மண்டபத்தையும் வெகு நன்றாக அலங்கரித்து வைத்திருந்தாள்.

இரண்டு மாத ஜுரத்தினால் தளர்ந்து பலவீன மடைந்த நிலையிலும் ஆசை என்னை விடவில்லை. மெள்ள உட்கார்ந்து கொண்டு சியாமளா தண்டகத்தைச் சொல்ல ஆரம்பித்தேன். மோட்டார் ஹாரனின் சத்தத்தைக் கேட்டுத் திரும்பினேன். பட்டுப் பாவாடை சலசலக்க என் சின்னஞ் சிறு பேத்தி புஷ்பா, ''பாட்டி! பாட்டி!'' என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடி வந்தாள். அவளுக்குப் பின்னால் பின்னே ராமுவும் நாட்டுப் பெண் ஜானகியும் வருவதைக் கண்டதும் மெள்ள எழுந்திருக்க முயன்றேன்.

ராமுவின் முகத்தில் கவலைக்குறி தோன்றியது. அவன் ஜானகியை நோக்கி, ''எனக்கு அப்போதே தெரியும், அம்மாவை இந்நிலையில் தனியேவிட்டுப் போனதே தப்பு. வெள்ளிக் கிழமை கோவில் அர்ச்சனை தவறக் கூடாதே என்று போகும்படி யாகிவிட்டது. சீக்கிரம் அம்மாவைப் படுக்கவைத்துவிட்டுச் சியாமளா தண்டகம் வாசி. அம்மா இருந்த இருப்புக்குப் படுக்கையை விட்டே எழுந்திருக்கக் கூடாது'' என்று சொல்லிவிட்டு என்னைப் பார்த்தான். அவன் கண்களின் ஓரத்தில் தேங்கிக் கிடந்த கண்ணீர்த் திவலைகள் அவன் மன வருத்தத்தை நொடியில் நன்கு உணர்த்தின. பேசாமல் எழுந்து போய்ப் படுத்துக் கொண்டேன்.

ராமு மறுபடியும், ''ஜானகி! சீக்கிரம் உன் பிரார்த்தனையை முடித்துக்கொள். இன்னும் அரைமணி நேரந்தான் இருக்கிறது. இன்று வெள்ளிக்கிழமை. நம் பிரேமாவின் வீணைக் கச்சேரி யென்பதை மறந்து விடாதே'', என்று சொல்லிவிட்டு ரேடியோவின் விசையைத் திருப்பிவிட்டு என் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டான். செக்கச் செவேலென்ற மேனி. சுருண்ட கேசம். காருண்யம் ததும்பும் அகன்ற விழிகள். அவனது உருவம் என் மாமனாரை நினைவூட்டியது. அவர் நினைவு வரும்போது எனக்குப் பழங்கால நிகழ்ச்சிகள் ஞாபகத்துக்கு வராமல் இருப்பதில்லை.

எவ்வளவு சிரமப் பட்டு அந் நிகழ்ச்சிகளை நான் மறக்க முயன்றாலும் அந்தச் சம்பவங்கள் என் மனத்திரையின் அடித்தளத்தில் 'சதா நிழலாடிக் கொண்டிருப்பதை என்னால் தடுக்க முடியவில்லை. வெளிக்கு எவ்வளவு தான் சந்தோஷமாக இருப்பதாக நடித்தாலும் எனக்கு ஏற்பட்ட ஊனம் என்னை விட்டு நீங்குமா? எனக்குக் கடவுள் ஒரு குறையையும் வைக்கவில்லை. அன்பான கணவர். ரத்தினங்கள் போன்ற குழந்தைகள். நிறைந்த செல்வம். சுகமான வாழ்வு. இதைவிட ஒருவருக்கு வேறு என்ன வேண்டும்? இவ்வளவு இருந்தும் எனக்கு வாழ்க்கையில் மகிழ்ச்சி யில்லை. இல்லாததை நினைத்து வருந்துவது மனிதனின் இயல்பு. வாழ்வில் எது பெரிது என்று நான் எண்ணினேனோ அது எனக்குக் கிட்டியும் அதன் சுவையை நான் அனுபவிக்க முடியாத ஒரு ஊனம் எனக்கு ஏற்பட்டு விட்டது. அந்தப் பயங்கர நினைவே என் உள்ளத்தைப் பொசுக்கி விட்டது. இனிமேல் அதில் மகிழ்ச்சிக்கு இடமேது? ' என் அருமைக் குமாரி ரேடியோவில் வீணை வாசிக்கப் போகிறாள் என்ற செய்தி எனது கடந்தகாலச் சம்பவங்களை இன்னும் அதிகமாகக் கிளற ஆரம்பித்தது.

சங்கீத உலகில் வீணை வாசிப்பதில் நிகரற்றவளாக விளங்கும் பிரேமாவின் தாயாக இருந்தும் அந்த சந்தோஷத்தைப் பூரணமாக அனுபவிக்கக்கூடிய சக்தி இல்லை என்ற உணர்ச்சி என்னை உறுத்திக்கொண்டே யிருந்தது. அவளுடைய சங்கீதம் இன்னும் எவ்வளவோ உயர்வாக இருக்க வேண்டியது. அது இல்லாததற்குக் காரணம் இந்த ஊனமடைந்த கைகள்!! அவள் வீணையில் ஒவ்வொரு பிடி

பிடிக்கும் போதும், 'இந்தமாதிரி வாசிக்க வேண்டும்' என்று ஒரு அரை நிமிடம் வாசித்துக் காண்பிக்க முடியாத இந்தக் கைகள் இருந்தென்ன பயன்?

இடது கை விரல்களைத் திருப்பிப் பார்த்துக் கொண்டேன். வீணை வாசிப்பதற்கு ஆதாரமான அவ்விரண்டு விரல்களும் என்னைப் பார்த்துச் சிரித்தன. எனக்குத் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டேன். என்னுடைய மனம் முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு தாவியோடியது.

*
* *

அன்று ஒரு வெள்ளிக்கிழமை.

''இன்று நம் லக்ஷ்மியைப் பார்க்க வருகிறார்களாம்'' என்று அப்பா கூறினதுமே அம்மாவுக்குத் தலைகால் புரியவில்லை. எனக்கு அம்மா தன் கூறைப் புடைவையை எடுத்துக் கட்டித் தலையில் தாழம்பூ வைத்துப் பின்னி, மாட்டல், புல்லாக்கு, காசுமாலை முதலிய சகல ஆபரணங்களையும் என் உடம்பில் சூட்டிப் பொம்மை மாதிரி என்னை அலங்கரித்து நிறுத்தி விட்டாள்.

அந்தக் காலத்திலேயே என் தகப்பனார் என்னை வெகு நாகரிகமாக வளர்த்தார். என்னைச் சமூகத்தின் கட்டுப்பாடுகளுக்கு மீறி எஸ். எஸ். எல். ஸி. வரையில் படிக்க வைத்தார். நல்ல வித்வானைக்கொண்டு ஏழு வயது முதல் எனக்கு வீணை சொல்லி வைத்தார். ஈசுவர கிருபையால் நான் அபூர்மாக வீணை வாசித்தேன். என் குருவே வியக்கும்படியான அளவுக்கு என்னுடைய வாசிப்பு வரவர அபிவிருத்தி யடைந்தது.

அன்று எனக்கு மாமனாராக வரப்போகிறவரும் அவர் பிள்ளையும் பெண் பார்க்க வந்திருந்தனர். என் மாமியார் காலமாகி அப்போது இரண்டு வருடங்களாகி விட்டன. என் கணவர் ஒரே பிள்ளை. என் மாமனார் ஒரு மிராசுதார். என் கணவரும் ஒரு நல்ல உத்தியோகத்தில்இருந்தார். மாமனார் செக்கச் செவேரென்று வாட்டசாட்டமாகப் பார்ப்பதற்கு வெகு லட்சணமாக இருந்தார். பிள்ளை சற்றுக் கறுப்பாக இருந்தாலும் முகத்தில் நல்ல களை. இன்னமும் நேற்று நடந்தது போல் தோன்றுகிறது.

அன்று நான் சியாமளா தண்டகத்தை வீணையில் வாசித்ததும் என் மாமனார் அப்படியே சொக்கிப் போய்விட்டார். ''இன்னொன்று வாசி, இன்னொன்று வாசி'' என்று என்னை ஒரு கச்சேரியே பண்ண வைத்து விட்டார். அத்துடன் ''அடாடா! என்ன சங்கீதம்! என்ன சங்கீதம்! சார், வரதட்சிணையே வேண்டாம். முகூர்த்தத்துக்கு நாள் குறியுங்கள். இந்த அபூர்வ சங்கீதத்துக்கு லட்சம் பொன் கொடுக்கலாமே!'' என்று என்னைப் பிரமாதமாகப் புகழ ஆரம்பித்து விட்டார். நான் வெட்கத்துடன் உள்ளே ஓடி விட்டேன். திருமணத்துக்கு நாளும் குறித்து விட்டனர்.



என் தகப்பனார் ஒரு சங்கீத ரசிகரானதால் ஒரு பெரிய சங்கீத சபாவின் காரியதரிசியாக இருந்து அதை நன்கு நிர்வகித்து வந்தார். கச்சேரி செய்ய வரும் எல்லா வித்வான்களும் எங்கள் வீட்டில்தான் இறங்குவது வழக்கம். எனக்குப் பல கீர்த்தனைகளைச் சொல்லிக் கொடுத்துவிட்டும் போவார்கள். அந்தக் காலத்தில் பிரபலமாக விளங்கிய வீணை வித்வான் ஒருவர் கடைசிக் காலத்தில் கண்ணிழந்து வறுமையால் கஷ்டப்பட்டார். அவரை ஒரு வருட காலம் என் தந்தை வீட்டோடு வைத்துக்கொண்டு காப்பாற்றினார். அவர் அபூர்வமான சில பிடிகளை எனக்குக் கற்றுக் கொடுத்தார். சியாமளா தண்டகத்தை நவ ராகமாலிகையாக வாசிக்க அவர் தான் கற்றுக் கொடுத்தார். அது வெகு அழகாக அமைந்திருந்தது.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் குத்து விளக்கேற்றி வைத்துவிட்டு, அந்த சுலோகத்தை வீணையில் வாசிப்பதை ஒரு கடமையாக வைத்துக் கொண்டேன். அநேக சங்கீத ரசிகர்கள் என் பாட்டைக் கேட்க அன்று எங்கள் வீட்டில் கூடிவிடுவார்கள். ஒவ்வொருவரும், ''சார்! இது மனித வாசிப்பு இல்லை. தெய்வீகமான கலை உங்கள் குழந்தையிடம் குடிகொண்டிருக்கிறது. சங்கீத ஞானமுள்ள பையனுகப் பார்த்துக் குழந்தையைத் திருமணம் செய்து கொடுங்கள்'' என்று அப்பாவிடம் சொல்வார்கள்.

கல்யாணமானபின் என் பெற்றோர்களுக்கு என்னைப் பிரியவே மனம் வரவில்லை. செல்வத்தில் வளர்ந்த எனக்குப் புக்ககம் எப்படி இருக்குமோ என்ற பயம் உண்டாயிற்று. ஆனால் புக்ககத்துக்குப் போன சில தினங்களிலேயே நான் அங்கு சுவர்க்கபோகத்தைக் கண்டேன். என் மாமனார் என்னிடம் வெகு அன்பாக நடந்து கொண்டார். அவர் ஒரு கலா ரசிகர். சங்கீதத்தை அலசி அலசிப் பார்த்தவர். சாதாரணமாக எல்லா சங்கீதத்தையும்



பெங்களூர் ப்ருக்பாண்ட் இந்தியா பிரை வேட் லிமிடெட்டின் சேல்ஸ் டைரக்டர் ஸ்ரீ கே.வி. சலம் அவர்கள் குமாரி சௌ. பிரேமாவுக்கும், ஸ்ரீ வி.எஸ். கிருஷ்ணன் பி. ஏ. அவர்களுக்கும் திருப்பதியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள் !

இலேசில் ஒப்புக்கொள்ள மாட்டார். முதன் முதல் அவர்முன் பாடவே எனக்குப் பயமாக இருந்தது. நாளடைவில் அவர் என் சங்கீதத்துக்கு அடிமையாகி விட்டார். சில சமயம் அவர் என் பாட்டைக் கேட்டுக் கண்ணீர் விட்டே அழுது விடுவார்.

தகப்பனாரைப் போலப் பிள்ளை ஒருநாளும் சங்கீதத்தில் ஆர்வம் கொண்டவராகத் தெரியவில்லை. முதலில் நான் அதை அவ்வளவாகக் கவனிக்கவில்லை. நாளடைவில் அவருக்குச் சங்கீதமென்றால் பாகற்காய் சாப்பிடுவது போல் என்பதை அறிந்து கொண்டேன். இப்படிப்பட்ட தந்தைக்கு ஞான சூன்யமான ஒரு பிள்ளை எப்படிப் பிறந்தாரோ என்று எனக்கு ஆச்சர்யமாக இருந்தது.

காலச்சக்கரம் சுழன்றது. தங்க விக்கிரகம் போன்ற ராமுவைப் பெறும் பாக்கியம் பெற்றேன். பிறந்தகத்திலேயே ஏழு மாதங்கள் சுகமாகத் தங்கினேன். குழந்தை பிறந்த பிறகுகூட நான் வீணை வாசிப்பதை நிறுத்தவில்லை. சில சமயம் குழந்தை அலறுவதைக் கூடக் கவனிக்காமல் சங்கீதத்தில் ஈடுபட்டு விடுவேன். பிறந்தகத்தில் அம்மா பாட்டி முதலியவர்கள் மாற்றி மாற்றிக் குழந்தையைக் கவனித்து வந்ததால் எனக்குக் கஷ்டமாக இல்லை. புக்ககத்துக்குப் போன பின்பும் மாமனார் அந்த வேலையை ஏற்றுக் கொண்டு விட்டார். பேரனின் பொக்கை வாய்ச் சிரிப்பில் இந்த உலகத்தையே மறந்து விட்டார் அவர்.

அன்றும் ஒரு வெள்ளிக்கிழமை. எட்டு மாதங்கள் நிரம்பப்பெற்ற பூரண கர்ப்பிணியாக இருந்தேன். அந்த வெள்ளிக்கிழமை என் மாமனார் ஏதோ அவசர காரியமாக வெளியூர் போயிருந்தார். என் கணவர் அன்று என்னை ஒரு படத்துக்கு அழைத்துப் போவதாகவும் ஆறு மணிக்குத் தயாராக இருக்க வேண்டுமென்றும் கூறியிருந்தார். திரும்பிவர ஒன்பது மணியாகிவிடும். அதற்கு மேல் சாப்பிட்டுவிட்டு வேலைகளை முடிப்பதற்குள் மணி பத்தரையாகிவிடும். அப்புறம் வீணை வாசிக்க நேரம் ஏது? அதற்காக மாலை ஐந்தரை மணிக்கே விளக்கேற்றி வைத்து விட்டு மிகவும் உருக்கமாகச் சியாமளா தண்டகம் வாசிக்க ஆரம்பித்து விட்டேன். காப்பிக்காக அடுப்பில் ஜலம் வைத்துவிட்டு வந்தது ஞாபகமேயில்லை. ஒரு நிமிஷங்கூட வாசித்திருக்க மாட்டேன். "ஐயோ ! அம்மா !" என்று வீறிட்டு அலறின ராமுவின் குரலைக் கேட்டதும்பதட்டத்துடன் எழுந்து ஓடினேன்.

அப்போதுதான் ஆபீஸிலிருந்து திரும்பி விட்டு வாசற்படியில் நுழைந்த என் கணவரும் ஓடி வந்தார். சமையலறையில் நான் கண்ட காட்சி! கொதிக்கும் வெந்நீரைக் காலில் கொட்டிக்கொண்டு துடிதுடித்துக் கொண்டிருந்தான் குழந்தை. ஆவென்று அலறினேன். என் கணவர் ருத்ரமூர்த்தியாக மாறினார் ! என் பின்னலைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக்கொண்டு வந்து கன்னத்தில் பளார் பளார் என்று அறைந்து, "சீ, சனியனே ! நீ குடும்பத்தை நடத்தும் லட்சணம் இப்படித்தானா? குழந்தையைக் கூடக் கவனிக்காமல் அது என்ன பாட்டு ! நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்க்கிறேன். அடுப்பில் ஜலம் வைத்ததுகூட நினைவில்லாமல் அப்படி ஒரு பாட்டா ? வீணையாம், வீணை. கணவன், வீடு, குழந்தை இந்த ஒரு நினைவு இல்லாமல் சதா வீணையைக் கட்டிக்கொண்டு அழுவது தான் கடமையா ? அப்பாவின் முகத்துக்காகப் பார்க்கிறேன். இல்லா விட்டால் அன்றே உன்னைத் தொலைத்துத் தலைமுழுகி விட்டிருப்பேன்" என்று சொல்லிவிட்டு ஆத்திரத்துடன் என்னைக் கரகரவென்று இழுத்து வந்து பூஜை அறையில் தள்ளிவிட்டுக் கதவைப்படாரென்று சாத்தினார். நான் நிலை தவறி வீணையின்மீது தடாரென்று விழுந்தேன். நான் விழுந்த வேகத்தில் வீணை உருண்டு பக்கத்திலிருந்த இரும்பு பீரோவின்மீது பட்டுப் படீரென்று இரண்டு துண்டாகி விட்டது. என் தலை சுழன்றது. அப்படியே கீழே சாய்ந்து என் நினைவு இழந்து கிடந்தேன்.

மறுபடியும் நான் கண் திறந்து பார்த்த போது என்னருகில் சின்னஞ் சிறு குழந்தை பிழிந்த நார்போல் கிடந்தது. எனக்குக் குறைப் பிரசவம் ஏற்பட்டதைப் பிறகுதான் அறிந்து கொண்டேன். அரைகுறை மயக்கத்தில் கிடந்த எனக்குப் பிரசவ நோய்கூட அதிகமாகத் தெரியவில்லை. சூழ்நிலையை உற்று நோக்கினதில் நான் இருப்பது ஒரு பிரசவ வைத்தியசாலை என்று தெரிய வந்தது. கவலை தோய்ந்த முகத்துடன் என் மாமனார் என் அருகில் அமர்ந்திருந்தார். "ராமு எங்கே?" என்றேன் நான் ஈனஸ்வரத்துடன்.

"லக்ஷ்மி ! அவன் காலில் வெந்நீர் அதிகமாகக் கொட்டவில்லை. தரையில் தான் கொட்டியது. ஒருசிறு துளிதான் அவன் காலில் தெறித்தது. பயத்தால் குழந்தை அலறியிருக்கிறான். — முட்டாள்! ஆத்திரத்தால் நீர

# சித்தர் கோரோஜனை மாத்திரை



குழந்தைகளுக்கு உண்டாகும் சளி இருமல், கபம், தொண்டைக் கட்டு, சீதளம், சுரம், மந்த வாய்வு இவைகளுக்குக் கைகண்டது

40 மாத்திரைகள் கொண்ட
புட்டி 1க்கு விலை அணா 12

★

தயாரிப்பவர்கள் :

**ஆர். எஸ். பதி & கோ.**

(ஸ்தாபிதம் ; 1909)

தபால் பெட்டி நெ. 99, மதுரை

சென்னையில் கிடைக்குமிடம்

ஸ்கூல் விழூ ஸ்டோர்ஸ், 96, தம்பு செட்டித் தெரு ● எம். எஸ். ஸ்டோர்ஸ் 1/17H, மவுண்ட் ரோடு ● அப்பா & கோ., நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு

# சிஸர்ஸ்

சிகரெட்டுகள்



யோசிக்காமல் ஒரு கர்ப்பிணியை அப்படியா அடிப்பது? படித்துப் பட்டம் பெற்று என்ன பயன்?'' என்று பிள்ளையைக் கடிந்து கொண்டார். ஆகா! இத்தகைய அன்புடைய மாமனாரைப் பெற்ற நான் எவ்வளவு பாக்கியசாலியாக இருக்க வேண்டும்? என் கணவரின் கோபம் அவர் அன்புக்கு முன் தவிடுபொடியாகிவிட்டது.

குறைப் பிரசவத்தால் ஏற்பட்ட தேக அசௌக்கியத்தின் காரணமாக நான் வைத்தியசாலையிலேயே இரண்டு மாதங்கள் தங்கும்படி நேர்ந்து விட்டது. பிரேமா நன்றாகத் தேறி விட்டாள்.

குழந்தையும் கையுமாக வீட்டில் நுழைந்த போது என் மனம் மிகவும் மாறியிருந்தது. பூஜையறையில் உடைந்து கிடந்த வீணையைக் கண்டதும் என் உள்ளம் பொருமியது. வீணையுடன் என் உள்ளமும் உடைந்தது. மற்றொரு வீணை எனக்குக் கிடைப்பது கஷ்டமில்லை. ஆனால் இத்தனை நாட்கள் என்னுடன் இழைந்து என் விரலோடு விளையாடிய அந்த அரிய பொருள் போய் விட்டதே என்று என் மனம் ஏங்கியது. பின்னால் வரப்போகும் கேடு காலத்துக்கு இது ஒரு அறிகுறி என்று எண்ணினேன். இதயம் வெடிக்கும் வரையில் குலுங்கிக் குலுங்கி அழுதேன். ராஜேசுவரியின் படத்துக்கு முன்பு மண்டியிட்டு உட்கார்ந்தேன்.

''பராசக்தி! என்னை மன்னித்து விடு. என் வாழ்க்கையின் நாதம் அறுந்து விட்டது. 'வீணையைத் தொட நீ அருகதையற்றவள்' என்பதை நீ சொல்லாமல் சொல்லி விட்டாய். அவராக விரும்பிக் கேட்டாலன்றி நான் வீணையைக் கையால் தொட மாட்டேன். உன் மீது ஆணை!'' என்று அலறி வேண்டிக் கொண்டேன்.

அன்றிலிருந்து நான் புது மனுஷியாக மாறி விட்டேன். வெகு தீவிரமாக என் கணவருக்குப் பணிவிடை புரிவதிலும் குழந்தைகளைக் கவனிப்பதிலும் ஈடுபட்டேன். என் மாமனார் என் போக்கைப் புரிந்து கொண்டு விட்டார். என் வீணை உடைந்து போனதைக் கேள்வியுற்ற என் தந்தை சீக்கிரத்தில் அதைவிட ஒரு நல்ல வீணை செய்து அனுப்பி விட்டார். அதை நான் கையால் தொட்டு மீட்டக்கூட வில்லை. பூஜை சாமான்களுடன் வைத்துப் பூஜை செய்தேனேயன்றி அதை வாசிக்க வில்லை.

பிரேமா பிறந்ததிலிருந்து என்னுடைய மாமனாரும் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகி விட்டார்.

ஒரு நாள் அவருக்கு உடம்பு கவலைக்கிடமாக ஆயிற்று. என்னையும் அவரையும் கிட்டே அழைத்தார். அவரது பஞ்சடைந்த இரு விழிகளும் அன்புடன் எங்களை நோக்கின. ''கிட்டு! நான் இன்னும் அதிக நேரம் உயிருடன் இருக்க மாட்டேன். லக்ஷ்மி தங்கமான பெண். வீட்டை விளக்க வந்த பெண் தெய்வம். அவளது அருமை உனக்குத் தெரிய வில்லை. அவளது சங்கீதம் இணையற்றது. பூஜிக்கத் தகுந்தது. அதில் ஆழ்ந்து விட்டால் நமக்கு வேறு ஒன்றுமே தெரியாது. அவளது சங்கீதம் அழியாமலிருக்க நீ உதவி செய்ய வேண்டும். அதாவது நீ அவள் வீணை

வாசிப்பைத் தடுக்கக் கூடாது. எங்கே, எனக்கு வாக்குறுதி அளி. உன் கோபத்துக்குப் பயந்து அவன் வீணையைக் கையால் தொடக் கூட அஞ்சுகிறான். இது நியாயமல்ல. உன் வாயாலேயே அவனைத் தினம் வாசிக்கச் சொல்லிக்கேள். அப்போதுதான் என் ஆத்மா சாந்தியடையும். என்ன? நான் கூறியபடி நடப்பாயா?'' என்றார்.

துக்கம் நெஞ்சை அடைக்க அவர், 'சரி' என்பதற்கு அறிகுறியாகத் தலையாட்டினார். பெரியவருடைய மரண காலம் நெருங்கி விட்டதைக் கண்ட எங்களுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. சில வினாடிகளில் அவர் புன்னகை தவழும் முகத்துடன் மீளா நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

அவரது புகைப் படத்தைப் பெரிதாக்கி என் பூஜையறையில் சுவாமி படங்களுக்கு நடுவில் மாட்டி வைத்தேன். எழுந்ததும் அவர் படத்தை வணங்கி விட்டுத்தான் இதர அலுவல்களை நான் கவனிப்பது வழக்கம்.

ஒரு வருடம் ஓடி ஒளிந்துவிட்டது. அன்று அவரது வருட சிராத்தம். என் கணவர் பிதுர்க் காரியங்களை வெகு சிரத்தையுடன் செய்தார். நானும் அவருடன் எல்லாக் காரியங்களிலும் கலந்து கொண்டேன். சாப்பாடானதும் அலுப்படைந்த நான் பூஜையறையில் படுத்துக் கொண்டு கண்ணயர்ந்தேன்.

''லக்ஷ்மி! எங்கே சியாமளா தண்டகம் வாசி, கேட்கலாம்'' என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டேன். என்ன விந்தை? புன்முறுவலுடன் வாசற்படியில் என் மாமனார் நின்று கொண்டிருந்தார்! ''நீங்கள், நீங்கள்!'' என்று குழறினேன். அவர் சிரித்தவாறு,''நான் சாகவில்லை, லக்ஷ்மி! உன் பாட்டைக் கேட்காமல் என் உயிர் போகாது. நான் இங்கேதான் இருக்கிறேன்!'' என்றார்.

முதுகில் யாரோ தட்டியதும் சடக்கென்று விழித்துக் கொண்டேன். என் கணவர் அருகில் நின்று கொண்டிருந்தார்.

நான் கண்டது பகற் கனவு என்பதை உணர்ந்தேன். ஏனோ எனக்கொருவித மயிர்க் கூச்சலுண்டாயிற்று.

நான் கண்ட கனவைப் பற்றி அவரிடம் கூறினேன். அவர்சந்தோஷத்துடன் ''லக்ஷ்மி, பயப்படாதே! அப்பாவின் ஆவலைப் பூர்த்தி செய்வது நம் கடமை. நானே சொல்ல வேண்டு மென்று இருந்தேன். அவர் இறந்து ஒரு வருஷத்திற்குள் ஒரு நல்ல காரியமும் ஆரம்பிக்க வேண்டாம் என்று இருந்தேன். இன்று விசேஷ தினம். வருகிற வெள்ளிக் கிழமையிலிருந்து ஆரம்பித்து விடு. அன்று தீபாவளியும்கூட!'' என்று அளவற்ற மகிழ்ச்சியுடன் கூறினார்.

என் உள்ளம் சந்தோஷத்தால் துள்ளிக் குதித்தது. வெள்ளிக்கிழமை தீபாவளியை வெகு சிறப்பாகக் கொண்டாடினோம். என் தகப்பனார் தீபாவளிக்காக எனக்கு ஒரு நீல வர்ணப் பட்டுப் புடவை அனுப்பி யிருந்தார்.

முதல் காரியமாக வீணையை அலங்கரித்துப் பூஜையில் வைத்தேன். மாமனார் படத்துக்கும் வீணைக்கும் புஷ்ப மாலைகள் சூட்டியபின் தான் மற்ற வேலைகளைக் கவனித்தேன். குழந்தைகள் எண்ணெய் தேய்த்துக் குளித்து விட்

பாரதி வாக்கு :

மண்ணுலகத்துப் பொருளும் பெருமையும் மிக இழிவுடையன வாயினும் அவற்றைக் கூடச் சோம்பரால் துறந்திருப்பவன் நற்கதி அடையமாட்டான். உழைத்துத் தேடி அவற்றின் இயற்கையை அநுபவித்துப் பார்த்துப் பின்பு துறக்க வேண்டும். பாடுபட்டுத் தேடிப் பணத்தை அடைபவனை கவி நிந்தனைசெய்யவில்லை. அதைப் போற்றுதற் குரியதோர் பெருமையுடையதென் றெண்ணிப் புதைத்து வைப்பவனையே நிந்தை செய்கிறார்.

டுப் பட்டாடைகள் அணிந்து அப்பாவுடன் பட்டாசு வெடிக்கப் போய்விட்டனர். நானும் புதுப் புடவை யுடுத்தி சுவாமிக்கு நமஸ்காரம் செய்து விட்டு வீணையை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தேன். இரண்டு வருடங்களுக்கு அப்புறம் இன்றுதான் வீணையை முதன் முதலில் தொடுகிறோம் என்பதை நினைக்கும் போது எனக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது. இப்படிச் சேர்ந்தாற்போல் இரண்டு வருடங்கள் வாசிக்காமல் நான் இருந்தது இதுதான் முதல் தடவை. என் விரல்கள் வீணையை மீட்டத் துடித்தன. சுருதி கூட்டினேன். அறை முழுவதும் நாத வெள்ளம் கரை புரண்டோடியது. ஐந்து முகங்களும் ஏற்றப்பட்டுப் பள பள வென்று விளங்கும் குத்து விளக்கில் என் மாமனாரின் சிரித்த முகம் தெரிந்தது. என்னையே மறந்து நாத வெள்ளத்தில் மிதந்தேன். என் விரல்கள் வீணைத் தந்திகள் மேல் மேலும் கீழும் ஓடிக் கொண்டிருந்தனவே யன்றி நான் இன்னது தான் வாசிக்கிறேன் என்று எனக்கே தெரியவில்லை. சங்கீதத்தில் லயித்து விட்டால் இந்த உலகத்தையே மறந்து விடுவது சுபாவந்தானே! சியாமளா தண்டகத்தை ஆரம்பித்ததும் நான் இந்த உலகில் இல்லை. ஆகாயத்தில் பறப்பது போன்ற உணர்ச்சி. திடீரென்று உடலில் தேள் கொட்டுவது போல் சுரீர் என்றதும் விழித்துக் கொண்டேன்.

''ஐயோ, இதென்ன விபரீதம்! என் புத்தப் புது புடவை குத்து விளக்கில் பட்டுத் தீப்பற்றிக் கொண்டு எரிகிறதே! வீணையை வைத்து விட்டு அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தேன். தலைப்பிலிருந்து தீ பரபரவென்று உடல்முழுவதும் பரவியது. நான்புடவையைக் களைந்து விட முயன்றபோது என் கைகளில் நெருப்பு சுட்டதே யன்றிப் புடவையைக் களைய முடியவில்லை. ''ஐயோ!'' என்று அலறியபடி கீழே உருண்டேன். தீ அதிகமானதே யன்றிக் குறையவில்லை. பாவி! வீணையின் ஒருபக்கத்திலும் தீப்பற்றிக் கொண்டதை நான் கவனிக்க வில்லை. தண்ணீரை மொண்டு கொட்டிக் கொள்ளலாம் என்று ஸ்நான அறைக்குள் சென்றேன். அதற்குள் ''கங்கா ஸ்நானம் ஆச்சா?'' என்று விசாரிக்கப்போன என் கணவரும் குழந்தைகளும் அலறிப்புடைத்துக் கொண்டு வந்தனர்.

அதற்குள் நான் ஸ்மரணை யிழந்துவிட்டேன். விழித்துக் கொண்டதும் கழுத்துக்குக் கீழ் இடுப்பு வரை இரண்டு கைகள், கால்கள் எல்லாம் கட்டுப் போடப்பட்டு, ரண வலியால் துடிதுடித்துக் கொண்டிருந்தேன். அக்னி பகவான் கருணை கூர்ந்து என், முகத்தை மட்டும் விகாரப்படுத்தாமல் போய்விட்டான்.

என் வீணையும் பொசுங்கிவிட்டது. விரல்களும் பொசுங்கிவிட்டன. ஏன் என் மனமே பொசுங்கிவிட்டது. வாழ்வே பாழாகிவிட்டது போலிருந்தது எனக்கு.

வருடங்கள் உருண்டன. பிரேமா சௌந்தர்யப் பதுமையாக வளர்ந்து வந்தாள். அவளுடன் சங்கீதமும் ஒளிவிட்டது. தானாகவே வீணையை வைத்துக் கொண்டு வாசிக்கலானாள். நான் வாயினால் சொல்வதை அவள் கைகள் உடனே வாசித்துவிடும். வாசித்துக் காட்ட என் கைகள் துடிக்கும். ஆனால் அதை நிறைவேற்றும் நிலையில் நான் இல்லையே ?..

சில மாதங்களில் பிரேமா வீணை வாசிப்பதில் பிரசித்தியடைந்தாள். ரேடியோவிலும் பல பெரிய சபாக்களிலும் அவளது கச்சேரிகள் இடம் பெற்றன. காலா காலத்தில் ஒரு நல்ல பையனாகப் பார்த்து அவளுக்கு மணம்முடித்து வைத்தோம். அவள் கணவனும் நல்ல ரசிகனாக இருந்ததால் அவளது சங்கீதம் வளர்ந்து தென்னாட்டில் வீணை வாசிப்பதில் நிகரற்றவள் என்று பெயர் வாங்கிவிட்டாள்.

என் பிள்ளை ராமுவும் படித்துப் பட்டம் பெற்று நல்ல உத்தியோகத்தில் இருந்தான். அவனுக்கும் கல்யாணமாகி நாட்டுப் பெண் வந்து சேர்ந்தாள். நாட்டுப் பெண் ஜானகி என்னிடம் பிரியமாக நடந்து கொண்டாள்.

''இப்போது ஸ்ரீமதி பிரேமா அவர்கள், சியாமளா தண்டகத்தை ராகமாலிகையாக வாசிப்பார்கள்'' என்று ரேடியோவிலிருந்து வெளிப்பட்ட சொற்கள் என்னைச் சிந்தனையிலிருந்து விடுபடச் செய்தன. ஆவலுடன் எழுந்து உட்கார்ந்து கொண்டேன். ''மாணிக்க வீணாம்'' என்று வீணையுடன் இழைந்து வந்த அவள் குரலின் இனிமை என்னை மெய் சிலிர்க்கச் செய்தது. ரேடியோவில் அவள் இந்த சுலோகத்தை வாசிப்பது இதுதான் முதல்தடவை! என் காதுகளையே நம்ப முடியவில்லை. பிரேமாவா வாசிக்கிறாள்? என் குருவின் பிடிகள் அவளிடம் எப்படி அகப்பட்டுக் கொண்டன? என் கற்பனைகளையெல்லாம் அவள் வீணையில் இழைத்துக் கொட்டி விட்டாள்.

''லக்ஷ்மி! உன் பெண் உன்னை மிஞ்சி விட்டாள். உனது மனக்குறை அவளால் தீர்ந்து விட்டது. அம்மா வாசித்தாலென்ன? பெண் வாசித்தாலென்ன? நீ மட்டும் இப்போது வீணை வாசிக்கக்கூடிய நிலைமையில் இருந்தால் அவள் ஒரு நாளும் இவ்வளவு முன்னுக்கு வந்திருக்க முடியாது. உன் வாசிப்பைக் கேட்டு விட்டு உன் எதிரில் வாசிக்கப் பயந்துகொண்டு பேசாமல் இருந்திருப்பாள்'' என்று கூறிக் கொண்டே என் கணவர் உள்ளே நுழைந்தார்.

''எல்லாம் அப்பாவின் ஆசீர்வாதம்'' என்றேன் கம்பிய குரலில். என்னையறியாமல் என் கைகள் என் மாமனாரின் படத்தை நோக்கிக் கூப்பின. அந்தப் படத்துக்குப் போடப் பட்டிருந்த ரோஜாப்பூ மாலையிலிருந்து ஒரு மலர் கீழே விழுந்தது. அதை எடுத்து என் கண்களில் ஒற்றிக் கொண்டேன்.

## எங்கப்பா எவ்வளவு நல்லவர்!

எவ்வளவு பாக்யசாலி குழந்தை! அவன் தகப்பனார் எப்பொழுதும் ஜான்ஸன் பேபி பவுடர் வாங்கி வருகிறார். என்ன மென்மை! என்ன குளுமை! அந்தக் குழந்தையின் சருமத்திற்கு எவ்வளவு இனிமையானது!

Johnson's
TRADE MARK

ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்




**இலவசம்:** குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு வேண்டிய அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. சுலபமாகப்படித்து புரிந்து கொள்ளும்படியான இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டுள்ளது.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி.ஓ. பாக்ஸ் 1976, டிபார்ட்மெண்ட் 20P
பம்பாய்

JB 3024





# இல்லறம்

தவம் செய்து கொண்டிருந்த ஒரு ரிஷி பறவைகளைப் பார்த்தார். தானும் ஒரு பறவையானால் வாழ்க்கையில் சுகம் காணலாம் என்று எண்ணினார்.

அவர் செய்து வந்த தவத்தின் பலத்தினால் அவர் எண்ணிய எண்ணம் உடனே கைகூடி விட்டது. அவர் ஒரு குருவியாகி ஒரு பெண் குருவியோடு சந்தோஷமாகப் பறந்து சென்றார்.

* * * *

கூட்டிலிருந்த தம் குஞ்சுகளுக்கு இரண்டு குருவிகளும் சிறு புழுக்கள் கொண்டு வந்து தந்து தாமும் தமக்கு வேண்டிய உணவைச் சம்பாதித்துக் கொண்டு சில நாட்கள் வாழ்ந்து வந்தன. ஒரு நாள் ஆண் குருவி கூட்டுக்குத் திரும்பி வர வில்லை. வேறொரு பெண் குருவியோடு பறந்து போயிற்று.

"இந்தக் குருவி மனித ஜன்மத்து நடவடிக்கையை என் னிடம் காட்டி விட்டது" என்று துயரப்பட்டது பெண் குருவி.

சிலகாலம் கழித்து ஒருநாள் காலையில் ரிஷிக் குருவி தன் பழைய காதலியைச் சந்தித்தது. ஒரு மரக் கிளையில் உட்கார்ந் திருந்த பெண் குருவியண்டை முதலில் கொஞ்சம் எட்டி உட்கார்ந்து, மெள்ள மெள்ள அதன் அண்டை நகர்ந்தது.

"கிச்சு கிச்சு! கிச்சு கிச்சு!—தயவு செய்து தூரவே நில். என்னிடம் வரவேண்டாம்" என்றது பெண் குருவி.

"கிச்சு கிச்சு—ஏன் இப்படிச் சொல்லுகிறாய்?" என்றது ரிஷிக் குருவி.

"நீ உண்மையான பறவையல்ல. நிஜமான குருவியாயிருந் தால் இப்படி என்னையும் என் குஞ்சுகளையும் விட்டு விட்டு இன்னொரு மனைவியைத் தேடிக் கொண்டு போவாயா?" என்றது பெண் குருவி.

ஆண் குருவி வெட்கமடைந்து பறந்து போயிற்று.

பறந்து போய் ஒரு மரத்தின் மேல் தனியாக உட் கார்ந்து கொண்டிருந்தது. அங்கே ஒரு பூனை மெள்ளப் பதுங்கிக் கொண்டு பறவையை நெருங்கிற்று.

குருவி பயந்து போய்த் துள்ளிக் கீழே உயி ரற்று விழ்ந்தது. விழுந்ததும் குருவி ரிஷியாகப் போயிற்று. அங்கேயே மறுபடி தவம் செய்து கொண்டு ரிஷி உட்கார்ந்தார்.



பூனை ரிஷியண்டை மெதுவாகப்போய் மோந்து பார்த்தது. பறவை வாசனை இன்னும் கொஞ்சம் இருந்தபடியால் இப்படிச் செய்தது.

ரிஷி பூனையை ஒன்றும் செய்யவில்லை. பூனையும் அவர் பக்கத்தில் தபசி போல் கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்தது.

"மனிதனும் பறவையைப் போல் நற்குணம் அடையக் கூடாதா?" என்று ரிஷி துக்கப்பட்டு தியானித்துக் கொண்டு தவம் செய்தார்.

"அது முடியாது" என்றது பூனை. ரிஷியின் யோசனையை அது எப்படியோ தெரிந்து கொண்டது.

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?" என்றார் ரிஷி.

"மியாவ்! மியாவ்! சுபாவம் என்பது ஒரு கொடிய சக்தி. நானும் நல்லவன் ஆகவேண்டும் என்று எவ்வளவோ பார்க்கிறேன். ஆனால் பறவையோ எலியோ கண்டால் உடனே எல்லாம் மறந்துபோகிறது. அதைப் போலவே உன்னுடைய ஜாதி விசேஷமும். மனித ஜன்மத்தில் ஆண் மக்களுடைய உள்ளம் நிலையில் நிற்கிறதில்லை. பூனைகளாகிய நாங்களும் இந்த விஷயத்தில் உங்களைப் போலத்தான் இருக்கிறோம்" என்றது பூனை.

ரிஷிக்கு வெட்கம் இன்னும் அதிகமாயிற்று.

"தயவு செய்து நீ அகன்று போ. நான் தவம் செய்ய வேண்டும்" என்றார்.

"மியாவ்! மியாவ்-! — இதையும் அதையும் எண்ணிக் கொண்டு சஞ்சலப்பட்டுக் கொண்டு நீர் என்ன தவம் செய்யப் போகிறீர்?" என்று சொல்லி விட்டுப் பூனை ஓடிப் போயிற்று.

ரிஷிக்கு தேவி பிரசன்னமாகி, "அப்பனே! உனக்கு ஆசை நீங்கவில்லை. நீ முதலில் இல்லறம் சரியாக நடத்தப் பயிற்சி அடைந்து, அதன் பிறகு தவம் செய்!" என்றாள்.

**ராஜாஜி**



## இந்த இக்கட்டான நிலைக்கு ஆளாகாதீர்கள்!

### உங்கள் ட்ரௌஸர் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்குவதைத் தடுக்க 'ஸான்பொரைஸ்ட்' அடையாளத்தைக் கவனியுங்கள்

சாதாரண துணியில் தைக்கப்பட்ட நேர்த்தியான ட்ரௌஸர், நீந்து சுருங்கிவிடும், அதன் தோற்றம் கெட்டுவிடும். ஆனால் நீங்கள் வாங்கும் ஒவ்வொரு உடையிலும் 'ஸான்பொரைஸ்ட்' அடையாளமிருக்கிறதா என்று கவனித்தால், உடைகள் சுருங்கும் என்று நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை.

'ஸான்பொரைஸ்ட்' அடையாளமிடப்பட்ட துணிகள் முன்னமேயே முற்றிலும் சுருக்கச் செய்யப்பட்டவை. ஆகவே அநேக சலவைகளுக்குப் பிறகும் உங்களுடைய உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி ஒரு பொழுதும் சுருங்காது.

எப்பொழுதும் 'ஸான்பொரைஸ்ட்' அடையாளத்தைக் கவனியுங்கள்!




**ஸான்பொரைஸ்ட் ஸர்வீஸ்,** 'பாசிஜாக்',
நேதாஜி சுபாஷ் ரோடு, மெரீன் ட்ரைவ், பம்பாய் 2

'ஸான்பொரைஸ்ட்-கே-மெஹ்மான்' என்ற நிகழ்ச்சியை ரேடியோ ஸிலோனில் கேளுங்கள்: பிரதி ஞாயிறு பகல் 12-45 மணி 31 மீட்டர்; பிரதி செவ்வாய்க்கிழமை இரவு 7-30 மணி, 41 மீட்டர்

பாலர் தொடர் கதை

# ஊமை ராஜா

துரோணன்

அன்று நாலாம் வகுப்பு அறையில் ஒரே அமர்க்களம்! பையன்கள் எல்லோரும் குதித்துக் கொம்மாளம் அடித்துக் கொண்டிருந்தார்கள். உபாத்தியாயர் சோமநாத சர்மாவும் உட்கார்ந்தபடியே அவர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். அதன் காரணம் என்ன தெரியுமா? வருஷாந்திரப் பரீட்சைகள் யாவும் அன்றுடன் முடிந்துவிட்டன. இன்னும் இரண்டு தினங்களில் கோடை விடுமுறைக்காகப் பள்ளிக்கூடத்தை மூடப்போகிறார்கள். அதனால்தான், பையன்களை அவரவர்கள் விருப்பப்படி விட்டிருந்தார் ஆசிரியர்!

சிறிது நேரத்துக்குப் பின் இரைச்சல் அதிகமாகவே, அவர் தம் கையிலிருந்த பிரம்பை மேஜையின் மீது ஓங்கித் தட்டினார். உடனே பையன்களெல்லாம் சத்தம் செய்யாமல் உட்கார்ந்தார்கள். உபாத்தியாயர் சொன்னார்: "டேய், பையன்களா! இன்னும் இரண்டு நாள்தான் உங்களுக்குப் பள்ளிக்கூடம். அப்புறம் நாற்பது நாட்களுக்கு உங்களுக்கு லீவு! இப்போது நீங்களெல்லாம் சத்தம் போடாமலிருந்தால், ஒரு நல்ல கதை சொல்லுவேன்."

பையன்கள் இன்னும் அதிகமான ஆரவாரத்துடன், "ஸார், கதை சொல்லுங்கோ ஸார்!" என்று மிகுந்த ஆர்வத்துடன் கேட்டார்கள்.

"விக்ரமாதித்தன் கதை சொல்லுங்கோ சார்!" என்றான் கோடி மூலையில் இருந்த குண்டு மாணிக்கம்.

"போடா, போடா! பீமசேனன் கதையை விடவா அது ஒசத்தி?" என்றான் சபாபதி.

"அதெல்லாம் வேண்டாம்; வேறே புதுக்கதை ஏதாவது சொல்லுங்கோ ஸார்!" — இவ்வாறு வகுப்பில் சில குரல்கள் எழுந்தன.

ஆசிரியர் கையை அமர்த்தியபடியே, "எங்கே, பீமன் கதை வேண்டுமென்பவர்களெல்லாம் கையை உயரத் தூக்குங்கள்!" என்றார்.

பையன்கள் கை தூக்கினார்கள். சில பையன்கள் அடுத்தவர்களைச் சந்தேகத்துடன் பார்த்தபடியே தூக்கினார்கள். சபாபதி தன் பக்கத்திலிருந்த பையனையும் கை தூக்குமாறு இடித்துக்கொண்டே, தன் இரண்டு கைகளையும் உயரத் தூக்கினான்! ஆனால், உபாத்தியாயரின் கண்களுக்கு அது தெரியாமல் போய் விடுமா? அவர் மொத்தமாகப் பன்னிரண்டு கைகளைத்தான் எண்ணினார். பின்னர், புதுக் கதை வேண்டுமென்பவர்களைக் கை தூக்கச் சொன்னார். அவர்கள் பத்தொன்பது பேர்கள் இருந்தார்கள்!

"புதுக் கதைக்குத்தான் ஆதரவு அதிகம், ஸார்!" — இவ்வாறு பையன்கள் ஒருமிக்கக் கூறிவிட்டுக் கை தட்டினார்கள். உபாத்தியாயர் கதை சொல்லுவதற்காகத் தம் தொண்டையை ஒரு தடவை கனைத்துக் கொண்டார்.

நாலாபுறங்களிலும் இருந்த மாணவர்கள் சேர்ந்தாற்போல் உபாத்தியாயரின் மேஜையைச் சுற்றிலும் நெருங்கி வந்து உட்கார்ந்து கொண்டார்கள். அப்பொழுது சத்தமே இல்லை!

"நீங்களெல்லோரும் சேர, சோழ ராஜாக்களைப் பற்றி இந்த வகுப்பில் படித்திருக்கிறீர்களல்லவா? அதுமாதிரி, ஒரு ராஜாக்கதைதான் இப்போது சொல்லப் போகிறேன். ஆனால், நான் சொல்லப் போவது ஒரு 'ஊமை ராஜா'வின் கதை!" என்றார் சோமநாத சர்மா.

"ஊமை ராஜாவா? அப்படியானால் அவனுக்கு எப்படி ஸார் ராஜ்யம் நடத்த முடிந்தது?" என்றான் பாலு.

"ஏண்டா அவசரக் குடுக்கை! வாத்தியார் சொல்வதற்குள்ளே என்னடா அவசரம்?" என்று சீறினான் சட்டாம்பிள்ளை சங்கரன். தனக்குள்ள அதிகாரத்தை அவன் அவ்வாறு காட்டினான்.

உபாத்தியாயர் மீண்டும் பிரம்பை மேஜையின் மீது அடித்தார். "பையன்களா! இப்போது நான் சொல்லப் போகும் கதையை ரொம்ப இலக்கணமாகத்தான் சொல்லப் போகிறேன். அதாவது - புஸ்தகத்திலே படிக்கிறாப் போலே. கவனித்துக் கேட்கணும்; தெரிந்ததா?" என்றார்.

பையன்கள் ஒரு முகமாகத் தலையை அசைத்தனர். உபாத்தியாயர் கதையைச் சொல்லத் தொடங்கினார்:

# 1. அரசரின் குறை

வெகு காலத்துக்குமுன், நம் தேசத்தில் - மைசூர் நாட்டுக்கு அருகில் ஒரு சிறு ராஜ்யம் இருந்தது. அதை ஆண்டுவந்த அரசரின் பெயர் விக்கிராந்தன். அவர், அநேகவிதமான சாஸ்திரங்களையும், ராஜ தந்திரங்களையும் அறிந்தவர். அவர் தம் குடிமக்களிடம் ரொம்ப விசுவாசத்துடனும், நீதியுடனும் நடந்துகொண்டிருந்தார். நாட்டில் அவருக்கு நல்ல செல்வாக்கும் புகழும் இருந்தன. ஜனங்கள் அவரிடம் பயபக்தியுடன் இருந்தனர். இவையெல்லாமிருந்தும், அவருக்குக் கடவுள் ஒரு பெரும் குறையை வைத்திருந்தார்.

விக்கிராந்தனுக்கு இரண்டு பட்ட மகிஷிகள் இருந்தனர். அவர்களில், மூத்தவளான 'தாரிகை' என்பவள், ஓர் அழகான ஆண் குழந்தையைப் பெற்ற ஒரு வருஷத்துக்குப் பின் இறந்துவிட்டாள். ஆகவே, அக்குழந்தையை வளர்க்கும் பொறுப்பை ஒரு சேடிப் பெண்ணே ஏற்றுக் கொள்ளும்படி நேரிட்டது. அதே வருஷத்தில், இளைய பத்தினியான 'மல்லிகா' என்பவளுக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. இந்த இரண்டு ராஜகுமாரர்களும் மிகவும் செல்லத்துடனும், அருமையுடனும் வளர்க்கப்பட்டு வந்தனர். அவர்களில் மூத்தவனுக்கு 'விஜயன்' என்றும் இளையவனுக்கு 'விமலன்' என்றும் பெயரிட்டிருந்தார்கள்.

ராஜகுமாரர்கள் இருவரும் செல்வமாக வளர்ந்து வந்தார்கள். மூன்று வருஷங்களுக்குப் பின், சிறியவனான விமலன், நன்றாகச் சிரித்து விளையாடியும், மழலைகள் பேசியும் பெற்றோர்களை ஆனந்தத்தில் ஆழ்த்தினான். ஆனால், செவிலித் தாயின் மூலம் வளர்க்கப் பெற்ற விஜயனோ - விளையாடவுமில்லை; மழலை பேசவுமில்லை. ஏன்? அழுவதும் கூட இல்லை. ஏதோ, பித்துக் கொண்டவன்போல் உட்கார்ந்துகொண்டும், வெற்றுவெளியையே உற்றுப் பார்ப்பதுமாக இருந்து வந்தான். இதன் காரணத்தை அறிய முடியாத அரசரும், ராஜ குடும்பத்தினரும் அக்குழந்தைக்கு ஏதேனும் நோயாக இருக்குமோ என்று வெகு நாட்கள் வரை சந்தேகத்துடன் இருந்தனர். சில நாட்களிலேயே, அரண்மனை வைத்தியர்களின் மூலம், அக்குழந்தை 'ஊமை' என்பதை அரசர் அறிந்து மிகத் துயரத்தில் ஆழ்ந்தார். இத்தகைய பெரும் குறையைத் தான் கடவுள் விக்கிராந்தனுக்கு வைத்திருந்தார்.



நாளாக, நாளாக அரசரின் கவலைகளும் அதிகமாயின. அரண்மனை வைத்தியர்களின் மூலம் ராஜகுமாரனின் பிறவி நோயைப் போக்க அரசர் மிகவும் பிரயாசை எடுத்துக் கொண்டார். ஏறக்குறைய இரண்டு வருஷங்கள் முயன்றும், அந்த ஊமைக் குழந்தை, ஊமையாகவே இருந்தான். ஊமையாக இருப்பவர்களுக்குச் சாதாரணமாகக் காதும் கேட்பதில்லை அல்லவா? மகா இலட்சணம் கொண்டிருந்த அக்குழந்தையின் மீது யாவரும் பரிதாபம் அடைந்தார்கள்.

ஒரு நாள், அரசரின் அரண்மனைக்கு ஒரு புலவர் வந்திருந்தார். அவர், காவியம் இயற்றுவதில் மட்டுமின்றி, கை ரேகை சாஸ்திரத்திலும் மிகத் தேர்ச்சி பெற்றவர். அரசர், புலவரை மரியாதையுடன் வரவேற்று அவருக்கு ஆசனமளித்தார். அவர்கள் இருவரும் வெகு நேரம் வரையில் உலக விஷயங்களைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தனர். கடைசியில் அரசர், தமது மூத்த குமாரனுடைய கையிலுள்ள ரேகைகளை ஆராய்ந்து கூறுமாறு வேண்டினார். புலவர் வெகு நேரம் வரையில், ராஜ குமாரனின் கை ரேகைகள், கால்ரேகைகள், மேல் நெற்றி முதலியவைகளைக் கூர்மையுடன் ஆராய்ச்சி செய்தார். பின்னர், நாக்கை வெளியே நீட்டச் சொல்லியும் பார்த்து விட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தார். சற்று நேரத்துக்குப் பின் அவர், "மன்னர் பெருமானே! இக் குழந்தைதான் வருங்காலத்திய அரசன் என்பதில் சந்தேகமில்லை. ஆனாலும் அவன் அதற்குள்ளாக எல்லையற்ற கஷ்டங்களை அனுபவிப்பான்—" என்றார்.

இதைக் கேட்டதும் அரசரின் உள்ளத்துக்குள் மகிழ்ச்சியும், விசாரங்களும் போட்டியிடத் தொடங்கின. அவர் பரபரப்புடன் புலவரை நோக்கி, "புலவர்

பெருமானே! இக் குழந்தையின் நிலைக்கு ஏதாவது சாபங்கள் உண்டா? இதை நிவர்த்திக்க ஏதாவது பரிகாரங்கள் இருக்கின்றனவா? இவன்தான் பட்டத்தை வகிப்பான் என்று எவ்வாறு கூறுகிறீர்கள்? இவனுக்கு என்னென்ன கஷ்டங்கள் நேரிடும்?'' என்று சரமாரியான கேள்விகளை அடுக்கினார்.

புலவர் மீண்டும் சிறிது நேரம் சிந்தனையில் மூழ்கினார். பின்னர் அரசரை நோக்கி, ''மன்னவா! இவனது கைகளிலுள்ள சங்கு ரேகைகளும், நெற்றியிலுள்ள மகுட ரேகையும் இவன் அரசாளுவான் என்பதை அறிவிக்கின்றன. ஆனால், காலிலுள்ள சில கருமை வரிகளோ இவனுக்குள்ள கஷ்டங்களை அறிவுறுத்துகின்றன'' என்றார்.

அச்சமயம் சபையிலிருந்த மந்திரியான மித்திரகேது, புலவரை நோக்கி, ''பெரியவரே, தாங்கள் அவனது நாவைச் சோதனையிட்டீர்களே, அதன் பொருள் என்ன? அதில் தங்களுக்கு என்ன தோன்றியது?'' என்றார் மிகவும் அடக்கமான குரலில்.

''அதைப் பற்றித்தான் ஆராய்ச்சியுடன் சிந்திக்கிறேன். இச் சபையில் என் அறிவுத்திறம் போதாது என்றுதான் கூறவேண்டியிருக்கிறது. ஒரு விஷயம் மட்டிலும் நான் சாதாரணமாகக் கூற முடியும்—இவன் பிறவி ஊமையாக இருக்க முடியாது என்று மட்டும் ஊகிக்கிறேன். ஆனாலும், 'ஊழ்வினை'யின் பயன் எப்படியோ?'' என்றார் புலவர்.

அரசர் நெடுமூச்செறிந்த வண்ணம் புலவரிடம், ''சுவாமி, நாங்களும் இவனது நிலையை, 'ஊழ்வினை'யின் பயனாகத்தான் மதிக்கிறோம். மகத்தான பிரச்னைகளையும், பொறுப்புக்களையும் கொண்டுள்ள ராஜாங்க நிர்வாகத்தை வாயினால் பேசவும், செவிகளால் கேட்கவும் இயலாத ஒரு ஊமைப் பிறவியினால் எப்படிச் சமாளிக்க முடியும்? இப் பொறுப்புக்களை அளிப்பவனையே பெரும் பைத்தியக்காரனாகத்தான் மதிப்பிட முடியும். இந் நிலையில் இவனே வருங்காலத்திய மன்னனாவானென்று தாங்கள் எப்



வடிக் கூறுகிறீர்கள்?—" என்று கேட்டார் மனக் கவலையுடன்.

புலவரின் விழிகள் அப்பொழுது கம்பீரத்துடன் சபையை நோக்கின. அவர் ஒரு தடவை குரலைக் கனைத்துக் கொண்டவாறு, "ராஜகேசரி! நான் தபோவலிமை கொண்ட முனிவரோ, வருங்காலத்தைக் கூறும் ஞானியோ இல்லை. ஆனால், ஆன்மீகமான குரு பக்தியின் மூலம் ரேகை சாஸ்திரத்தை மட்டிலும் ஓரளவுக்கு அறியக்கூடிய பாக்கியம் பெற்றவன். இப் பையனின் தீட்சண்யமான அஸ்த ரேகைகளையும், மகுட ரேகைகளையும் கொண்டு, இவனே நாடாளுவான் என்பதை மட்டிலும் திடமாகக் கூற முடியும்!" என்றார்.

ராஜ சபையில் அப்பொழுது பரிபூரணமான நிசப்தம் சூழ்ந்திருந்தது. அங்கிருந்தோரின் முகங்களிலெல்லாம் பிரமிப்பே மிகுந்திருந்தது.

மந்திரியான மித்திரகேது மீண்டும் எழுந்து நின்று, "மகாராஜா! தங்களது மூத்த குமாரனின் கை ரேகைகளைக் கொண்டு பெரியவர் இவ்வாறு கூறிவிட்டார். இதே போன்று, இளைய குமாரரையும் அழைத்து வந்து, அவனது கை ரேகைகளையும் இம் முதியவரின் மூலம் அறிந்து கொள்ள வேண்டுமென்று எனக்கு அவாத் தோன்றுகிறது" என்றார். சபையில் இருந்த சிலர் மந்திரியின் யோசனையை வரவேற்றனர். மற்றும் சிலர் கரகோஷ ஆரவாரம் செய்து அதை ஆமோதித்தனர்.

மகாராஜா எதையோ கூறுவதற்காக வாயைத் திறந்தார். ஆனால், அதே கணம்—எங்கிருந்தோ எழுந்த அலங்கோலமான கூச்சல்கள் ராஜ சபையையே கலங்கச் செய்து விட்டன. எல்லோரும் திடுக்கிட்டவாறு நாலா புறங்களையும் நோக்கினர். ராஜ சபை மண்டபத்துக்கு நேரேயிருந்த மேன்மாடத்தில்தான் — அத்தகைய கூச்சல்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன.

சில பணிப் பெண்கள் "என்ன என்ன?—" என்று கூவிய வண்ணம் ஓடிக் கொண்டிருந்தனர். சிலர், 'தண்ணீர், தண்ணீர்' என்றும், மற்றும் சிலர் 'விசிறி, விசிறி' யென்றும் குறுக்கும் நெடுக்குமாக ஓடினர். இக்காட்சிகள், மேல் புறத்துச் சாளரங்களின் வழியே கீழே இருந்தவர்களுக்குத் தெரிந்தன.

நிசப்தமாக இருந்த ராஜசபையில் ஆரவாரமும் கூச்சலும் மிகுந்தன. சிலர் செய்வதறியாது தத்தளித்தபடியே அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தனர்.

அரசர் தம் ஆசனத்தை விட்டுப் பரபரப்புடன் எழுந்து சென்றார். அவரைத் தொடர்ந்தவாறு சில முக்கியஸ்தர்களும் விரைவுடன் ஓடினர். அங்கே—இளைய ராணியான மல்லிகா மூர்ச்சையுற்றுக் கிடந்தாள்!

(தொடரும்)

## பலே, பையன்!



சுண்ணாம்பு அடிப்பவர் :—தம்பி! சுவரெல்லாம் கிறுக்கி ஏன் வீணாக்குகிறாய்?

தம்பி :—நீதான் இந்த இடமெல்லாம் சுண்ணாம்பு அடிக்கப் போகிறாயே? அது வரைக்கும் கிறுக்கி வைக்கிறேன்!



# சமநிலைப் படுத்தும் பிரச்னை...

ஒரு பைசைகிள்மீது சமநிலையாக வீற்று சவாரி செய்வது சுலபமே. ஆனால் உங்கள் பைசைகிளின் விலையையும் அது கொடுக்கும் சேவையின் மதிப்பையும் சரிகட்டுவது அவ்வளவு சுலபமல்ல. மூலப்பொருள்களை மிகுந்த கவனத்துடன் தெரிந்தெடுத்து உபயோகித்து, தயாரிப்பு நிலையில் ஒவ்வொரு உறுப்பையும் கடுமையான பரிசோதனைக்கு உட்படுத்துவதால், ஸென்-ராலே பைசைகிள்கள் மிக நன்றாக உழைப்பது மட்டுமன்றி, செப்பனிடும் செலவும், புதுப்பிக்கும் செலவும் மிகக் குறைந்து, இதன் பயனாக, அவற்றின் விலைக்கு சரிசமான மான மதிப்புடையதாக விளங்குகின்றன.

## ராலே ராபின் ஹூட்




SRC-39TM

# பற்களைப் பரிசுத்தமாக்கும்

# மக்ளீன்ஸ்!

**இம் மூன்று கோப்பைகளை** பற்கள் என பாவனை செய்வீர்களானால் இவைகளின் வெளிப்புறம் மற்றும் உட்புறத்தைத் தவிர, ஊத்தை சேர்ந்து அபாயகரமான கிருமிகள் வசிக்கும் இடுக்குகளை சுத்தம் செய்வது மிகக் கடினம். பற்களைப் பாதுகாக்க விரும்புவோர், 'லைப்பாவிட்ஸ்'ஸினால் ஏற்படும் அபாயத்தை அறிய வேண்டியது அவசியம்.



**மக்ளீன்ஸ் எளிதில் துலக்க முடியாத பற்களின் இடுக்குகளில் முண்டிப் புகுந்து துலக்குகிறது. எனவே**

## பற்சிதைவைத் தவிர்க்க சிறந்த சாதனமாக இருப்பது மக்ளீன்ஸ் ஒன்றே

பற்களின் மேல் படர்ந்திருக்கும் 'லைப்பாவிட்ஸ்' கலந்த பாசி பார்ப்பதற்கு அசிங்கமாயிருப்பதோடன்றி அபாயகரமானதுங்கூட என்று பல் டாக்டர்கள் நிரூபிக்கின்றனர். 'லைப்பாவிட்ஸை' எளிதில் சுத்தம் செய்ய முடியாது. இவை தவறாமல் சுத்தம் செய்யப்பட வேண்டும். இல்லையேல் இவைகளின் உட்புறத்தில் தங்கும் திராவகச் சத்து பற்களை அரித்தே விடுகின்றது. இத்தகைய 'லைப்பாயிட்ஸை' அறவே அகற்ற ஒரே வழிதான் உண்டு. அதாவது இதை கரையச் செய்ய வேண்டும். 'லைப்பாயிட்ஸை' கரைக்கக் கூடிய விசேஷமான திரவம் மக்ளீன்ஸில் இருப்பதால், வாயில் நுரை கூட்டாமல் மக்ளீன்ஸ் 'லைப்பாயிட்ஸை' லகுவாக ஜாக்கிரதையுடன் துரிதமாக கரையச் செய்கின்றது. பற்களின் சிதைவைத் தவிர்க்க இது மிகவும் முக்கியம்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை தினந்தோறும் இருமுறை உபயோகியுங்கள். பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியத்துடனும் விளங்கும்.

க்ளோரோபில் சேர்ந்த வகையும் கிடைக்கும்




MTY-41 TAM

---

இலங்கை வானொலி வர்த்தக ஒலிபரப்பு நிலையம் 41-மீட்டர் பாண்டில் பிரதி திங்கட்கிழமைதோறும் இரவு 8-30 முதல் 9 மணி வரை ஒலிபரப்பப்படும். "[illegible]" என்ற நிகழ்ச்சியை அவசியம் கேளுங்கள்

# தாயன்பு

## ஸோமாஸ்

**வை**தேகி மாட்டுக் கொட்டிலைச் சுத்தம் பண்ணுவதில் முனைந்திருந்தாள். வேலைக்காரன் அவளுடன் வேலை செய்து கொண்டிருந்தான்.

மாலை மணி ஐந்துக்கு மேல் இருக்கும். அஸ்தமன சூரியனின் தங்க நிறக் கிரணங்கள் தோட்டம் முழுவதும் படிந்து பொன் மயமாக்கிக் கொண்டிருந்தது. தோட்டத்தில் பூத்துக் குலுங்கிய பூங்கொடிகளும் பசுமையான நெடிதுயர்ந்த மரங்களும் ஆதவன் ஒளியினால் தங்க நிறம் பெற்றுத் தனி எழிலுடன் விளங்கின.

மாட்டுக் கொட்டிலுக்கு அருகில் இருந்த மரத்தில் கட்டப்பட்டிருந்த வெள்ளை நிறப் பசுவும், அதனை அடுத்துத் துள்ளித் துள்ளி விளையாடிய கபில நிறக் கன்றுக் குட்டியும் கூடத் தங்கமயமாகி விட்டன. பால் கறந்து கொண்டிருந்த வைதேகியும் மாலைக் கதிரவன் ஒளியில் தன் இயற்கையான பொன் நிறத்துக்குப் புது மெருகிடப்பட்டுப் புதுப் பொலிவுடன் விளங்கினாள். ஸ்வர்ண விக்கிரகம் போல் விளங்கிய அவளது குழந்தை பக்கத்தில் விளையாடிக் கொண்டிருந்தது.

அப்பொழுது வைதேகியைக் காண வந்த ஒரு ஸ்திரீ வாசற்படியருகிலேயே நின்று அவள் வேலை செய்வதை வியப்புடன் கவனித்துக் கொண்டிருந்தாள்.

பால் கறந்து ஆனதும் வைதேகி பால் செம்பைக் கையில் எடுத்துக் கொண்டு உள்ளே போனாள். வழியில் நின்ற அந்த ஸ்திரீயைக் கண்டதும் வைதேகி மகிழ்ச்சியுடன், ''வாருங்கள், மாமி! ரொம்ப நேரமாக நீங்கள் நின்று கொண்டிருக்கிறீர்களா? கூப்பிடக் கூடாதோ! நான் உங்களைக் கவனிக்கவேயில்லை!'' என்று கூறி வரவேற்றாள்.

''பத்து நிமிஷத்துக்கு மேலே நின்று உன் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தேன், வைதேகி! நீ ரொம்பவும் பொறுமைசாலி. வீட்டு மனிதர்களையும் குழந்தைகளையும் வைத்துக் கொண்டு போராடுவதே மிகவும் கஷ்டமாயிருக்கிறது. இதெல்லாம் போதாத குறைக்கு நீ மாட்டை வேறு கட்டிக் கொண்டு போராடுகிறாய். எனக்கு என்னவோ இதெல்லாம் பிடிக்கிறதேயில்லை, அம்மா!'' என்று மிகவும் அலட்சியமாகப் பேசினாள் அந்த ஸ்திரீ.

வைதேகி பால் செம்பை உள்ளே வைத்து விட்டு வெளியே வந்து அந்தம்மாளுடன் தோட்டத்துக்குப் போய்க் குழந்தையை எடுத்துக் கொண்டு ஒரு பெஞ்சியில் அமர்ந்தாள். அந்த



அம்மாளும் அவள் பக்கத்தில் வந்து அமர்ந்து கொண்டாள்.

''நீங்கள் என்னவோ அப்படிச் சொல்லி விட்டீர்கள், மாமி! இந்தப் பசுவுக்கு இருக்கிற அறிவும், அன்பும் மனித ஜன்மங்களிடம் இருக்கிறதாக எனக்குத் தோன்றவில்லை. பசு இருக்கிறதனாலே வீட்டுக்கே ஒரு லக்ஷ்மி விலாஸம் ஏற்பட்டிருக்கிறது. குழந்தைக்கும் எங்களுக்கும் நல்ல பால் கிடைக்கிறது. டாக்டர் 'பில்' குறைந்திருக்கிறது. பசு சம்ரக்ஷணக் காரியங்களைக் கவனிக்கும் போது மனசுக்கு எவ்வளவு திருப்தியாயிருக்கிறது, தெரியுமா? பால்காரன் பண்ணுகிற அக்கிரமத்தைச் சகிக்க முடியாமல்தான் 'இவர்' இந்தப் பசு மாட்டை வாங்கினார்!''

''பசு சம்ரக்ஷணமாவது இன்னொன்று வேறு! இதெல்லாம் வீண் உபத்திர



வத்தை விலைக்கு வாங்கிக் கொள்ளுகிற காரியம்தான். இருக்கிற பிடுங்கல்கள் போதும். என் கணவருக்குத் தாமும் சிரமப்படப் பிடிக்காது. வீட்டில் இருப்பவர்களும் அநாவசியமாகச் சிரமப்படுவது பிடிக்காது!'' என்று கூறி அந்த மாமி அலுத்துக் கொண்டாள்.

''அப்படியெல்லாம் பார்த்தால் ஒன்றுமே முடியாது, மாமி! யாருக்காகக் கஷ்டப்படுகிறோம்! நம்முடைய குடும்பத்தின் நன்மைக்காக நாம் பாடுபடுகிறோம். எனக்கு என்னவோ இந்தக் காரியங்களெல்லாம் செய்வதில் கொஞ்சங்கூட அலுப்புத் தோன்றுவதே இல்லை!'' என்றாள் வைதேகி.

''நீ ஒரு தெய்வப் பிறவிதானம்மா! இந்த நாளிலே யார் இந்தக் காரியங்களெல்லாம் செய்கிறார்கள்! சரி, எனக்கு நாழிகையாகிறது. நான் போய் வருகிறேன்'' என்று சொல்லி விட்டு அந்த அம்மாள் போய் விட்டாள்.

வைதேகி வேலைகளையெல்லாம் முடித்து விட்டுக் குழந்தையை எடுத்துக்கொண்டு கூடத்துப் பக்கம் வந்து உட்கார்ந்தாள். மாட்டுக் கொட்டிலைச் சுத்தம் செய்து, பால் கறந்து, மாட்டுக்குத் தீனி வைத்து எல்லாக் காரியங்களையும் ஒழுங்காக முடித்து விட்டதில் திருப்தி ஏற்பட்டிருந்தது. நிம்மதியாக உட்கார்ந்ததும் அவள் மனத்தில் அந்த அம்மாள் சொல்லி விட்டுப் போனதெல்லாம் நினைவுக்கு வந்து விட்டது.

முன்பெல்லாம் வைதேகியும் அந்த மாதிரி மனப் போக்கைக் கொண்டவளாகத்தான் இருந்தாள். பசு மாட்டினிடம் அவளுக்கு இத்தனை அன்பு ஏற்பட்டதற்கு அவளுடைய குடும்பத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சிதான் காரணமாக அமைந்தது.

மூன்று வருஷங்களுக்கு முன்பு வைதேகி கர்ப்பமாயிருந்தாள். வாழ்க்கையில் எந்த முதல் அநுபவமும் இன்பம் பயப்பதாகத்தானே இருக்கும்? தன்னுள் வளர்ந்து வரும் சிசுவை மானசீகமாக உருவகப்படுத்திப் பார்த்து, வைதேகி அந்த இன்ப அநுபவத்தில் பூரித்துப் போனாள். சீமந்தம், வளைகாப்பு முதலியவைகளெல்லாம் முடிந்து வைதேகியை அவள் பெற்றோர்கள் ஊருக்கு அழைத்துப் போனார்கள்.

உரிய காலத்தில் வைதேகி ஒரு அழகிய ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அவள் ரொம்பவும் பலவீனமாக இருந்ததால், அவள் பெற்றுப் பிழைத்ததே புனர்ஜன்மம் அடைந்தது போலாகி விட்டது.

வைதேகியின் குழந்தையும் ரொம்பப் பலவீனமாகத்தான் இருந்தது. கடைசியில் அது பிறந்த ஒரு வாரத்துக்கெல்லாம் இறந்து விட்டது.

குழந்தை இறந்து போனதற்காக வைதேகி அடைந்த துக்கம் தாங்க முடியாததாயிருந்தது. அவள் தாயாரும் தகப்பனாரும் எத்தனையோ விதத்தில் சமாதானம் சொன்னார்கள். அவள் கணவன் கண்ணனும் சில காலம் அவளைப் பிறந்தகத்திலேயே விட்டு வைத்திருந்தான். பிறந்த வீட்டில் எத்தனையோ சௌகரியமாக இருந்தும்கூட அவள் உடம்பு தேற வில்லை. இரண்டு மாதங்களுக்கெல்லாம் வைதேகி பெற்றோரிடம் பிடிவாதமாகச் சண்டைபிடித்துச் சென்னைக்கு வந்து விட்டாள்.

# உங்கள் அழகை அதிகரிக்கிறது
# பாதுகாக்கவும் செய்கிறது!



அற்புத நறுமணமூட்டப்பட்ட
சார்மிஸ் ஸ்னோ உங்கள் சரு
மத்தை அழகுறச் செய்கிறது.
பாதுகாக்கிறது. எல்லாபருவ
காலங்களிலும் சருமத்தை
மிருதுவாகவும், வெல்வெட்
போல வழவழப்பாகவும்
வைக்கிறது. பவுடருக்கு
ஆதாரமானது. எண்ணெப
ட்சையில்லாதது. சார்மிஸ்
ஸ்னோ சொற சொறப்பும்,
வரிகளும், கோடுகளும்,
புண்களும் ஏற்படாமல்
சிறந்த முறையில் தடுக்
கிறது. பூச்சிக்கடிகள், வெடிப்பு
களினின்றும் பாதுகாக்கிறது.




ஒரு கால்கேட்
உயர்தர சரக்கு

# சார்மிஸ் ஸ்னோ

CSG/3

**சார்மிஸ் பலகாரிய க்ரீமையும் டால்கம் பவுடரையும் பரீட்சித்திருக்கிறீர்களா?**

# இப்போது இந்தியாவில் உங்களுக்கு கிடைக்கிறத

# பாமாலிவ்

## டால்கம் டீ-லக்ஸ்



நீங்கள் எதிர்பார்த்துக்
காத்திருந்த டால்கம் பவுடர்!
உண்மையிலேயே நேர்த்தியான
டால்கின் சகலகுணங்களுடன், ஒரு
புதியரம்மிய வாசனையும்சேர்ந்தது!
வெறியூட்டும் 17 ஸெண்டுகளின்
அற்புதக்கலவைசேர்ந்த பாமாலிவ்
டால்கம் டீ-லக்ஸின் நறுமணம்
உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம்
அடையச் செய்யும் ... மணிக்
கணக்காக உங்களுக்குக் குளுமை
யும் புத்துணர்ச்சியும் அளிக்கும்.



அள்ளையில் சுத்தமும்
சௌகர்யமும்



குழந்தைக்கு இதம்
அளிக்க அதைத்
தாராளமாகப் பூசுங்கள்



எரிச்சலைத்தடுக்க
மேலெங்கும் அதை
உபயோகியுங்கள்



சோர்ந்த பாதங்களுக்கு
இதமும் புத்துணர்ச்
சியும் அளிக்க





# பாமாலிவ்

## டால்கம் டீ—லக்ஸ்

வைதேகியின் மனம் இறந்து போன குழந்தையை நினைத்துச் சதா ஏங்கியது.

"வைதேகி! நீ என்ன சுத்த அசடாயிருக்கிறாயே! உனக்கென்ன அப்படி வயதாகி விட்டது? இருபது ஆகிறது. இனிமேல் குழந்தைகளே உனக்குப் பிறக்காதா? ஏன் இப்படி அதையே நினைத்து, நினைத்து மறுகிப் போகிறாய்?" என்று அவள் மாமியார் அவளை அன்போடு கடிந்து கொண்டாள்.



சென்னை புரசைவாக்கம் ஸ்ரீ சினிவாச பக்த சபையின் ஆதரவில் 18-7-56-ல் சித்தூர் ராமாயண ரத்னாகர ஸ்ரீ ஸ்ரீனிவாசராகவாச்சாரியாரால் ஆரம்பிக்கப்பட்ட ராமாயண கதா காலக்ஷேபம் பத்தொன்பது நாட்கள் வரையில் நடந்து, பட்டாபிஷேகத்துடன் முடிவுற்றது. மேற்படி கதாகாலக்ஷேபத்தை சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கட்ராம ஐயர் துவக்கி வைத்தார். தினந்தோறும் நூற்றுக்கணக்கான பக்தர்கள் விஜயம் செய்தனர்.

ஆனால் வைதேகியின் மனம் மட்டும் சமாதான மடையவில்லை. அவள் மனவேதனைக்கு ஏற்றாற்போல, அவள் பிறந்தகத்திலிருந்து புக்ககத்துக்கு வந்த சில நாட்களுக்கெல்லாம் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

வைதேகி ஊரிலிருந்து வந்த மறுநாளே அவள் கணவன் அவளுக்காக ஒரு பால்காரனை ஏற்பாடு செய்து, தினம் காலையிலும் மாலையிலும் வீட்டு வாசலில் கறந்து விட்டுப் போகுமாறு சொல்லியிருந்தான். பால்காரன் அதிகாலையில் வந்து விட்டுப் போய் விடுவதால், தேவகி பால்காரனையோ பசு மாட்டையோ பார்த்ததில்லை. மாலையிலும் அவள் மாமியார் பால்காரன் வந்ததும் பாலைத் தானே வாங்கிக் கொண்டு வந்தாள். இரண்டு மூன்று நாட்கள் இப்படிச் சென்றன.

அன்று மாமியார் ஏதோ காரியமாக இருக்கவே, வைதேகியைப் பால் வாங்க வாசலுக்கு அனுப்பி வைத்தாள். பால் செம்பை எடுத்துக் கொண்டு வாசல் திண்ணையில் அமர்ந்தாள் வைதேகி.

பசுமாடு மிகவும் திடமாய்த்தான் இருந்தது. ஆனால் இது என்ன, கன்றுக்குட்டி வெறுந் தோலாக இளைத்திருக்கிறதே! ஆ! அது உயிருள்ள கன்றுக்குட்டியா? வைக்கோலை அடைத்து வைத்த 'மாடல் கன்றுக் குட்டி' அல்லவா அது! பாவம், பசு அந்தப் பொய்க் கன்றுக் குட்டியை உயிருள்ள கன்றுக் குட்டி என்று நினைத்துக் கொண்டு எத்தனை அன்போடு நக்கிக் கொடுக்கிறது!

வைதேகிக்கு உடனே இறந்து போன தன் குழந்தையின் நினைவு வந்து விட்டது. தனக்குப் பிறக்கப் போகும் குழந்தையைப் பற்றி அவள் என்னவெல்லாம் கனவு கண்டாள்! தன் செல்வத்தை மார்போடு அணைத்துப் பாலூட்ட அவளுக்கு எத்தகைய ஆர்வம் பொங்கி எழுந்தது!

பொய்க் கன்றுக் குட்டி கீழே சாய்ந்து சற்றுத் தூரம் விலகி விழுந்து விட்டது. பசுமாடு "அம்மா, அம்மா!" என்று கத்தி இப்படியும் அப்படியும் ஆடியது. பால் கறந்து கொண்டிருந்த பால்காரன் கோபத்தோடு எழுந்து தோளில் போட்டுக் கொண்டிருந்த கயிற்றை எடுத்துச் சுழற்றிப் பசுவை இரண்டுதரம் வாங்கினான். பிறகு பொய்க் கன்றுக் குட்டியை எடுத்துக் கொண்டு வந்து மாட்டினிடம் வைத்து விட்டு மீண்டும் பால் கறக்க ஆரம்பித்தான்.

இதைக் கவனமாகப் பார்த்துக்கொண்டிருந்த வைதேகிக்கு மனவேதனை தாங்க முடியாத அளவுக்கு அதிகமாகிவிட்டது. இதயத்திலிருந்து துக்கம் பொங்கியது. அவள் ஆஸ்பத்திரியில் இருந்தபோது, பொங்கிப் பெருகும் தாயன்போடு குழந்தைக்குப் பால் ஊட்டுவாள். குழந்தை இறந்துபோனது வைதேகிக்குத் தெரியாது. அப்பொழுது அவள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். விழித்துக் கொண்டு அவள் பார்த்த போது பக்கத்தில் குழந்தையைக் காணவில்லை. வைதேகி திடுக்கிட்டாள். தாயின் மூலம் தன் குழந்தை இறந்துவிட்ட செய்தியை அறிந்ததும், அவள்



**திருச்சி வக்கீல் ஸ்ரீ வி. பி. கணேச அய்யர் அவர்கள் குமாரி சௌ. காவேரிக்கும், புதுதில்லி ரயில்வே போர்டு ஸ்ரீ டி. எஸ். நடராஜன் அவர்களுக்கும் திருச்சியில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!**

அடைந்த துக்கம் கொஞ்சமல்ல; துக்கம் தாளாமல் அவள் இதயமே வெடித்து விடும் போல் இருந்தது. பெற்றெடுத்த குழந்தைக்குப் பாலூட்டும் ஆர்வத்தோடு அதை அணைக்கப் போனவளுக்கு இந்தச் செய்தி தூக்கி வாரிப்போட்டது; விம்மி விம்மித் தணிந்த அவள் மார்பில் பாறாங்கல்லை வைத்தமாதிரி யிருந்தது. அதிலிருந்தே வைதேகியின் உடல் நிலை சரியாயில்லை. பிறந்தகம் போய் வந்ததில் அவள் உடம்பு சிறிது தேறியிருந்தது. மனமும் கொஞ்சம் மாறியிருந்தது.

இப்பொழுது கன்றை இழந்த பசுவையும், பொய்க் கன்றைத் தன் குழந்தையாக எண்ணி ஏமாந்து பாலைச் சுரக்கும் அதன் அறியாமையையும் எண்ணிப் பார்த்தபோது வைதேகியின் மனம் துக்கம் தாளாமல் துடித்தது. அடிவயிற்றிலிருந்து பந்து மாதிரி ஏதோ ஒன்று கிளம்பி அவள் நெஞ்சை அடைத்தது. தன் நினைவு தப்பி, வைதேகி 'தடார்' என்று திண்ணையிலிருந்து கீழே விழுந்து விட்டாள். நல்ல வேளையாக அவள் கணவன் கண்ணன் ஆபீஸிலிருந்து அப்போது வந்து விட்டபடியால், ஓடிவந்து அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு உள்ளே கொண்டுபோய்ச் சேர்த்தான். அதன் பிறகு வைதேகியின் உடம்பு தேறுவதற்கு ஒரு மாசமாயிற்று.

சின்னஞ் சிறு வயதில், தாய்மையின் புதிய அநுபவத்தில் அவள் மனம் ஒரே ஆனந்தமாகத் துள்ளியது. பட்டணங்களில் நடக்கும் இந்த அக்கிரமங்களையெல்லாம் அவள் சிறிதும் அறியாதவள்; கிராம வாசத்தில் அவள் மிகவும் சௌகரியமா யிருந்தவள்; அவள் பிறந்தகத்தில் நாலைந்து பசுமாடுகள் இருந்தன. பசுக்களையும் அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த மனிதர்களைப் போலவே கருதி மிகவும் அன்பாக அவள் தகப்பனார் பராமரித்து வந்தார். மாடுகளைப் போலவே கன்றுக் குட்டிகளும் 'கொழு கொழு' வென்று வளர்ந்து ஆனந்தமாகத் துள்ளித் திரிந்து விளையாடும்.

பால் வியாபாரம் என்றால் மாடுகளை இவ்வாறு கொடுமைப்படுத்தி, ஈரமற்ற நெஞ்சோடு இறந்த கன்றுக் குட்டியை மாட்டின் முன் நிறுத்தி அந்த வாய் இல்லா ஜந்துவை ஏமாற்றிப் பால் கறக்கும் வித்தைதான் என்று அவளுக்குத் தெரியாது. இந்தக் கொடுமையை நேருக்கு நேராகப் பார்த்ததும் அவளால் தாங்க முடியவில்லை.

இந்தத் தடவை வைதேகியின் தேக ஆரோக்கியத்தில் அவள் கணவன் ரொம்பவும் அக்கறையா யிருந்தான். இந்த நிலையில்தான் அவளுக்கு இரண்டாவது குழந்தை பிறந்தது. வைதேகியின் பூவினும் மென்மையான உள்ளம் அவள் கணவன் கண்ணனுக்கு நன்கு தெரிந்திருந்தது. ஆகவே, ஒரு அழகான பசுவை வாங்கினான். பசுவையும் கன்றையும் வைதேகி அளவு கடந்த அன்புடன் பராமரிக்க ஆரம்பித்தாள். பசுவுக்கு 'லக்ஷ்மி' என்று பெயரிட்டுச் சதா அதன் வளர்ச்சியிலேயே ஈடுபட்டாள். இந்த இணையற்ற மன நிறைவின் காரணமாகத்தானோ என்னவோ, வைதேகியின் உடம்பு மிகவும் ஆரோக்கியமும் இடமுங் கொண்டு மினுமினுப்பான காந்தியுடன் விளங்கியது.

வீட்டுப் பின்புறத்திலிருந்து லக்ஷ்மி 'அம்மா' என்று ஆதுரத்தோடு அழைத்தது. அந்தக் குரலைக் கேட்ட வைதேகி, "அடாடா! லக்ஷ்மிக்குப் புல்லும் தண்ணீரும் வைக்க வில்லையே!" என்று கூறிக் கொண்டே எழுந்து, 'பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து' லக்ஷ்மியை நோக்கி ஓடினாள். அவள் மனத்தில் ஓட்டமாகச் சென்று கொண்டிருந்த நினைவுச் சங்கிலி அறுந்தது. பசுவுக்குப் புல்லெடுத்துப் போட்டு அதன் பட்டுப் போன்ற தேகத்தைத் தடவிக் கொடுத்தாள் வைதேகி. 'குழந்தையின்பத்தைப்பெறக்கொடுத்து வைக்காத எதிர்த்த வீட்டு மாமிக்குப் பசுவையும் கன்றையும் பராமரிப்பது பெரிய பாரமாகத்தான் தோன்றும்' என்று அவள் உள்ளம் நினைத்தது. அதை ஆமோதிப்பது போல், கட்டவிழ்த்துக் கொண்டு துள்ளி ஓடி வந்த கன்றுக் குட்டி வைதேகியை நெருங்கி அவள் மீது உரசிக் கொண்டு நின்றது.

# சொந்த உடமையின் பெருமை

பொதுவாக சொந்த உடமை என்றால் மனம் பெருமை அடைகிறது. அதிலும் **ஆர்ம்ஸ்ட்ராங்** சைக்கிள் சொந்தமாக இருந்துவிட்டால் அந்தப் பெருமை பன்மடங்கு அதிகமாகிறது. அது ஒரு தோழனைப்போல் மகிழ்ச்சி அளிக்கிறது. அதில் வேகமாகச் செல்லும்போது ஆனந்தம் ஏற்படுகிறது. குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்துக்குச் செல்லுவதே ஆனந்தம்தானே!



# ARMSTRONG

THE BETTER BICYCLE.




DISTRIBUTORS:-

**ROYAL CYCLE & MOTOR CO.,**

13/14. BROADWAY, MADRAS-1.

BRANCH.

**THE PIONEER CYCLE HOUSE,**

47/49. WEST TOWER STREET, MADURAI.






அழகான, உறுதியான
கட்டிட வேலைகளுக்கு

**சங்கர் பிராண்ட்**
**போர்ட்லண்ட் ஸிமெண்ட்**

திடத்திலும், தரத்திலும் தேர்ந்தது

தென்னாட்டின் ஒவ்வொரு முக்கிய நகரத்திலும்
I. C. ஸ்டாக்கிஸ்டுகள் மூலம் வினியோகிக்கப்படுகிறது

**இந்தியா ஸிமெண்ட்ஸ் லிட்... மதராஸ்-1**

# உள்ளத் தூய்மை

மகாகவி பாரதியார்

வேதபுரத்தில் குள்ளச்சாமி என்றொரு பரதேசி யிருக்கிறார். அவருக்கு வயது ஐம்பதோ, அறுபதோ, எழுபதோ, எண்பதோ யாருக்கும் தெரியாது. அவர் உயரம் நாலரை அடி யிருக்கும். கருநிறம். குண்டு சட்டியைப் போல் முகம். உடம்பெல்லாம் வயிரக் கட்டை போலே நல்ல உறுதியான பேர்வழி.

அவருக்கு வியாதி என்பதே கிடையாது. சென்ற பத்து வருஷங்களில் ஒரே தடவை அவர்மேலே கொஞ்சம் சொறிசிரங்கு வந்தது. பத்துநாளிருந்து நீங்கி விட்டது. அந்த மனுஷ்யன் ஜடபாதருடைய நிலைமையிலே இருப்பதாகச் சொல்லலாம். பேசினால் பயித்தியக்காரன் பேசுவது போலிருக்கும். இழுத்திழுத்து, திக்கித் திக்கி, முன் பின் சம்பந்த மில்லாமல் பேசுவார். தெருவிலே படுத்துக்கிடப்பார். பசித்தபோது எங்கேனும் போய்ப் பிச்சை வாங்கிச் சாப்பிடுவார். மண்ணிலே புரளுவார். நாய்களுடன் சண்டை போடுவார்.

வீதியிலே பெண் பிள்ளைகளுக்கெல்லாம் அவரைக் கண்டால் இரக்க முண்டாகும். திடீரென்று ஒரு வீட்டுக்குள் நுழைந்து, அந்த வீட்டிலிருக்கும் குழந்தைகள் நெற்றியிலே திருநீற்றைப் பூசிவிட்டு ஓடிப்போவார். யாராவது திட்டினாலும், அடித்தாலும் பொறுத்துக் கொண்டு உடனே அவ்விடத்தை விட்டு ஓடிப் போய் விடுவார்.

ஸாமானிய ஜனங்கள் அவருக்கு நூறு வயதுக்கு மேலே ஆகிவிட்டதென்றும், நெடுங்காலமாக, இப்போதிருப்பது போலவே, நாற்பது, ஐம்பது வயது போலே தான் இருக்கிறாரென்றும் சொல்லுகிறார்கள். ஆனால் இந்த வார்த்தை எவ்வளவு தூரம் நிச்சயமென்பதை நிர்ணயிக்க இடமில்லை.

அவர் கையால் விபூதி வாங்கிப் பூசிக் கொண்டால் நோய் தீர்ந்து விடுமென்ற நம்பிக்கையும் பலர் கொண்டிருக்கிறார்கள்.

மேற்படி குள்ளச்சாமியார் ஒரு நாள் நாம் வீதியில் நடந்து வரும் போது, முதுகின்மேலே கிழிந்த பழங்கந்தைகளை யெல்லாம் ஒரு பெரிய அழுக்கு மூட்டையாகக் கட்டிச் சுமந்து கொண்டு வந்தார். இந்தச் சாமியாரைக் கண்டால் நான் கும்பிடுவது வழக்கம். அப்படியே கும்பிட்டேன். ஈயென்று பல்லைக் காட்டிப் பேதைச் சிரிப்புச் சிரித்தார். கண்ணைப் பார்த்தால் அதில் குறும்பு கூத்தாடுகிறது.

"ஏ சாமி, உனக்கென்ன பயித்தியமா? கந்தைகளைக் கட்டி ஏன் முதுகிலே சுமக்கிறாய்?" என்று]கேட்டேன்.

"நீ நெஞ்சுக்குள்ளே சுமக்கிறாய், நான் முதுகின்மேலே சுமக்கிறேன்" என்று சொல்லி ஓடிப்போய் விட்டார். உடனே நான் பொருள் தெரிந்து கொண்டேன். அஞ்ஞானப் பழங்குப்பைகளையும், பழங் கவலைகளையும், பழந் துன்பங்களையும், பழஞ் சிறுமைகளையும் மனத்தில் வீணாய்ச் சுமந்து திரியும் ஸாமான்ய மனிதனுடைய அறிவீனத்தை விளக்கும் பொருட்டு மேற்படி சாமியார் இந்த திருஷ்டாந்தத்தைச் சொன்னாரென்று தெரிந்துகொண்டேன்.

பின்னொரு நாள் அவரிடம் பரிகாசமாக நான் "சாமி! இப்படிப் பிச்சை வாங்கித் தண்டச்சோறு தின்றுகொண்டு ஜீவனம் பண்ணுகிறாயே, ஏதேனும் தொழில் செய்து பிழைக்கக் கூடாதா?" என்று கேட்டேன்.

அந்தப் பரதேசி, "தம்பி, நானும் தொழில் செய்துதான் பிழைக்கிறேன். எனக்கு வண்ணான் வேலை. ஐம்புலன்களாகிய கழுதைகளை மேய்க்கிறேன். அந்தக் கரணமான துணி மூட்டைகளை வெளுக்கிறேன்" என்றார்.

ஆம், பரிசுத்தப் படுத்துகிறவனே ஆசார்யன். அவனுடைய சொல்லை மற்றவர் ஆசரிக்க வேண்டும். மேலே சாமியாருடைய புற நடைகள் குடும்பம் நடத்தும் கிருஹஸ்தர்களுக்குத் தகுதியல்ல. ஆனால் அவருடைய உள்ள நடையை உலகத்



தார் பின்பற்ற வேண்டும். ஐம்புலன்களாகிய கழுதைகளை மீறிச் செல்லாதபடி கட்டுப்படுத்தி ஆள வேண்டும். உள்ளத்தை மாசில்லாதபடி சுத்தமாகச் செய்து கொள்ள வேண்டும்.

அழுக்குத் தீர்க்கும் தொழில் செய்வோர் நமது தேசத்தில் மாகாணத்துக்கு லக்ஷம் பேர் வேண்டும். ஹிந்துக்கள் தற்காலத்தில் குப்பைக்குள் முழுகிப் போய்க் கிடக்கிறார்கள். வீட்டையும், தெருவையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. ஜலதாரைகளை ஒழுங்குப் படுத்தவில்லை. கிணறுகளையும், குளங்களையும் சுனைகளையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. கோயிற் குளங்களில் ஜலம் புழுத்து நெளிகிறது. நாற்றம் குடலைப் பிடுங்குகிறது.

மனுஷ்யாபிவிருத்தி யாவது யாது?

புழுதியை நீக்கித் தரையைச் சுத்தமாக்குதல். அழுக்குப் போகத் துணியையும், நாற்றமில்லாதபடி குளத்தையும், பொதுவாக எல்லா விஷயங்களையும் சுத்தமாக்கி வைத்துக் கொள்ளுதல்.

நான் மேற்படி சாமியாரிடம், "சாமியாரே! ஞான நெறியிலே செல்ல விரும்புவோன் முக்கியமாக எதை ஆரம்பத் தொழிலாகக் கொள்ள வேண்டும்?" என்று கேட்டேன்.

குள்ளச்சாமி சொல்லுகிறார் :—

"முதலாவது, நாக்கை வெளுக்க வேண்டும். பொய் சொல்லக் கூடாது. புறஞ் சொல்லக் கூடாது. முகஸ்துதி கூடாது. தற்புகழ்ச்சி கூடாது. வருந்தச் சொல்லலாகாது. பயந்து பேசக்கூடாது. இதுதான் வண்ணான் தொழில் ஆரம்பம். பிறகு அந்தக்கரணத்தை வெளுத்தல் சுலபம். சில இடங்களில் பொய் சொல்லித் தீரும்படியாக இருந்தால், அப்போது மௌனத்தைக் கொள்ள வேண்டும். மௌனம் ஸர்வார்த்த ஸாதகம். அதை விட்டுப் பேசும்படி நேர்ந்தால் உண்மையே சொல்ல வேண்டும். உண்மை விரதம் தவறக் கூடாது. தவற வேண்டிய அவசியமில்லை; உண்மை கூறினால் தீங்கு நேரிடுமென்று நினைப்போர் தெய்வம் உண்மை யென்பதை அறிய மாட்டார்கள். தெய்வம் உண்மை. அதன் இஷ்டப்படி உலகம் நடக்கிறது. ஆதலால் பயப்படுகிறவன் மூட சிகாமணி. அந்தக்கரணத்தை வெளுத்தலாவது அதிலுள்ள பயத்தை நீக்குதல். அந்தக்கரணத்தை சுத்தி செய்துவிட்டால் விடுதலை யுண்டாகும்."

பின்னுமொரு சமயம் குள்ளச்சாமி என்னிடம் வந்து, "தம்பி, நீ இலக்கணக்காரனாச்சுதே! 'வண்ணான்' என்ற வார்த்தையை உடைத்துப் பொருள் சொல்லுவாயா?" என்று கேட்டார்.

நான் நகைத்து :—"சாமி. உடைக்கிற இலக்கணம் எனக்குத் தெரியாது" என்று சொன்னேன்.

அப்போது குள்ளச்சாமி "வண்—ஆன்: வண்ணான். ஆன் என்பது ரிஷபம். வள்ளலாகிய ரிஷபம் நந்திகேசுரர். அவருடைய தொழில் சுத்தரான மூர்த்தியாகிய சிவனைச் சுமந்து கொண்டிருத்தல். தமிழ் நாட்டு ஞானாசாரியர்களுக்கு ஆதிமூர்த்தியும் வள்ளலுமாகி நிற்கும் இந்த நந்திபகவானுடைய தொழிலாகிய ஆசாரியத் தொழிலையே நான் வண்ணான் தொழிலென்று சொல்லுகிறேன். எனக்கு வண்ணான் தொழில்" என்றார்.

## சென்னையில் பாரதி விழா

பாரதியார் சங்கத்தின் ஆதரவில் சென்னை தியாகராயநகர் வாணி மஹாலில் செப்டம்பர் 11, 12 தேதிகளில் மாலை 6-மணிக்கு **நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம் பிள்ளை** அவர்கள் தலைமையில் நடைபெறுகிறது.

சென்னை கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா, ராஜாஜி, திருவாளர்கள் தெ. பொ. மீனாட்சிசுந்தரம், அ. சீனிவாச ராகவன் ஆகியவர்கள் முதல் நாள் விழாவிலும், கி. வா. ஜகந்நாதன், ஏ. ஜி. வேங்கடாச்சாரியார், ஆர். மகாதேவன், சுராஜ், ம. பொ. சி., மராமத்து இலாகா மந்திரி கனம் சேதுபதி, ஸ்ரீமதி ஏ. ஆர். இந்திரா எம். ஏ., ஸ்ரீமதி எஸ். விஜயலக்ஷ்மி ஆகியோர்கள் இரண்டாவது நாள் விழாவிலும் பங்கெடுத்துக் கொண்டு பாரதி விழாவைச் சிறப்பிக்கிறார்கள்.

இரண்டு நாள் விழாவிலும் முடிவில் பிரபல சங்கீத, நாட்டியக் கலைஞர்கள் இசை விருந்தும், நாட்டிய விருந்தும் அளிக்கிறார்கள்.

**பாரதி அன்பர்கள் அனைவரும் வருக!**

டி. பி. யைத் தடுக்கும் ஆராய்ச்சியை நடத்து முன் பொது மக்களிடையே உலாவும் இன்னொரு எண்ணத்துக்கு விடை கூற வேண்டும். டி. பி. நோயென்றால், சுவாசக் கருவி சம்பந்தப்பட்டது என்று சிலர் மதிக்கின்றனர். இது தவறான எண்ணம். டி. பி. பூச்சி சாதாரணமாகச் சுவாசக் கருவியைத் தான் பிடித்துக் கொள்ளும் என்பது இடையாது. டி. பி. பூச்சி சுவாசக் கருவியை, எலும்பை, கோளங்களை (Glands), தோலை எல்லாம் தாக்கும். இதன் தாக்குதலுக்கு உகந்தவாறு நோயானது, லங்ஸ் டி. பி. அதாவது பல்மனரி ட்யூபர்குலாஸிஸ் (Pulmonary Tuberculosis), டி. பி. க்ளாண்ட்ஸ் (T. B. Glands), தோல் டி. பி. (Skin T. B.) எலும்பு டி. பி. (Bone T. B.) என்றெல்லாம் பெயர் சூட்டப்படுகின்றது.

எல்லாவித டி. பி. க்களும் ஜீவனுக்கு யமன்தான். மானிட சரீரத்தை கோரமான மாறுதலுக்கு உள்ளாக்கும். எலும்பு டி. பி. இளைக்கச் செய்து, வளைக்கச் செய்து, முறியச் செய்து, படாதபாடு படுத்தும். தோல் டி. பி. யானால், அதன் புண் எத்தனை மாதங்களானாலும் ஆறாது. டி. பி. கிளாண்டுகள் என்பவை இன்னும் கோரமானவை. வெகு சீக்கிரத்தில் விபத்தை விளைவிக்கும். எந்த அம்ச டி. பி. யும் மற்ற அம்ச டி. பி. யாக மாறிவிடுவது உண்டு. சுவாசப் பையைத் தாக்கினால் மிக்க மோசமான நிலை சம்பவிக்கும். மற்ற டி. பி. களைக் காட்டிலும், டி. பி. 'க்ளாண்ட்'ஸை, 'லங்ஸ்' டி. பி. க்கு அடுத்தபடியாகக் கூறலாம். டி. பி. க்ளாண்ட்ஸ் அனேகமாக லங்ஸ் டி. பி. யில் சேர்ந்து விடுகிறது. இந்த டி. பி. கிளாண்டினால் மரணம் ஏற்பட்டு விடுவதும் உண்டு.

நேயர்களுக்கு ஒரு சந்தேகம் ஏற்படலாம். 'டி. பி. களில் கொடியதான டி. பி. க்ளாண்ட்ஸ் வந்தால் அதை யோக சிகிச்சை குணப்படுத்துமா? இதற்கும் மருத்துவமே கிடையாதா?' என்று வினவலாம்.

மற்றவித டி. பி. க்களை, நுரையீரல் டி. பி. யைக் கவனித்த பிறகு, ஆராய்ச்சி செய்யலாம்.

டி. பி. க்ளாண்ட்சுக்கு மருந்து கிடையாது. ரணசிகிச்சை ஏற்பதால், நூற்றுக்குத் தொண்ணூற்றென்பது நோயாளிகள் மரணமடைகின்றனர். இந்த ரணசிகிச்சை, டி. பி. யை வேறு அம்சங்களுக்கு மாற்றாது என்றும் கூற இயலாது. இந்த டி. பி. க்ளாண்ட்ஸ் சாதா




## 4. டி. பி. யை வென்ற குழந்தை!

ரணமாகக் குழந்தைகளை அதிகம் தாக்குகிறது. டி. பி. தாக்கக்கூடிய கிளாண்ட்ஸ், உடலில் பல இடங்களில் இருந்தாலும், கழுத்தைச் சுற்றி உள்ளவைதான் பெரும்பாலும், டி. பி. விஷம் ஏற்றுவதையுறும்.

இத்தகைய டி. பி. கிளாண்ட்ஸ், ஒரு நாள் ஒரு குழந்தையைப் பற்றிக் கொண்டது. ஏன்? இந்த ஜென்ம செயலாலா?—அல்ல! முன் ஜென்ம காரணத்தால் இருக்க வேண்டும். குழந்தை பிறக்கும்பொழுது, பிறந்த பிறகு பலஹீன, கோர உருவமாக இருந்திருந்தால், ஏன் டி. பி. தாக்காது என்று வினவலாம்.

குழந்தை எத்தகையதாக இருந்தது? திடகாத்திரத்திலோ, அழகிலோ குறைவாக இருந்ததா? குழந்தையின் உருவப் படம் கொண்ட முதல் சித்திரத்தைக் கவனியுங்கள்! அக் குழந்தை ஆரோக்கியத்துடன் திகழ்வதைக் காணலாம்.

இந்த உருவம்தான் குழந்தை சாரதா! இந்தப் படம் முதல் வருஷ முடிவு கொண்டாட்டத்தன்று எடுக்கப் பட்டது. புகைப்படம் பிடித்த மறுநாள் இதற்கு ஜுரம் கண்டது. ஜுரம் வலுத்தது. இது டைபாய்டு (Typhoid) என்று நிச்சயிக்கப் பட்டது. இருபத்தொரு நாட்களுக்கு அடித்த ஜுரம் குழந்தையை மரண வாயிலில் கொண்டு வந்து விட்டது. குழந்தைபிழைத்தது. ஆனால் இதன் ஆரோக்கியமும், இடமும் அழகும் திரும்பவே இல்லை. நாளுக்கு நாள் காரணம் இல்லாமல் இளைத்துப் போய், எலும்பும் தோலுமாக கோரக் காட்சி அடைந்தது.

குழந்தைக்கு இரண்டு வயதாயிற்று. மூன்று வயதில் இதன் கழுத்திலும், பிடரியிலும் கவனிக்கப் படாது தோன்றிய உருண்டைகள் பெரிதாகின. மிகப் பெரிதாகி, சரிவுடன் தொங்கும் போலாயின.

குழந்தை உற்சாகத்தை இழந்து, பசியின்றிப் போயிற்று. உணவைப் பகைத்தது. எந்த ருசிகரமான உணவும் இதை வசீகரிக்கவில்லை. விளையாட்டே இல்லை. எலும்புகளை எண்ணக் கூடிய நிலை ஏற்பட்டது. முடிவில் மாலை வேளைகளில் ஜுரம் குறைவாக வரத் தொடங்கியது. வைத்திய நிபுணர்களைக் கேட்டதில், 'நல்லுணவும், விளையாட்டும் கொடுப்பதுதான் சிகிச்சை, கட்டிகள்மேல் கை வைக்காதீர். விபத்து உண்டாகும்' என்றனர். காந்த கிரணங்கள், ஒளிகள் வைத்தும் நிலைமை மாறவில்லை.

இச்சமயத்தில்தான் யோக சிகிச்சை உதவ முன் வந்தது. இதில் நம்பிக்கை அதிகமாக இல்லை. ஆனால் வேறு சிகிச்சை — வழியும் இல்லை. குழந்தைக்கு எப்படிக் கொடுப்பது? இந்த இடையூறுகளெல்லாம் தாண்டப் பட்டன. சிகிச்சை 1944-ம் வருஷத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

நாற்பத்தைந்து நாட்களுக்கு எந்த விதமான நம்பிக்கைக் குறியும் ஏற்படவில்லை. அதன் பிறகு ஜுரம் விட்டு வர ஆரம்பித்தது. மனத்துக்கு வியப்பும், சந்தோஷமும் உண்டாயின. ஜுரம் முற்றிலும் நின்றது. உணவைச் சாதுர்யமாகக் குழந்தைக்கு அளிக்க, எலும்புக்கூடு மறைய ஆரம்பித்தது. சிகிச்சையும் அந்தக் குழந்தைக்குத் தொடர்ந்து அளிக்கப்பட்டது.

கழுத்து, பிடரிக் கட்டிகள் சிறுத்தன. ஒரு வருஷத்தில் சில இடங்களில் முற்றிலும் மறைந்தன. பிறகு தானாகவே வெடித்து, ஆறின. குழந்தைக்கு ஆறு வயதுக்குள் டி. பி. கிளாண்டு நோய் முற்றிலும் ஒழிந்து விட்டது.

குழந்தை சாரதா குமாரி சாரதாவாக மாறினாள். சோம்பல் நாட்களைத் தவிர, மற்ற நாட்களில் ஆசனங்கள் செய்து வந்தாள். 'சமூகத்தி விருந்து டி. பி. யை ஒழிக்கிறேன் பார்!' என்று டி. பி. யின் மேல் கோபமாக, பத்மாசனத்தில் அமர்ந்து அவள் விடாப் பிடியாகச் செய்து கொண்டு வந்த யோக சிகிச்சை பலனளித்து விட்டது. இரண்டாவது சித்திரத்தில் குழந்தையாய் டி. பி.யை வெல்ல உபயோகித்த முக்கிய ஆசனமான சர்வாங்காசனத்தைச் செய்து காட்டுகிறாள். தன் வெற்றி சரித்தை யார் நேரில் வந்து கேட்டாலும் அவள் சொல்லவும் தயாராக இருக்கிறாள். (தொடரும்)



குமாரி சாரதாவின் சர்வாங்காசனம்

# நாகநாடு சீறுகிறது

## சாந்தா ராமசாமி

அஸ்ஸாமைச் சேர்ந்த மலைப் பிரதேசத்தில் வசிக்கும் நாகர்களைப் பற்றிய செய்திகள் சென்ற பல மாதங்களாகத் தினமும் பெரிய தலைப்புகளுடன் பத்திரிகைகளில் வந்தவண்ணமாக இருக்கின்றன. சுதந்திரம் அடைந்த பின்பும் "நாங்கள் வேறு, நீங்கள் வேறு" என்ற மனப்பான்மையுடன் மக்கள் தேசத்தைப் பாஷாவாரியாகப் பிரித்துவிட வேண்டுமென்று வற்புறுத்தி வருகிறார்கள் அல்லவா? அது போலவே நாகர்களில் சிலர், "நாங்களும் எங்கள் கலாசாரமும் வேறு. எங்களுக்குத் தனிராஜ்யம் வேண்டும்" என்று கோரி, நாக நாட்டில் இடைவிடாது துவேஷப் பிரசாரம் செய்து பலாத்கார நடவடிக்கைகளிலும் ஈடுபட்டு வருகிறார்கள்.

இவர்கள் ஆயுதங்கள் ஏந்தி மக்களையும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களையும் ஈவிரக்கமின்றித் தாக்கியும், பலவிதமான கோரச் செயல்கள் புரிந்தும் வருகிறார்கள்.

சுமார் இரண்டரை வருடங்களுக்கு முன் அசின் மோக்ரி என்ற இடத்தில் நாகர்கள் ஐம்பது சர்க்கார் அதிகாரிகளையும் அவர்களுடைய ஆட்களையும் கொன்றதாகச் செய்தி வெளியானது ஞாபகமிருக்கலாம்.

இந்தப் புரட்சிக் கூட்டத்துக்கு பிஜோ என்பவர் தலைவராக விளங்குகிறார். இவர் அஸ்ஸாம் தலைநகரான ஷில்லாங்கைத் தாக்கத் திட்டமிட்டிருந்தாராம்! இவர் தமது விபரீத நோக்கம் நிறைவேற அயல் நாட்டு உதவியையும் நாடுவதாகத் தெரிகிறது.

நாகநாடு இந்தியாவின் எல்லைப்புற நாடு என்பதால் இதன் பாதுகாப்பு பற்றி இந்திய சர்க்கார் அதிக கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. எனவே இத்தகைய பெரிய பிரச்னையைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமல்லவா?

இந்தியாவின் வடகிழக்குப் பிரதேசத்தில் வாழும் அநேக மலை ஜாதியினரில் நாகர்களும் ஒரு பிரிவினர் ஆவர்.

நாகர்கள் என்று அவர்கள் பொதுவாக அழைக்கப்பட்டாலும் அவர்களுள் எட்டு வேறுபட்ட ஜாதியினர் அடங்கியுள்ளனர். முக்கியமாக, அஸ்ஸாமைச் சேர்ந்த நாகமலை ஜில்லாவில் உள்ள நாகர்கள்தான் தனி ராஜ்யம் வேண்டும் என்ற கிளர்ச்சிக்குக் காரணமாக இருந்து வருகிறார்கள்.

நாகர்கள் வெகு காலம் வரையில் காட்டுமிராண்டிகளாகவே வாழ்ந்து வந்தார்கள். சிறிதும் இரக்கமின்றி மனிதர்களைக் கொன்று தலைகளைச் சேர்த்து வைக்கும் கொடிய வழக்கம் அவர்களிடையே வெகு நாட்கள் வரை மறையவில்லை. இப்பொழுது அவர்கள் இம்மாதிரி பயங்கரமான செய்கைகளைக் கைவிட்டு விட்டார்கள். எனினும் உடை, வாழ்க்கை முதலியன சம்பந்தப்பட்டவரையில் நாகர்கள் அன்றிருந்த மேனிக்கு அழிவில்லாமல் இருந்து வருகின்றனர்!

நாகர்கள் மட்டுமல்ல, இன்னும் பல்வேறு பெயர் கொண்ட மலை ஜாதியினர் இப்பிராந்தியத்தில் வசிக்கின்றனர். அவர்கள் இலக்கியம், மொழி இவை பற்றி நன்கு அறிந்து கொள்வதற்கென்றே இந்திய சர்க்கார் சில அதிகாரிகளை நியமித்திருக்கிறார்கள். அவர்களுடன் நல்லுறவு ஏற்படுவதற்காகச் சர்க்கார் அவர்களுக்குப் பல வசதிகள் செய்து கொடுத்து வருகின்றனர். ஆனால், இவைகளை, நாகர்களில் ஒரு பகுதியினர் பயன் படுத்திக் கொள்ளாமல் மதியிழந்து வீண் கிளர்ச்சிகள் செய்து, கட்சி மனப்பான்மையையும் பலாத்கார வெறியையும் வளர்த்து வருகின்றனர்.



நாகப் பெண்மணி

* * *

இந்தியாவில் ஆங்கில அரசாட்சி நடந்து வந்த காலத்தில் எல்லைப்புறப் பகுதிகள் பற்றி அதிக் கவனம் செலுத்தப்படவில்லை. நாகர்களைப் போன்ற மலைவாசிகளுக்கு அப்போது எவ்வித சௌகரியங்களும் செய்து கொடுக்கவில்லை. அதன் பலனாக உலகம் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்தும் நாகர்கள் அன்றிருந்த நிலையிலேயே இருந்து வருகிறார்கள்.

ஜப்பானியர் நாகமலைகளின் வழியாக இந்தியாவின் மீது படையெடுத்த பொழுதுதான் இப்பகுதிகளைப் பற்றிய கவலை இந்திய சர்க்காருக்கு உண்டாயிற்று. பிறகு

திபெத்தில் சீன ஆட்சி ஏற்பட்ட போது சர்க்காரின் கவலை இன்னும் அதிகமாயிற்று. எனினும் இந்தியா சுதந்திரம் அடைந்து அரசியல் திட்டம் உருவான பிறகுதான், இவ்விடங்களில் சரியான சர்க்கார் ஆட்சி நிறுவப்பட்டு நாக மக்களுக்கும் இந்தியப் பிரஜா உரிமை முதலிய வசதிகள் அளிக்கப் பட்டன.

இந்திய அரசியல் திட்டத்தின் கீழ் ராஷ்டிரபதியின் பிரதிநிதியாக அஸ்ஸாம் கவர்னர் இப்பிராந்தியத்தின் நிர்வாகத்தைக் கவனித்து வந்தார். இப்பிராந்தியம் காமங், சுபான்ஸிரி, லோஹித், ஸியாங், திரப், ட்யூன்ஸாங் என்ற ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு அதிகாரி நியமிக்கப்பட்டிருக்கிறார். வெகு குறைந்த காலத்தில் இங்கு சர்க்கார் அதிகாரம் துரிதமாகப் பரவி யிருக்கிறது.

வெளி மனிதரை அறியாத சில மலை ஜாதியினருக்கு இந்த ஆட்சி பிரிட்டிஷ் ஆட்சியைப் போல் வெறுப்பைக் கொடுக்கலாம். ஆனால் அவர்கள் மனத்தில் ஏற்படும் வெறுப்பை அகற்றுவதே அங்கு நியமிக்கப்பட்டுள்ள அதிகாரிகளின் முக்கிய கடமையாக இருந்து வருகிறது.



“கூகி” என்னும் நாகர்கள் நடனம்

எளிதில் போக்குவரத்துக்கு வசதியாக ரஸ்தாக்கள் ஏற்படுத்தியும், வைத்திய வசதிகள் செய்து கொடுத்தும், பள்ளிக்கூடங்கள் நிறுவியும் நாகர்களின் மனத்தைச் சர்க்கார் மாற்றப் பெரு முயற்சி செய்து வருகிறார்கள். எனினும் சில புரட்சிக்காரர்களின் விபரீதச்செயல்களால் சர்க்கார் அந்த முயற்சியில் பூரண வெற்றி அடைய முடியவில்லை.

நாகர்களுடைய வாழ்க்கை முறையிலோ அல்லது பழக்க வழக்கங்களிலோ சர்க்கார் தலையிடச் சிறிதும் விரும்பவில்லை.

அவர்கள் காட்டுமிராண்டித் தனமான பழக்க வழக்கங்களைவிட்டு, சுதந்திர இந்தியப் பிரஜைகளாக வாழ வேண்டும் என்பதே சர்க்காரின் குறிக்கோளாக இருந்து வருகிறது.

1950-ம் ஆண்டு வரை அஸ்ஸாம் சர்க்காரே அப்பிராந்தியத்தில் நேரடியாக ஆட்சி செலுத்தி வந்தனர். அஸ்ஸாம் சர்க்காரின் கொள்கைகள் திருப்திகரமாக இல்லையென்று நாகர்களில் சிலர் கருதியதால், அதிகார வர்க்கத்துக்கும் குடி ஜனங்களுக்கும் இடையில் நல்லுறவு மிகவும் அத்தியாவசியம் என்பதை மத்திய சர்க்கார் உணர்ந்தனர்; நாகர் பகுதியான ட்யூன்ஸாங்கில் மேஜர் காதிங் என்பவரைத் தங்கள் பிரதிநிதியாக நியமித்தனர். இவர் அஸ்ஸாம் சர்க்கார் படையில் இருந்தவர் என்பது மட்டுமின்றி, நாகர் சமூகத்தைச் சேர்ந்தவர். இதுபோல் நாக ஜாதியினரையே அங்கு மேல் அதிகாரிகளாக நியமித்தால் நாகர்களிடையே தாங்களும் இந்தியக் குடிமக்களே என்ற மனப்பான்மை வளர இடம் உண்டாகும்.

மத்திய சர்க்கார் அப் பிராந்தியங்களின் அரசியல் நிர்வாகத்தை அஸ்ஸாம் சர்க்காரிடமிருந்து மாற்றித் தாங்கள் ஏற்றுக் கொண்டனர். அதன் பலனாக அங்கு ஒருவாறு அமைதியும் நிலை நாட்டப் பட்டிருக்கிறது. அஸ்ஸாமில் உள்ள நாகர்கள்தான் சுதந்திரம் வேண்டுமென்று புரட்சி செய்கிறார்கள். அவர்கள் பிரசாரம் மற்ற மலை ஜாதியினரைப் பாதிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்; நாகர்களின் நீதியற்ற கிளர்ச்சியை அடக்கித் தீரவேண்டிய பொறுப்பு இந்திய சர்க்காரைச் சார்ந்திருக்கிறது.

பிரிட்டிஷ் ஆட்சியைப் போல் இதுவும் அன்னிய ஆட்சி என்ற தவறான எண்ணம் நாகர்களிடையே வேரூன்றி யிருப்பதே, அவர்களின் எதிர்ப்புக்குக் காரணம் எனலாம். அந்த எண்ணத்தை மாற்றி, அவர்கள் மனத்தில் தேசபக்தி ஏற்படும்படி செய்ய வேண்டும். ஒரு புறம் கடுமையான முறைகளைக் கையாளும் சர்க்கார் மற்றொரு புறம் அன்பு வழியையும் பின்பற்ற வேண்டும்.

இடைவிடாத பெரும் தலைவலியாக இருந்து வரும் நாகர் பிரச்னையைச் சர்க்கார் சுமுகமாகத் தீர்ப்பார்களாயின், சுதந்திர இந்திய சர்க்காரின் மாபெரும் வெற்றிகளில் அதுவும் ஒன்றாகத் திகழும் என்பது நிச்சயம்.




மாணவர்களின் கொட்டாவி களுக்கும் குறட்டைக்கும் நடுவே வாத்தியார் வாஞ்சியின் இராப் பள்ளிக்கூடம் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. இதற்கிடையில் கோபுவின் கண்கள் எதிர் வரிசையில் உட்கார்ந்திருந்த ரங்கம்மாவிடம் போவதும் பிறகு அவன் முன்இருந்த புத்தகத்துக்குத் திரும்புவதுமாக இருந்ததைக் கண்ட வாத்தியார் அவனிடம் எப்படி அதைச் சொல்வதென்று தெரியாமல் விழித்தார். அத்தனை பேர் எதிரிலேயும் 'ரங்கம்மாவைப் பார்க்காதே' என்று சொல்ல முடியுமா? கொஞ்ச நேரம் யோசித்து விட்டுக் கடைசியில், "கோபு! என்ன தூக்கம் வருகிறதா? புத்தகத்தைப் பார்க்கவே மாட்டேன் என்கிறாயே!" என்றார் மெதுவாக.

கோபு ஒரு அசட்டுச் சிரிப்புடன் தலையைக் குனிந்து கொண்டான். ஒரு நீண்ட பெருமூச்சு அவனையும் அறியாமல் வெளிப் பட்டது.

'பாவம், கோபு எட்டாக் கனிக்காக ஏங்குகிறான்' என்று அவனுக்காகப் பச்சாத்தாபப்பட்டது வாத்தியாரின் மனம். "கல்வி என்று சொன்னால் என்ன அர்த்தம்? ரங்கம்மா, நீ சொல்லு, பார்க்கலாம்!" என்று கேட்டதும் திடுக்கிட்டு நிமிர்ந்து நோக்கினாள் ரங்கம்மா. அவள் கவனம் பாடத்திலேயே இல்லை என்பது அவருக்குத் தெரிந்து விட்டது.

"கல்வி என்று சொன்னால் அர்த்தம் என்ன?" என்று கேட்டார் மறுபடியும்.

"அர்த்தமா?"

"ஆமாம், என்ன அர்த்தம் என்று தான் கேட்கிறேன்."

"அது என்னமோ? நானா கண்டேன்?" என்று அவள் தன்னுடைய வழக்கமான பதிலைத் தந்தாள்.

"பார்த்தாயா, இதுமாதிரி சொல்லக் கூடாதென்று எவ்வளவு தடவை சொல்லியிருக்கிறேன்?" என்று சொல்லி விட்டு, வாத்தியார் விளக்கிச் சொல்ல ஆரம்பித்தார். ரங்கம்மா திரும்பவும் அவர் சொல்வதைக் கவனிக்கவேயில்லை என்பதைக் கீழே வயித்த அவளது ஆழ்ந்த பார்வை அறிவித்தது. அதற்கு மேலே சொல்வதற்கு அவருக்குச் சலித்துப் போய் விட்டது.

"சரி! இன்று பாடம் போதும். நாளைக்கு இதே பாடத்தை நன்றாகப் படித்துக் கொண்டு வாருங்கள்" என்று கூறினார் வாத்தியார்.

அவரது மாணவர்கள்—அறுபது வயது மாரிசாமியிலிருந்து பதினெட்டு வயது சாம்பன் வரை—கொட்டாவி விட்டுக் கொண்டே மெள்ள எழுந்து போய் விட்டார்கள். வாத்தியார் பாயைத் தட்டி உதறி விட்டு அதைக் கயிற்றுக் கட்டிலின் மேல் விரிக்கப் போனவர் ஏதோ சத்தத்தைக் கேட்டுத் திரும்பினார். கதவின் முன் தயங்கியவண்ணம் நின்றாள் ரங்கம்மா.

"அடடே, ரங்கமா! வாம்மா, என்ன சமாசாரம்? ஓகோ, கடிதாசி வந்ததா? அதுதான் இன்றைக்குப் பாடத்திலேயே கவனமில்லை!" என்று சொல்லி விட்டுச் சிரித்தார் வாத்தியார் வாஞ்சி. நாணிக் கோணிக் கொண்டே முகத்தைத் திருப்பிக் கொண்டாள் ரங்கம்மா.

"சரி, கொண்டா, படிக்கிறேன்" என்றார் அவர்.

அவள் தன் மடியிலிருந்து ஒரு கவரை எடுத்து அதி அக்கறையாய் அதிலிருந்த கடிதத்தை அவரிடம் கொடுத்து விட்டுக் கீழே உட்கார்ந்தாள்.

"நீ மட்டும் இன்னும் கொஞ்சம் அக்கறையோடே படித்தால், கந்தன் எழுதுகிற கடிதாசியையெல்லாம் நீயே படிக்கலாமல்லவா? இப்படித் தினம் என்னிடம் ஓடிவர வேண்டியிருக்காது."

"இனிமேல் கவனமா படிக்கிறேன் ஐயா, அந்தக் கடிதாசியிலே..." என்று அவள் மெதுவாக இழுத்தாள்.

"உம், உம், ஏன் அவசரப்படறே? என்ன எழுதி யிருக்கப் போகிறான் அவன்? திரும்பவும் திரும்பவும் 'நான் உன்னையே நினைத்துக் கொண்டிருக்கிறேன். நீ என்னையே நினைத்துக் கொண்டிருன்னுதானே சொல்லப் போகிறான். இது அவன் கடிதாசியில்

எழுதினால்தான் தெரியுமா?'' என்று கேலி செய்தார் வாஞ்சி. கந்தன் என்ன எழுதியிருக்கிறான் என்று அறிய அவளது மனம் துடிதுடித்துக் கொண்டிருந்ததென்று அவருக்கா தெரியாது?

எவ்வளவு ஆவலானபோதிலும் ரங்கம்மாவுக்கு வெட்கமாக வேறு இருந்தது. அவள் ஒன்றும் சொல்லவில்லை.

'' ஆறு மாசமா உனக்கு அவன் எழுதுகிற அழகு கடிதாசியை யெல்லாம் வாசிக்கிறேனே, எனக்கு என்ன தருவாய் நீ?'' என்று மேலும் விடாது கேட்டார் வாத்தியார்.

'' ஐயா! ஐயா! நேரம் ஆயிடுத்து. ஆயா என்னைக் காணாட்டி, கூப்பாடு போட்டு ஊரைக் கூட்டிடும்'' என்று கெஞ்சினாள் அவள்.

'' கூட்டட்டுமே, எனக்கென்ன?.... ஐயோ பாவம், நான் இப்போ படிக்கா விட்டால் மனம் முறிந்து உட்கார்ந்து விடுவாய் போலிருக்கே!'' என்று சொல்லி விட்டு, குறும்புத்தனமாகச் சிரித்துக் கொண்டே அந்தக் கடிதத்தை மெதுவாகப் பிரித்தார்.

''என் அன்ன்ன்..புள்..ள ரங்கத்துக்கு'' என்று ருசித்தும் அபிநயத்தோடும் படிக்க ஆரம்பித்தவர், ' ஐயய்யோ '' என்று கத்தி விட்டார்.

'' ஐயோ, என்ன சார், என்ன எழுதியிருக்கிறாரு?'' என்று பதறிப் போய்க் கேட்டாள் ரங்கம்மா.

அவளை வெறித்துப் பார்த்துக் கொண்டே, '' ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை, பயப்படாதே, வந்து, வந்து...'' என்று மென்று விழுங்கினார்.

''ஐயோ! சீக்கிரம் சொல்லுங்க!''

'' ஒன்றுமில்லையம்மா, உனக்கு ஒன்றுமில்லை. அவன் ஒரு சேதி எழுதியிருக்கான்; லங்கையிலே ஒரு பெரிய மனிதர் செத்துப்போய்விட்டாராம். அதனாலே அவனுக்குச் சீக்கிரத்திலே இந்தியாவுக்கு வர முடியாதாம்!'' என்று சொல்லி விட்டு அவளை நோக்கினார்.

'' இதுக்காகவா ஐயா இப்படிக் கூச்சல் போட்டீங்க,, எனக்கு உயிரே போயிட்டதே!'' என்று அந்த அப்பாவிப் பெண் முறையிட்டாள்.

'' அந்தப் பெரிய மனிதர் ரொம்ப நல்லவர் ரங்கம்மா. எனக்கு அவரிடம் விசேஷமான பிரியம் உண்டு. அதனால்தான் அப்படி வருத்தப்பட்டேன். அது சரி, நேரமாகி விட்டது. நீ போகவில்லையா?'' என்று கேட்டார் வாஞ்சி.

'' நீங்க கடிதாசியை எனக்கு முழுசும் வாசிச்சுக் காண்பிக்கவில்லையே'' என்றாள் அவள் ஆவலோடு.

''நாளைக்கு நிச்சயம் படிக்கிறேன் ரங்கம்மா. எனக்கு ஒரே தலைவலி. இந்தக் கடிதம் இங்கேயே இருக்கட்டும்'' என்று அவர் சொன்னதும் தயங்கிக்கொண்டே அரை மனத்துடன் எழுந்து அங்கிருந்து போனாள் ரங்கம்மா.

* * *

அடுத்த நாள் மாலை கோயிலுக்குப் போய்விட்டு வீட்டை நோக்கித் திரும்பிக்கொண்டிருந்த வாத்தியார் வாஞ்சி, ''வாத்தியார் ஐயா!'' என்று யாரோ கத்தினது கேட்டுத் திரும்பினார். இரைக்க இரைக்க ஓடிவந்த ரங்கம்மா, ''ஐயா! இப்போ அந்தக் கடிதாசியைப் படித்துக் காண்பிக்கிறீங்களா?'' என்று மகிழ்ச்சி பொங்கும் கண்களுடன் அவரைக் கேட்டாள்.

எத்தனை மணிநேரம் அவரைக் காணத் தவம் கிடந்தாளோ, அவளைப் படைத்தவனுக்குத் தான் வெளிச்சம்.

அவரது முகத்தில் கவலை படர்ந்தது. ஒரு நிமிஷம் அவளைப் பார்த்த வண்ணம் எதையோ நினைத்துக் கொண்டு நின்ற அவர், பிறகு மெதுவாக, '' ரங்கம்! கொஞ்சம் இந்த மரத்தடிக்கு வா, சொல்கிறேன்'' என்றார். மரத்தடியில்



"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்" என்ற மகாகவி பாரதியாரின் வாக்கை நிறைவேற்ற இதோ அறுபது தமிழ் உபாத்தியாயர்கள் புறப்படத்தயாராக இருக்கிறார்கள். மலாயா, சிங்கப்பூர் மாகாண இந்தியப் பாடசாலைகளில் தொண்டாற்றி வரும் இந்த ஆசிரியர்கள் தென் இந்தியாவிலும், இலங்கையிலும் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறார்கள். வரும் டிஸம்பர் மாதக் கடைசியில் புறப்பட விருக்கும் இந்தப் பிரயாணக் குழுவுக்குத் திரு டி. எஸ். பாலசுந்தரம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். தென் இந்திய, இலங்கைச் சுற்றுப் பிரயாணத்தில் கலந்து கொள்ளப் போகும் தமிழ் ஆசிரியர்களை மேலே படத்தில் காணலாம்.

---

வந்ததும் அங்கிருந்த கல்லின்மேல் உட்கார்ந்தார். அவளையும் தரையில் உட்காரச் சொன்னார்.

"என்ன பாடம் சொல்லித்தரப் போறீங்க எனக்கு? 'கந்தனை மறந்துவிடு' என்று முன்னெல்லாம் எனக்குத்தினமும் பாடம் கற்றுத் தருவீங்களே, அதையா இப்பவும் சொல்லப்போறீங்க?" என்று புன்னகையுடன் கேட்டாள் அவள்.

அவள் பேச்சையே கேட்காமல் கீழே குனிந்து ஆழ்ந்து யோசித்தவாறு உட்கார்ந்திருந்த வாத்தியார் கடைசியில் நிமிர்ந்து அவளைப் பார்த்தார். பிறகு மெள்ள, "ரங்கம்மா, நேற்று கந்தன் கடுதாசியில் எழுதி யிருக்கிறான்னு சொன்னேன் பாரு ஒரு சேதி, அது பொய்" என்றார்.

"என்ன ஐயா, எதுக்கு அப்படிப் பொய் சொல்லி..."

"இரு, இரு. அவன் எழுதியிருந்த சமாசாரம் ரொம்ப வருத்தமானது. அதை உனக்கு அப்போதே சொல்லி யிருந்தால் நீ அழுதிருப்பாய். நீ வீட்டுக்குப் போனால் உன் ஆயாவின் மனசும் புண்பட்டிருக்கும். அதுதான் சொல்ல வில்லை...இரு, அதைத்தான் சொல்ல வரேன். இந்தக் கந்தன் யோக்கியன் இல்லை யென்று முன்பே உனக்கு நான் சொல்ல வில்லையா? பார்த்தாயா, இப்போ நீ எதற்கு அழுகிறாய்?"

"ஐயா! நீங்க ஏன் விசயத்தைச் சொல்லாமல் என்னைத் தவிக்கவிடறீங்க?" என்று அவள் விம்மினாள்.

"சொல்கிறேனம்மா. அவன் வேலை செய்கிற தோட்டத்திலே லக்ஷ்மி என்று ஒரு பெண் இருக்கிறாளாம். அவளைக் கல்யாணம் செய்துக்கிறயான்னு, அவள் அப்பாவே அவனிடம் கேட்டாராம். அதனாலே 'உனக்கு வேறே யாரையாவது இஷ்டமிருக்கிறதானால் நீ அவளைக் கல்யாணம் செய்துக்கலாம், என்னைப் பற்றி வருத்தப்பட வேண்டாம்' என்று எழுதி யிருந்தான்."

அவர் எதிர்பார்த்தபடி ரங்கம் கூக்குரலிடவில்லை. சந்தோஷமாய்ச் சிரித்துக் கொண்டே, "அவருக்கு எப்போதுமே நான் வேறே யாரையாவது கல்யாணம் செய்து விடுவேன்னு பயம். நீங்க எழுதி விடுங்க ஐயா, அவருக்கு, இந்த மாதிரி பேச்சு ஒண்ணும் இனிமே பேச வேண்டாம், எனக்குக் கோபம் வருமின்னு" என்றாள் அவள்.

"அவன் குணம் உனக்குத் தெரிய வில்லை. வெளுத்ததெல்லாம் பால் என்று நினைத்துக் கொண்டிரு. மெள்ள உன்னிடமிருந்து தப்பிக்கப் பார்க்கிறான் அயோக்கியன். அந்த லக்ஷ்மி என்ன ஓசத்தியோ?"—வாத்தியாருக்கு ஆத்திரம் தாங்க வில்லை.

அவளோ, "அப்படிச் சொல்லாதீங்க. அவரு என்னைத் தவிர வேறே யாரையும் நினைக்க மாட்டார். அவர் குணம் எனக்கு நல்லாத் தெரியும். என்னைப் பற்றித் தான் அவருக்கு எப்போதும் சந்தேகம். எனக்கு அவரை இஷ்டமில்லேன்னு பயம், வேறே ஒண்ணும் இல்லை" என்று குழைந்து கொண்டே 'அவரது' கல்யாண குணங்களைப் பற்றியெல்லாம் சொல்லி மகிழ்ந்தாள்.

"எனக்கென்ன, நீ சொல்கிறப்பலே எழுதறேன்" என்று சொல்லி விட்டு எழுந்தார் வாஞ்சி. ரங்கம்மா குலுக்கி மினுக்கிக் கொண்டு தன் வீட்டை நோக்கி ஓடினாள்.

அவள் போவதையே பார்த்துக் கொண்டு நின்றிருந்த வாத்தியாரின்

இதயத்தை ஒரு நீண்ட பெருமூச்சு பிளந்தது. அவரது முகத்தில் வேதனையின் சாயை படர்ந்தது.

* * *

அடுத்த வாரமே ரங்கம்மாவுக்குக் கந்தனிடமிருந்து பதில் வந்து விட்டது. லக்ஷ்மியைப் பற்றி ஒரு பக்கம் வர்ணித்து எழுதியிருந்தான். அந்தக் கடிதத்தை ரங்கம்மாவுக்குப் படித்துக் காண்பித்த வாத்தியாருக்குக் கோபம் தாங்கவில்லை.

''அவளுக்கும் அவள் தகப்பனுக்கும் அவனிடம் நல்ல மதிப்பாம்—தடியன்—அவனுக்கு எப்படியாவது தன் பெண்ணைக் கல்யாணம் செய்ய வேண்டும் என்று அவள் தகப்பனுக்கு ஆசையாம்—மடையன்—'ரங்கம்மா! என்னை மறந்து விடு. நான் லக்ஷ்மியின் தகப்பனிடம் சரி என்று சொல்லிவிடப் போகிறேன்'—அயோக்கியன், ராஸ்கல் !''— அவ்வளவு கோபத்திலும் வாத்தியாரின் கண்களில் கண்ணீர் தேங்கி நின்றது.

ரங்கம் விம்மி விம்மி அழுதாள். அழுது ஓய்ந்ததும் வாத்தியாரைத் திரும்பவும் ஒரு கடிதம் எழுத வைத்தாள். அவனைக் கெஞ்சாதவண்ணம் கெஞ்சினாள். 'அவனில்லாமல் தன்னால் உயிர் வாழமுடியாது. தன் வாழ்க்கையே வீணாகி விடும்' என்றெல்லாம் மிகவும் பரிதாபமாயிருந்தது, அந்தக் கடிதம். போன தடவை போல் இந்தத் தடவையும் வாத்தியார் தபாலுக்குப் பணம் வாங்க ஒரேயடியாக மறுத்து விட்டார்.

''அவன் எங்கே இதற்கெல்லாம் மசியப்போகிறான் ? இலங்கை யென்ன உன் வீட்டுக்குப் பின்னாலேயாயிருக்கு. உன்னிடம் அவன் பயப்பட ?'' என்று அவர் சொன்னார். ஆனால் அவள், ''அப்படிச் சொல்லாதீங்க ஐயா, அவர் குணம் உங்களுக்குத் தெரியாது. யார் செய்த வினையோ, இப்படி மாறிவிட்டார்'' என்று கதறினாள் அவள்.

அடுத்த வாரம் வந்த கடிதமும் இதே போல இருந்ததோடல்லாமல், ரங்கத்தைத் திட்டி வேறு எழுதியிருந்தான் கந்தன். 'ரங்கம்மாளின் கடிதத்தைக் கண்டு தான் மயங்கப் போவதில்லை. அதனால் ரங்கம்மா இனிமேல் கடிதம் எழுதவேண்டாம்' என்றெல்லாம் எழுதியிருந்தான். ரங்கம் அழுது அழுது உருகினாள்.

''வீணாக ஏன் அழுகிறாய்? போகிறான் கழுதை! உன்னை முன்னேயே கட்டிக்க ஆசைப்பட்ட கோபுவை விட்டு விட்டு வெளியூரிலிருந்து வந்த அவனைப் பார்த்து மயங்கினாயே. பாவம், கோபு எவ்வளவு நல்ல பையன்! உன்னை எவ்வளவு சந்தோஷமாக வைத்துக் கொள்வான்?'' விம்மி விம்மி அழுது கொண்டிருந்த ரங்கத்தின் காதுகளில் இதெல்லாம் விழவேயில்லை. ஆனால் திரும்பவும் கந்தனுக்குக் கடிதம் எழுதச் சொல்லி வாத்தியாரை அவள் தொந்தரவு செய்யவில்லை.

கொஞ்ச நாட்கள் கழித்துத் திரும்பவும் கந்தனிட மிருந்து ஒரு கடிதம் வந்தது. அவனுக்கும் லக்ஷ்மிக்கும் நடக்கப் போகும் கல்யாணத்தின் அழைப்பிதழை அனுப்பினதுடன், அவளைக் கல்யாணத்துக்கு வரவேண்டுமென்று வேறு அழைத்திருந்தான். இதை அவளுக்குப் படித்துக் காண்பித்த வாத்தியார், ''அடாடா, என்ன நல்ல குணம் இவனுக்கு. இவனை நினைத்து உருகுகிறாயே, நீதான் கெட்டிக்காரி''

○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱

பாரதி வாக்கு:

ஐயோ! என்ன உலகமடா, இந்த மண்ணுலகம்! ஓழியாத ஏமாற்று, ஒழியாத வஞ்சனை, ஒழியாத கவலை. ஸாரமில்லை, ஸத்துக் கிடையாது. உள்ளுறப் பூச்சி அரித்துக் குழலாயிருக்கும் வாழ்க்கை. ஒவ்வொருவனும் மற்றவன்மீது பழி கூறுகின்றான். ஒவ்வொருவனும் தன்னிஷ்டப்படி விட்டு விட்டால் எல்லாம் நேராக நடக்கும் என்ற நம்பிக்கையுடனேதான் இருக்கிறான். ஆனால், ''நான் ஒருவன் சரியாக இருந்தால் போதுமா? மற்றவர்களை நம்புவதற்கு இடமில்லையே!'' என்று நினைக்கிறான். பிறரை நம்புவதற்கிடமில்லை யென்றெண்ணி ஏமாற்றுகிறான். ஐயோ, மூடா! நீ ஏமாற்றுவதனால், முன்னைக் காட்டிலும் பரஸ்பர நம்பிக்கை அதிகரித்து விடுமென்று நினைக்கிறாய்? மனித ஜாதிக்குத் தீராத நோய் ஒன்று பிடித்திருக்கிறது. இறங்காத விஷம். இதன் பெயர் **பணம்.**

இப்பெயருக்கு வணங்கும்படி அவனைத் தூண்டிவிடுவது **விருப்பம்.** அதாவது ருசி நீங்கிய விருப்பம்; அறிவற்ற விருப்பம். ருசி ஸஹிதமான விருப்பமுடையோர் கந்தர்வர்கள். அறிவு ஸத்யலோகக் கருவி.

✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○

# 1956
# PLYMOUTH
## *with Aerodynamic styling*

The 1956 Plymouth has the advanced FORWARD LOOK. It's a better-looking car with many new performance features.

Here are its most important features:

- ★ New 12-volt electrical system gives quicker, easier starting, longer spark plug life, plenty of current
- ★ Independent hand brake provides real emergency brake function
- ★ Maximum vision with new horizon windshield wrapped around top and bottom
- ★ Safety-rim wheels, tubeless tyres and many other features
- ★ New safety door latch for passenger protection
- ★ Redesigned sealed beam headlights extend zone of lighting on left side by 80 feet

**More Economical Performance** *The 6-cylinder engine is dependable and economical. You will like its new pep with increased horsepower.*







New High-Sweep rear fenders contribute to impression of motion and speed

*Progressively Manufactured by:*

**THE PREMIER AUTOMOBILES LTD**

KURLA, BOMBAY

**DEALERS**

Messrs SUNDARAM MOTORS PRIVATE LIMITED
MOUNT ROAD, MADRAS

Messrs T. V. SUNDARAM IYENGAR & SONS PRIVATE LIMITED
WEST VELI STREET, MADURAI

**பாரதி வாக்கு**

பக்தியும் கல்வியும் ஒருவாறு இயைந்த பொருள்கள் என்பதை விளக்குவதற்குக் கிறிஸ்தவ பாதிரிமார்களை உதாரணமாகக் கூறலாம். அவர்கள் மதத்தை விருத்தி செய்வதற்காக வந்திருந்த போதிலும், பல இடங்களில் பெரிய பெரிய பாடசாலைகளை ஏற்படுத்திக் கல்வி அபிவிருத்தி செய்கிறார்கள். ஆதலால் நம்முடைய ஆலயங்களில் மிகுந்த பணத்தை வீண் செலவு செய்யாமல் கல்விக்காக உபயோகப் படுத்தினால் மக்களுக்குச் செய்த மகத்தான சேவையாகும்.

என்று ஆத்திரத்துடன் கூறி அந்தக் கடிதத்தைக் கிழித்தெறிந்தார்.

''பின்னே நான் என்ன செய்யட்டும் ஐயா?'' என்று விரக்தியுடன் கேட்டாள் ரங்கம்.

''கோபு இருக்கான்'' என்று மிகச் சுருக்கமாகப் பதிலளித்தார் அவர்.

அவள் கீழே குனிந்தாள்.

''நானும் இந்த ராத்திரிப் பள்ளிக்கூடம் வைத்தது முதல் பார்க்கிறேன், தினமும் நீ கந்தனை நினைத்து உருகுகிறதும், கோபு உன்னைப் பார்த்துப் பெருமூச்சு விடுவதும்! இவ்வளவு நாள் பள்ளிக்கூடம் வந்தீர்களே, உனக்கும் கோபுவுக்கும் ஒரு எழுத்து வந்திருக்குமா? உனக்கு வரும் கடுதாசியை யெல்லாம் படித்துக் காண்பிக்கிறேனே என்று என் பேச்சைத் தட்டமுடியாமல் நீ தினமும் பள்ளிக்கூடத்துக்கு வருகிறாய். நீ பள்ளிக்கூடத்துக்கு வருவாய் என்று தெரிந்ததும் கோபு தானும் வந்து சேர்ந்தான். நல்ல நாடகம். நான் சொல்கிறேன் கேள் ரங்கம்.....''

''நீங்க சொல்ல வேண்டாம் ஐயா! நானே யோசிச்சுவிட்டேன். ஆனால்...''

''என்னிடம் பாடம் படித்து உனக்கும் புத்தி வந்து விட்டது, ரங்கம்'' என்று சந்தோஷத்துடன் ஆர்ப்பரித்தார் வாத்தியார் வாஞ்சி. வாசலில் யாரோ கனைத்த சத்தம் இருவரையும் திடுக்கிட வைத்தது. புன்சிரிப்புடன் கோபுவின் சாந்தமான முகம் உள்ளே எட்டிப் பார்த்தது.

''சரியான சமயத்தில் வந்தாய். வா மாப்பிள்ளை'' என்றார் வாத்தியார்.

''நமஸ்காரம் ஐயா! இனிமே நீங்க சொல்லித் தருவதை நன்றாகக் கேட்டுக்கிறேன்'' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே கோபு உள்ளே வந்தான்.

''உம், நான் சொன்னதை யெல்லாம் நீ ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாயல்லவா?'' என்றார் வாத்தியார்.

''நீங்க ரங்கத்துக்கு எங்களைவிட அதிகமா சொல்லித்தரீங்கன்னு நினைச்சு நானும் பாடத்தைக் கேட்கலாமின்னு கொஞ்சம்வெளியிலிருந்துகேட்டேன்.''

''ஆமாம், தினம் இரண்டு மணிநேரம் நான் தொண்டை வறண்டு கத்தும் போது தூங்கி வழிந்தாய். இப்போ உனக்குப் பெரிய அக்கறை வந்து விட்டதாக்கும் பாடத்தில்?''

''நிசம்மா ஐயா, இப்போ ரங்கத்துக்கு நீங்க சொல்லித் தந்தீங்க பாருங்க, அதைப்போல உபயோகமான பாடம் இதுவரையில் நீங்க சொல்லித் தரவேயில்லை'' என்றான் கோபு இலேசாக நகைத்துக் கொண்டே.

நாணிக் கோணிக்கொண்டு ரங்கம்மா வீட்டுக்குப் புறப்பட்டாள். 'துணை'க்காகத் தானும் அவளுடன் பின் தொடர்ந்து போனான் கோபு.

**வா**சற்கதவின் முன் நின்று வாத்தியார் அவர்கள் போகும் வரையில் பார்த்திருந்தவர், திரும்பி வந்து தமது டிரங்குப் பெட்டியிலிருந்து சின்ன கற்றைக் கடிதங்களை எடுத்தார். ரங்கம்மாவின் விலாசமெழுதியிருந்த அந்தக் கடிதங்களின் உறையில் அந்தக் கிராமத்தின் தபாலாபீஸின் முத்திரையே இரண்டு தடவைகள் போட்டிருந்தது. இதை யெல்லாமா பட்டிக் காட்டுப் பெண் ரங்கம்மா பார்ப்பாள்?

ஆனால் ஒரே ஒரு கடிதத்தின் உறையில் மட்டும் இலங்கையில் களுவாஞ்சிக்குடி என்னும் கிராமத்தின் முத்திரை இருந்தது. அந்தக் கடிதத்தை எடுத்து மீண்டும் ஒருமுறை வாசித்தார் அவர்.

''ரங்கம்மாவுக்கு,

'என் சிநேகிதன் கந்தன் ஒருவாரமாகக் கடுங் காய்ச்சலாகக் கிடந்து நேற்று அதிகமாகி இறந்து விட்டான் என்று வருத்தத்துடன் தெரிவிக்கிறேன். அவன் இறக்குமுன் என்னிடம் உனக்கு இதைப்பற்றி எழுதும்படி சொன்னான். ஒரு வாரமாக உன்னுடைய பெயரையே அவன் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான்.

உங்களுக்கு என் மனமார்ந்த அனுதாபம்.

இப்படிக்கு
ஆறுமுகம்''

கலங்கிய கண்களுடன் இதைப் படித்து விட்டு, 'கந்தா! நீ என்னை மன்னிக்கணும்' என்று வாய்விட்டுச் சொல்லிக் கொண்டே, ஒரு நெருப்புக் குச்சியைக் கிழித்து அந்தக் கடிதத்தைக் கொளுத்தினார் வாத்தியார் வாஞ்சி.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

